# 1. விழாவறை காதை

சோழநாட்டைத் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்பவன் ஆட்சி புரிந்துவரும் நாளில், அகத்தியன் ஒருநாள் அவனிடம் வந்து, "இக் காவிரிப்பூம் பட்டினம் மிக்க சீரும் சிறப்பும் எய்துவது வேண்டி, வானவர் தலைவனுக்கு விழா அயர்க" என்று தெரிவித்தான். அதற்கிசைந்த சோழன், இந்திரனை வணங்கி, "யான் அயரவிருக்கும் இந்திரவிழா இருபத்தெட்டு நாள் நிகழும்; அக்கால முழுவதும் நீ வானவர் சூழ என் நகர்க்கண் வந்திருத்தல் வேண்டும்" என வேண்டினன். இந்திரனும் அவ்வண்ணமே வந்திருந்தான். அதுமுதல் ஆண்டு தோறும் அவ்விழாக் காவிரிப்பூம்பட்டினத்தே நடந்து வந்தது.

தமிழ்நாட்டின் முப்பகுதிகளுள் சேரநாட்டைச் செங்குட்டுவனும், பாண்டிய நாட்டை வெற்றிவேற் செழியனும் ஆட்சி புரிந்துவர, இச் சோழ நாட்டை நெடுமுடிக்கிள்ளி என்பான் ஆண்டுவந்தான். இவன் சேரன் செங்குட்டுவனுக்கு மைத்துனன். அதனால், இவனை அவன் "மைத்துனவளவன் கிள்ளி" என்று கருதினான்.

இக்காலத்தே, கோவலன் மதுரையில் கொலையுண்ட நிகழ்ச்சிக்குப்பின், காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த [1]சமயக்கணக்கரும், [2]அமயக்கணக்கரும், பல்வேறு மொழி வழங்கும் வணிகர்களும், [3]ஐம்பெருங் குழுவும், [4]எண்பேராயமும் ஒருங்குகூடி, "இவ் யாண்டில், நாம் இந்திரவிழா செய்யாவிடின், முசுகுந்தன் என்னும் சோழ மன்ன

1. சமயக்கணக்கர் - சமயநூற் புலவர்.

2. அமயக்கணக்கர் - காலநிலை யுரைக்கும் சோதிடர்.

3 ஐம்பெருங் குழு-அமைச்சர், புரோகிதர், சேனைபதியர், தூதுவர், சாரணர்.

4. எண் பேராயம்-கரணத்தார், கருமகாரர், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தருட் சிறந்தார், படைத்தலைவர், யானைப்படைத் தலைவர், குதிரைப்படைத் தலைவர்.

னுக்குத் துணைசெய்த பூதம் நமக்கு இடும்பை செய்யும்; சதுக்கப் பூதமும் நகரைவிட்டு நீங்கிவிடும்; ஆதலால், இந்திரவிழா கால்கொள்ளல் வேண்டும்" என முடிபு செய்து, முரசறையும் குடியிற் பிறந்த வள்ளுவன் ஒருவனை அழைத்து, "நகர மக்கட்கு இந்திரவிழா நடக்கும் தினத்தைத் தெரிவிக்க" என்றனர்.

அதுகேட்ட வள்ளுவன் வச்சிரக்கோட்டம் சென்று, அங்கே இருந்த முரசத்தை யானையின் கழுத்தில் ஏற்றி, "திருவிழையும் இப் பெருமூதூர் வாழ்க; நாட்டில் பசியும் பிணியும் பகையும் இல்லையாகுக; [1]வசியும் வளமும் சுரக்க" என்று வாழ்த்தி, பின்பு,

"வானம் மும்மாரி பொழிக; மன்னவன்
கோள்நிலை [2]திரியாக் கோலோன் ஆகுக;
[3]தீவகச் சாந்தி செய்தரும் நல்நாள்,
ஆயிரங் கண்ணோன் தன்னோடு, ஆங்குள
[4]நால்வேறு தேவரும், நலத்தகு சிறப்பின்
[5]பால்வேறு தேவரும் இப்பதிப் படர்ந்து,
மன்னன் கரிகால் வளவன் நீங்கியநாள்,
இந்நகர் போல்வதோர் இயல்பின தாகிப்
[6]பொன்நகர் வறிதாப் போதுவர் என்பது,
[7]தொல்நிலை யுணர்ந்தோர் துணிபொருள்; ஆதலின்
[8]தோரண வீதியும், [9]தோமறு கோட்டியும்,

---

1. வசி - மழை. 2. திரியா - திரியாமைக் கேதுவாகிய.

3. தீவகச் சாந்தி - இத் தீவகத்தின் நலத்துக்காகச் செய்யப்படும் விழா; என்றது, இந்திரவிழா.

4. நால்வேறு தேவர் - வசுக்கள், திவாகரர், உருத்திரர், மருத்துவர்.

5. பால்வேறு தேவர் - பதினெண் வகைப்பட்ட கணங்கள்.

6. பொன் நகர் - இந்திரனது தலைநகராகிய அமராவதி.

7. தொல்நிலை யுணர்ந்தோர் - இவ் விழாவின் பண்டைய நிலைமையை உணர்ந்த அறிஞர்.

8. தோரண வீதி - பெருவாயில் வீதி.

9. தோமறு கோட்டி - குற்றமற்ற கோயில் வாயில்.

பூரண கும்பமும், பொலம் பாலிகைகளும்,
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின் ;
காய்க்குலைக் [1]கமுகும், வாழையும் வஞ்சியும்,
பூக்கொடி வல்லியும், கரும்பும் நடுமின் ;
பத்தி [2]வேதிகைப் பசும்பொன் தூணத்து,
முத்துத் [3]தாமம் முறையொடு நாற்றுமின் ;
விழவுமலி மூதூர் வீதியும், மன்றமும்,
பழமணல் மாற்றுமின்; புதுமணல் பரப்புமின்;
[4]கதலிகைக் கொடியும், காழூன்று [5]விலோதமும்,
[6]மதலை மாடமும், வாயிலும் சேர்த்துமின் ;
நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
[7]பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக,
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை,
[8]ஆறறி மரபின் அறிந்தோர் செய்யுமின் ;
தண்மணல் பந்தரும், [9]தாழ்தரு பொதியிலும்,
[10]புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின் ;
[11]ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்

1. கமுகு - பாக்குமரம். 2. வேதிகை - திண்ணை.
3. தாமம் - மாலை.

4. கதலிகைக் கொடி, காழூன்று விலோதம் - துகிற்கொடி விசேடங்கள்.

5 பல்வகை வண்ணம் தீட்டிய துகிற்கொடி விலோதம் என்றும், பலவகையாகக் கத்தரிக்கப்பெற்ற துகிற்கொடி கதலிகைக் கொடி என்றும் கூறுவர்.

6. மதலை மாடம் - கொடுங்கை மாடம்.

7. பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் - நகரின்கண் உள்ள சதுக்கப்பூதம். சதுக்கம் - நான்கு தெருக்கள் கூடும் இடம்.

8. ஆறு அறி மரபு - வேறு வேறு செய்வினைகளைச் செய்தற்குரிய நெறியறிந்து செய்யும் முறைமை.

9. தாழ்தரு பொதியில் - தண்ணிய நிழல் தாழ்ந்த ஊரம்பலம்.

10. புண்ணிய நல்லுரை - தரும உபதேசம்.

11. ஒட்டிய சமயத்து உறுபொருள் - தாம் மேற்கொண்டொழுகும் சமயத்தின் துணிபொருள்.

[1]பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின் ;
[2]பற்றா மாக்கள் தம்முட னாயினும் ;
செற்றமும், கலாமும் செய்யா தகலுமின் ”

என்று சொல்லி முரசறைந்தான். மேலும், “இவ்வண்ணம், விழா நடைபெறும் நாலேழ் நாளும் நடத்தல் வேண்டும் ; ஏனெனில்,

வெண்மணல் குன்றமும், விரிபூஞ் சோலையும்,
தண்மணல் [3]துருத்தியும், தாழ்பூந் துறைகளும்,

தேவரும் மக்களும் தம்முள் ஒத்துத் திரிவர்” என்று முரசு அறைந்து, நால்வகைப்படையும் சூழ வந்த வள்ளுவன் இந்திரவிழாவின் இயல் நலங்களை எடுத்து இயம்பினான்.

## 2. ஊர் அலர் உரைத்த காதை

இவ்வாறு இந்திரவிழா நடந்துவருநாளில், நாடக மகளிர் தமது நாடகப் புலமை நலத்தைப் பிறர் கண்டு இன்புறக் கண்டு தாமும் இன்புறுவது இயற்கை. இவ்வாறு விழாவிற் கலந்து சிறப்பித்த நாடகமகளிருள் மாதவியும் அவள் மகள் மணிமேகலையும் காணப்படவில்லை. அதனைக் கண்டறிந்த மாதவியின் தாயாகிய சித்திராபதி என்பவள், மாதவியின் தோழியாகிய வயந்தமாலையை நோக்கி, “நீ மாதவிபாற் சென்று, நீயும் மணிமேகலையும் விழாவிற்கு வாராதிருப்பது அறிந்து இவ்வூரவர் அலர் கூறுகின்றனர் என உரைத்து வருக” எனச் சொல்லி மாதவிபால் விடுத்தாள்.

வந்த வயந்தமாலை, மாதவி துறவு பூண்டு, அதற்குரிய கோலமும் கொண்டு இருப்பதைக் கண்டு, உள்ளம் புழுங்கி,

1. பட்டி மண்டபம் - கல்விக்கழகம்.
2. பற்றாமாக்கள் - அன்பில்லாதவர்.
3. துருத்தி - ஆற்றிடை யமைந்த தீவு.

"நாடக மகளிர்க்கு இன்றியமையாது வேண்டப்படும் கூத்து, பாட்டு, யாழ் முதலிய அனைத்தும் கரிசறக்கற்று, ஓவிய நூலின் ஒண்பொருளும் தெளிந்து துறைபோகிய நீ, நற்றவம் மேற்கொண்டது நாணுடைத்து என்று பலர் கூடி உரைக்கும் அலர் நலம் தருவதாக இல்லை, காண்" என்றாள். அவட்கு, மாதவி :

[1]"காதலன் உற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா உயிரொடு நின்றே,
[2]பொற்கொடி மூதூர்ப் பொருளுரை இழந்து
நற்றொடி நங்காய்! நாணுத் துறந்தேன் ;
காதலர் இறப்பின் [3]கனைஎரி பொத்தி
[4]ஊதுலைக் குருகின் உயிர்த்து அகத்து அடங்காது
இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்,
நன்னீர்ப் [5]பொய்கையின் நளிஎரி புகுவர் ;
நளிஎரி புகாஅ ராயின், அன்பரோடு
[6]உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர்; [7]பரப்புநீர் ஞாலத்து
அத்திறத் தாரும் அல்லள்.

அன்றியும், கணவனுக் குற்ற துயர் பொறாது மதுரை மூதூர்க்கண் அலமந்து தன் மார்பைத் திருகி யெறிந்து, அவ்வூரைத் தீயுண்ணச்செய்த மாபெரும் பத்தினியாகிய கண்ணகிக்கு இம் மணிமேகலை மகளாவாள். அதனால், அவள், அரிய தவநெறிப்படுவதல்லது, நாடக மகளிர்க்

1. காதலன் - கோவலன்.

2. பொற்கொடி மூதூர் - அழகிய கொடிகள் தூக்கிய காவிரிப்பூம்பட்டினம். பொருளுரை - புகழுரை.

3. கனைஎரி - மிக்க நெருப்பு. பொத்தி - மூட்டி.

4. ஊதுலைக் குருகு - கொல்லன் உலைக்களத்துக் காற்றை யூதும் துருத்தி மூக்கு.

5. பொய்கையின் நளிஎரி புகுவர் - பொய்கைக்கண் இறங்கி மூழ்குவதுபோல பெரிய நெருப்பில் வீழ்வர்.

6. உடனுறை வாழ்க்கை - பிரியாது கூடியிருக்கும் வாழ்க்கை.

7. பரப்புநீர் ஞாலம் - பரந்த கடல்சூழ்ந்த நிலவுலகம்.

குள்ள அவநெறிக்கண் செல்லாள். மேலும், இங்கே, மாதவர் உறையும் இவ்விடத்திற்குப் போந்து, இங்கே எழுந்தருளியிருக்கும் அறவண அடிகளின் திருமுன் சென்று அவர் திருவடியில் வணங்கி, மனம் கலங்கி, என் காதலன் உற்ற கடுந்துயரைக் கூறினேன். அவர், திருவுளம் கொண்டு,

'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்;
பிறவார் உறுவது பெரும் பேரின்பம்;
பற்றின் வருவது முன்னது; [1]பின்னது
அற்றோர் உறுவது, அறிக' என்றருளி,
[2]ஐவகைச் சீலத்து அமைதியும் காட்டி.
'உய்வகை, இவை, கொள்' என்று

அருளினர்: இதனை என்னைப் பெற்ற சித்திராபதிக்கும், ஏனைய மகளிர்க்கும் சென்று தெரிவித்திடுக" என்று உரைத்தாள்.

ஆங்கு அவள் உரைகேட்டு அரும்பெறல் மாமணி,
ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று,
[3]மையல் நெஞ்சமொடு வயந்த மாலையும்
[4]கையற்றுப் [5]பெயர்ந்தனள்.

1. பின்னது...உறுவது - பின்னே கூறிய பேரின்பம் பற்றற்றோர் எய்துவதாகும்.

2. ஐவகைச் சீலத்து அமைதி - காமம், கொலை, கள், பொய், களவு என்னும் இவ்வைந்து குற்றங்களையும் முற்றவும் கெடுத்தலால் ஆகும் நலம்.

3. மையல் நெஞ்சம் - மயக்கத்தையுடைய நெஞ்சம்.

4. கையற்று - செயலற்று; செய்வது தெரியாது மயங்கி.

5. பெயர்ந்தனள் - நீங்கினாள்.

## 3. மலர்வனம் புக்க காதை

மாதவி தன் தோழி வயந்தமாலைக்குத் தன் கணவன் கோவலன் உற்ற துன்பமும், அது வழியாகக் கண்ணகிக் குற்ற கடுந்துயரமும், அவள் பின்னர்ச் செய்தனவும் பிறவும் கூறும்போது ஆங்கிருந்த மணிமேகலை அவற்றைக் கேட்டுப் பெரிதும் வருந்திக் கண்ணீர் வடிக்கலானாள். அதுபோது, மணிமேகலை பூத்தொடுத்திருந்தாளாயினும், அதனை மறந்து அவள் சொரிந்த கண்ணீர் பூமாலையை நனைத்தது. வயந்த மாலை சென்றதும், மணிமேகலை கண்ணீர் சொரிவதைக் கண்ட மாதவி, அவளது கண்ணீரைத் துடைத்து, "நின் கண்ணீரால் நீ தொடுத்த [1]தூநீர்மாலை [2]தூத்தகை இழந்தது; இனி, நீயே சென்று தூயமலர்களைக் கொணர்க" என்றாள். அங்கே, அம் மணிமேகலையுடன் சுதமதி என்னும் ஒருத்தி மாலை தொடுத்துக்கொண்டிருந்தாள். அவள், மாதவி கூறியதைக் கேட்டு, அஞ்சி, "மாதவி, மணிமேகலை தனித்துச் செல்வது தகுதியன்று. இவளைத் தெருவில் ஆடவர் கண்டால் அகலார்; பேடிகளே, இவளைக் கண்டால் விருப்பமின்றி யொழிவார். மகளிர் தனித்துச் செல்வதால் உண்டாகும் தீங்கு நீ அறியாய்போலும்; யானே அதற்குப் போதிய சான்று, கேள்" எனத் தொடங்கினாள் :

"யான் சண்பை நகரத்தில் வாழ்ந்த கௌசிகன் என்னும் வேதியனுக்கு ஒரே மகள். ஒருநாள் யான் தனியே மலர்வனம் சென்று பூக்கொய்துகொண்டிருந்தேன். அப்போது, மாருதவேகன் என்ற ஒரு விஞ்சையன் இந்தக் காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழும் இந்திரவிழாவைக் காண்டற்கு வந்தான். வந்தவன், வழியில் மலர்வனத்தில் தனியே இருந்த என்னை வானவழியாகத் தூக்கிக்கொண்டு வந்தான். அப்போது யானும் அவன் பான்மையேன் ஆயினேன். பின்பு, அவன் என்னை இந்நகர்க்கண் கைவிட்டுக்

---

1. தூநீர் மாலை - தூயதன்மையினையுடைய பூமாலை.
2. தூத்தகை - தூயதாகிய தன் அழகு.

கண்ணோட்டமின்றித் தன் நாட்டிற்குப் போய்விட்டான். அதுமுதல் யான் இங்கே இருப்பேனாயினேன். ஆதலால், மணிமேகலை தனித்தேகுதல் கூடாது."

இனி, அச் சுதமதி மேலும் கூறலுற்று, "மலர் கொய்யப் போவதாயின், இலவந்திகை, உய்யானம், சம்பாதி வனம், கவேரவனம் என்ற இம் மலர்வனங்கட்குப் போதல் கூடாது" என, அக் கூடாமைக்குரிய ஏதுக்களையும் எடுத்தோதி முடிவில், "உவவனம் போவதே தக்கது" என்று மொழிந்து, அதன் இயல்பைக் கூறத் தொடங்கி,

"அருளும், அன்பும், [1]ஆருயிர் ஓம்பும்
ஒருபெரும் பூட்கையும் ஒழியா நோன்பின்,
பகவனது ஆணையின் பல்மரம் பூக்கும்
உவவனம் என்ப தொன்றுண்டு; அதன் [2]உள்ளது,
விளிப்பறை போகாது [3]மெய்புறத் திடூஉம்
பளிக்கறை மண்டபம் உண்டு; அதன் உள்ளது
தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த
[4]தாமரைப் பீடிகைதான் உண்டு; ஆங்கு இடின்,
அரும்பு அவிழ்செய்யும்; அலர்ந்தன வாடா;
சுரும்பினம் மூசா [5]தொல்யாண்டு கழியினும்"

என்று சொல்லி, "இதன் திறத்தை உரைக்க மறந்தேன்; இதுகேள்," என மேலும் தொடங்கி, "யாதானுமொரு தெய்வத்தைக் கருத்துட்கொண்டு, ஒரு பூவை அதன்பால்

1. ஆருயிர் ஓம்பும் ஒருபெரும் பூட்கை-நிறைந்த உயிர்களைப் பாதுகாக்கும் ஒப்பற்ற பெரிய மேற்கோள் (துணிவு). ஒழியா - நீங்காத.

2. உள்ளது - உள்ளே இருப்பது. விளிப்பு அறை போகாது- ஓசை வெளியே செல்லாது.

3 மெய்புறத்து இடூஉம் - உள்ளிருப்பவர் உடலுருவத்தை வெளியே காட்டும்.

4. தாமரைப் பீடிகை-தாமரைப்பூ வடிவாகச் செய்தமைத்த இருக்கை (பீடம்).

5. தொல்யாண்டு கழியினும் அரும்பு அவிழும் (மலரும்); அலர்ந்தன வாடா; சுரும்பினம் மூசுவது இல்லை.

இடின், அப் பூ அத்தெய்வத்தின் அடியைச் சேர்ந்துவிடும்; எதனையும் நினையாது இடின், அது நீங்காது அங்கேயே கிடக்கும். இனி, இத்தகைய பீடிகை இங்கே நிறுவப் பெற்றதற்குக் காரணம் வினவின், கூறுவல் :

சிந்தை யின்றியும் செய்வினை யுறும் எனும்
[1]வெந்திறல் நோன்பிகள் விழுமம் கொள்ளவும்,
செய்வினை சிந்தை இன்றெனின், யாவதும்
எய்தாது என்போர்க்கு ஏது வாகவும்,
[2]பயம் கெழு மாமலர் இட்டுக் காட்ட
மயன் பண்டு இழைத்த மரபினது அதுதான்;
அவ்வனம் அல்லது அணியிழை நின்மகள்
[3]செவ்வனம் செல்லும் செம்மைதான் இலள் :

ஆதலால், மலர் கொய்வதற்கு மணிமேகலையுடன் யானும் போவேன்" என்று இயம்பினாள். அதனை மாதவி உடன் பட்டு மணிமேகலையை விடுப்ப, இருவரும் உவவனம் நோக்கிச் செல்வாராயினர்.

இருவரும் தேர் செல்லும் தெருவில் செல்லும்போது, உண்ணுநோன்பி ஒருவனைச் சூழ்ந்துகொண்டு, கள்ளுண்ணு மாறு இரந்து கேட்கும் களிமகன் ஒருவனைக் கண்டனர்; அவன் பின்னர் பலர் நின்றுகொண்டிருந்தனர். பிறி தொருசார், பித்தனொருவன், அழுவதும் விழுவதும் அரற்றுவதும் கூவுவதும் எழுவதும் தொழுவதும் பிறவும் செய்வது கண்டு நகைப் பலர் கூடிநின்றனர். ஒருபுடை

1. வெந்திறல் நோன்பிகள் - சிந்தையின்றியும் செய்வினை உறும் எனும் வெந்திறல் நோன்பிகள் - தம்மை யறியாமலே தாம் செய்யும் வினையிடத்தும் அறம் பாவங்கள் பிறக்கும் என்ற கருத் துடைய வெவ்விய திறல் வாய்ந்த விரதிகள்; எனவே, தாம் அறிவு அறியாதே செய்யும் வினையால் பிறக்கும் அறம் பாவம் தம்மைச் சேரா என்று கருதுபவர் உண்டு என்பதும் 'செய் வினை ...ஏதுவாகவும்' என்பதனால் கூறப்பட்டதாம்.

2. பயம் - பயன் (தேன்).

3. செவ்வனம் செல்லும் - செவ்வையாக (நேராக)ச் செல்லக் கூடிய (வேறே செல்லக்கூடிய).

காமன் வாணன் நகரத்தே பேடிக் கோலங்கொண்டு ஆடிய கூத்துப்போல, சிலர் பேடிக் கோலங்கொண்டு ஆடுவதைப் பலர் பார்த்துக்கொண்டு நின்றனர் ; பிறிதொரு மருங்கில்,

> [1]சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
> [2]மையறு படிவத்து வானவர் முதலா
> எவ்வகை உயிர்களும் உவமம் காட்டி
> [3]வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய
> கண்கவர் ஓவியம் கண்டு

பலர் வியந்து நின்றனர். வேறிடத்தே, மகளிர் பலர் தம் இளஞ்சிறார்களை யானைமீதேற்றி, [4]"ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள் காண்மினோ" எனக் கண்டு நின்றனர்.

இக்கூட்டத்தின் இடையே மணிமேகலையும் சுதமதியும் சென்றனர். மணிமேகலையின் துறவுக்கோலத்தைக் கண்டோருள், பலர் அவளைச் சூழ நின்றுகொண்டு, "அழகமைந்த உருவினையுடைய இவளை அருந்தவப்படுத்திய தாயோ கொடியவள் ; தகவிலள் ; இவள் மலர்வனம் புகின், ஆங்கு வாழும் அன்னமும், மயிலும், கிளியும் முறையே இவள் நடைக்கும், சாயலுக்கும், சொல்லுக்கும் தோற்றோடிப் போகும்" என்றெல்லாம் பரிந்து கூறினர். இவற்றைப் பொருள் செய்யாமல்,

> குரவமும் மரவமும் குருந்தும் கொன்றையும்
> [5]திலகமும் [6]வகுளமும் செங்கால் வெட்சியும்

1. சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனை - செங்கற்களால் எடுக்கப்பட்ட உயர்ந்த நிலைகளையுடைய வீடுகள்.

2. மையறு படிவம் - குற்றமற்ற தெய்வ வுருவம்.

3. வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய கண்கவர் ஓவியம் - வெள்ளிய சுண்ணம்புச் சாந்தினால் விளக்கமுறச் சிற்பிகளால் செய்யப்பட்ட காண்பார் கண்களைக் கவரும் சித்திரம்.

4. ஆலமர் செல்வன் மகன் - ஆலின்கீழ் மேவும் சிவனுக்கு மகனான முருகன்.

5. திலகம் - மஞ்சாடி மரம். 6. வகுளம் - மகிழ மரம்.

[1]நரந்தமும் [2]நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமும் தளவமும் [3]முடமுள் தாழையும்
[4]குடசமும் வெதிரமும் கொழுங்கால் அசோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
[5]எரிமலர் இலவமும் விரிமலர் பரப்பி
வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
[6]சித்திரச் செய்கைப் படாம் போர்த்ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனம் தன்னைத்
தொழுதனள் காட்டிய சுதமதி தன்னொடு
மலர்கொய்யப் புகுந்தனள் மணிமேகலை.

## 4. பளிக்கறை புக்க காதை

உவவனம் புக்க சுதமதியும் மணிமேகலையும் காண்பார் கவரததகக இயறகையழகு திகழநினற பூஙகா வைக் கண்டனர்.

[7]“பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்கு
இருள் வளைப்புண்ட மருள்படு பூம்பொழில்
[8]குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட,

---

1. நரந்தம் - நாரத்தை. 2. நாகம் - புன்னை.

3. முடமுள் தாழை - வளைந்த முள்ளையுடைய தாழை.

4. குடசம் - வெட்பாலை மரம். வெதிரம் - மூங்கில்.

5. எரிமலர் இலவம் - நெருப்புப்போலச் சிவந்த பூக்களையுடைய இலவமரம்.

6. சித்திரச் செய்கைப்படாம் - சித்திர வேலை செய்யப்பட்ட ஆடை போர்த்தது ஒப்பத் தோன்றிய உவவனம் என்க.
தெய்வப் பீடிகையுள்ள வனமாதலால் இதனைச் சுதமதி “தொழுது” காட்டினாள் என அறிக.

7. பரிதியஞ் செல்வன்...பொழில் - ஞாயிற்றினது கதிர்களாகிய சேனையின் பொருட்டு, இருட்கூட்டம் வளைந்துகொண்டு தங்கும், ஒளியின்மையால் மயக்கத்தைத் தரும் பூம்பொழில்.

8. தும்பி குழலிசை கொளுத்திக் காட்ட - தும்பிகள் குழலோசையைச் செய்து ஒலிக்க.

மழலை வண்டினம் நல்யாழ் செய்ய,
வெயில் நுழைபு அறியாக் குயில்நுழை பொதும்பர்,
[1]மயிலாடு அரங்கின் மந்தி காண்பன காண்;
மாசறத் தெளிந்த [2]மணிநீர் இலஞ்சிப்
[3]பாசடைப் பரப்பின் பல்மலர் இடைநின்று,
ஒருதனி யோங்கிய விரைமலர்த் தாமரை
அரச அன்னம் ஆங்கினி திருப்பக்
கரைநின்று ஆலும் ஒருமயில் தனக்கு,
[4]கம்புட் சேவல் [5]கனைகுரல் முழவாக்
கொம்பர் இருங்குயில் விளிப்பது காணாய்;
[6]இயங்குதேர் வீதி எழுதுகள் சேர்ந்து
வயங்கொளி மழுங்கிய மாதர்நின் முகம்போல்
விரைமலர்த் தாமரை கரைநின்று ஓங்கிய
[7]கோடுடைத் தாழைக் கொழுமடல் அவிழ்ந்த
வால்வெண் சுண்ணம் ஆடியது இதுகாண்:
மாதர்நின் கண் போதெனச் சேர்ந்து
தாதுண் வண்டினம் [8]மீதுகடி செங்கையின்
அஞ்சிறை விரிய அலர்ந்த தாமரைச்
செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்கு

1. மயிலாடு அரங்கின் - மயில் தோகையை விரித்து நின்று ஆடும் இடத்தை.

2. மணிநீர் இலஞ்சி - நீலமணி போலும் தெளிவும் நிறமும் ஒளியுமுடைய நீர்நிலை.

3. பாசடைப் பரப்பு - பசிய இலைகள் மூடிய நீர்ப்பரப்பு.

4. கம்புட்சேவல் - சம்பங் கோழி.

5. கனைகுரல் முழவா - கோழிச் சேவலின் கனைப்போசை முழவோசையாக.

6. இயங்குதேர் வீதி எழு துகள் - தேர் இயங்கு வீதி எழு துகள்: தேர் செல்லுதலால் வீதியில் எழுகின்ற தூசு.

7. கோடு உடைத்தாழை-சங்கு உடைந்தாற்போல நிறத்தை யுடைய தாழை.

8. வண்டினம் மீது கடி செங்கை - மேலே மொய்க்கின்ற வண்டினத்தை ஓச்சும் செவ்விய கை.

எறிந்தது பெறூஉது இரையிழந்து வருந்தி
[1]மறிந்து நீங்கும் மணிச்சிரல் காண் என"ச்

சுதமதி மணிமேகலைக்குக் காட்டி மகிழ்வித்தாள்.

இவ்வாறு இவ்விருவரும் உவவனத்துப் பொழிலும் பொய்கையும் வழங்கும் காட்சியின்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கையில், நகரத்திடத்தே பெருங் கிளர்ச்சி யுண்டாயிற்று. சோழவேந்தனது பட்டத்து யானையான காலவேகமென்பது மதவெறிகொண்டு நகரவீதியில் திரிய லுற்றது; மக்கள் கலக்கமுற்று அலமந்து நாற்புறமும் ஓடலாயினர். இச்செய்தி, சோழவேந்தனுடைய நெடுமுடிக் கிள்ளியின் மகன் உதயகுமாரனுக்குத் தெரிந்தது. உடனே, அவன் விரைபரி யொன்றின்மேல் இவர்ந்து, விரைந்து போந்து, அவ் யானையை அடக்கி, பாகர்பால் விடுத்து, தான் ஒரு நெடுந்தேர் ஏறி நாடக மடந்தையர் வாழும் தெருவழியே சென்றான். தெருவில் நெடுமனை யொன்றின் மேல்மாடியில், தெருப்பக்கத்தே அமைந்திருந்த பள்ளி யறைக்கண், நாடக மடந்தை யொருத்தியொடு [2]எட்டி குமரன் ஒருவன் யாழொன்றைத் தழீஇக்கொண்டு கிடந் தான். அவனைத் தேரிலிருந்துகொண்டே பார்த்த உதய குமரன், அவனை யழைத்து, "நினக்கு உற்ற இடுக்கண் என்னை? இவ்வாறு மயங்கிக் கிடக்கின்றனையே!" என்று வினவினன். அதுகேட்ட அவ்வெட்டி குமரன்,

[3]"வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போல்
[4]தகைநலம் வாடி மலர்வனம் புகூஉம்
மாதவி பயந்த மணிமேகலை யொடு
கோவலன் உற்ற கொடுந்துயர் தோன்ற

---

1. மறிந்து நீங்கும் - திரும்பி யேகும்.

2. எட்டி குமரன் - எட்டி யென்னும் சிறப்புப் பெயர் அரச னால் கொடுக்கப்பட்ட வணிக குமரன்.

3. வகைவரிச் செப்பு - கூறுபாடு பல கொண்டு வரிகளை யுடையதாய செப்பு. செப்பு - பெட்டி.

4. தகை - அழகு.

[1]நெஞ்சிறை கொண்ட நீர்மையை நீக்கி,
[2]வெம்பகை நரம்பின் என்கைச் செலுத்தியது ;
இதுயான் உற்ற [3]இடும்பை"

என்றான். இதனைக் கேட்டதும் உதயகுமரன், "அவ்வாறாயின் யான் சென்று அவளை என் தேர்மீது ஏற்றிவருவேன்" என்று மொழிந்து உவவனம் நோக்கிச் செல்வானாயினன். அவன் அதனைக் குறுகலும், அவனது தேரிற் கட்டிய மணியொலி உவவனத்தின் உள்ளிருந்த மணிமேகலையின் செவிக்கு எட்டியது. உடனே அவள், சுதமதியை நோக்கி,

"சித்திரா பதியோடு உதயகுமரன் உற்று
[4]என்மேல் வைத்த உள்ளத் தானென
வயந்த மாலை மாதவிக்கு ஒருநாள்
[5]கிளந்த மாற்றம் கேட்டேன்; ஆதலின்,
ஆங்குஅவன் தேரொலி போலும், ஆயிழை!
ஈங்குஎன் செவிமுதல் [6]இசைத்தது ;

என் செய்வேன்" என்று மொழிந்து அஞ்சினள். அஞ்சாத சுதமதி அவளை அழைத்துச் சென்று அவ்வனத்திடையே இருந்த பளிக்கறைக்குள் விடுத்துத் தாழிட்டு, வெளியே வந்து, அதற்கு ஐந்து விற்கிடை அகன்று நின்றாள். உதயகுமரனும் அங்கு வந்து சேர்ந்து, சுதமதியைக்கண்டு மணிமேகலைபால் தனக்குள்ள காதற்காமம் தோன்றப் பல சொற்களைக் கட்டுரைத்தான்.

---

1. நெஞ்சிறை கொண்ட நீர்மை - நெஞ்சிலே தங்கியிருந்த இசையறிவின் தன்மை.

2. வெம்பகை நரம்பு - நின்ற நரம்பிற்கு மூன்றாவதும் ஆறாவதுமாகிய நரம்பு. கையைச் செலுத்தியது துயரம் என முடிக்க.

3. இடும்பை - துயரம்.

4. என்மேல் வைத்த உள்ளத்தான் - என்மேல் காதல் கொண்டுளன்.

5. கிளந்த மாற்றம் - சொல்லிய சொல்.

6. இசைத்தது - செவியிற் கேட்பதாயிற்று.

அவன் உரைத்தவற்றை அமைதியுடன் கேட்ட சுதமதி, உதயகுமரனைத் தெருட்டப் புகுந்து,

"[1]"இளமை நாணி முதுமை எய்தி
உரைமுடிவு காட்டிய [2]உரவோன் மருகற்கு
அறிவும் சால்பும் அரசியல் வழக்கும்
செறிவளை மகளிர் செப்பலு முண்டோ?
அனைய தாயினும் யான்ஒன் று கிளப்பல்;
[3]வினைவிளங்கு தடக்கை விறலோய்! கேட்டி:
வினையின் வந்தது; வினைக்கு விளைவாயது;
புனைவன நீங்கின் புலால்புறத் திடுவது;
மூப்பு [4]விளிவு உடையது; தீப்பிணி இருக்கை;
பற்றின் பற்றிடம்; குற்றக் கொள்கலம்;
[5]புற்றடங்கு அரவின் செற்றச் சேக்கை;
[6]அவலக் கவலை, கையாறு, அழுங்கல்,
[7]தவலா உள்ளம் தன்பால் உடையது;

1. இளமை...உரவோன்: "தம்முள் மறுதலையாயினார் இருவர் தமக்கு முறைமை செய்யவேண்டி வந்து சில சொன்னால், அச்சொல் முடிவு கண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவு நிரம்பாத இளமைப் பருவத்தான்" என்று இகழ்ந்த நரைமுது மக்கள் உவக்கும் வகை நரைமுடித்து வந்து, முறைவேண்டி வந்த இரு திறத்தாரும் சொல்லிய சொற்கொண்டு ஆராய்ந்தறிந்து முறை செய்தான் கரிகாற் பெருவளத்தான் என்னும் சோழன்.

2. உரவோன் - கரிகாற் பெருவளத்தான்.

3. வினைவிளங்கு தடக்கை விறலோய் - செய்தற்குரிய செய்கைகளைத் தவறாதே செய்தலால் விளக்கமெய்திய பெரிய கையையுடைய விறலுடைய உதயகுமரனே.

4. விளிவு - சாக்காடு.

5. புற்று அடங்கு அரவின் செற்றச் சேக்கை-அரவு அடங்கு புற்றின் செற்றச் சேக்கை—நஞ்சுடைய நாகம் அடங்கியிருத்தற்கு இடமாகும் புற்றுப்போலச் செற்றமாகிய தீக்குணம் தங்கியிருத்தற்குரிய இடம். செற்றம் - பகைமை நெடிது தங்குதற்கேதுவாகிய சினம்.

6. அவலக்கவலை - வருத்தமும் அதனால் உளதாகும் மனத்தளர்ச்சியும்.

7. தவலா உள்ளம் - நீங்காத உள்ளம்.

மக்கள் யாக்கை இதுஎன உணர்ந்து,
மிக்கோய்! இதனைப் [1]புறமறிப் பாராய்"

என்று உரைத்தனள். இச் சொற்கள் அவன் செவியிற் புகுந்து உள்ளத்துச் சென்று சேர்வதன்முன், பளிக்கறைக் குள்ளிருந்த மணிமேகலையின் உருவம் அவன் கண்முன் தோன்றிற்று.

## 5. மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை

பளிக்கறைக்குள் மணிமேகலையின் உருவம் தோன்றக் கண்ட உதயகுமரன் அப் பளிக்கறைக்குட் செல்ல அதன் வாயிலை நாடினன். அது பளிங்கினால் ஆகியதாதலால், அதனைக் காண முடியவில்லை; அவன் அவ்வறையின் புறச் சுவரைக் கையால் தடவிப் பார்த்துச் சுற்றிவந்தான். வரும்போது மணிமேகலையைக் கண்டு, "சுதமதி! நின் தோழியாகிய மணிமேகலை எத்திறத்தாள்?" என்று அவ் வுதயகுமரன் வினவினன். அவனுக்கு அவள்,

"[2]குருகுபெயர்க் குன்றம் கொன்றோன் அன்னநின்
[3]முருகச் செவ்வி முகந்துதன் கண்ணால்
பருகாள். ஆயின், பைந்தொடி நங்கை

---

1. புறமறிப் பாராய்-புறம் மறியாகப் பார்ப்பாய். அஃதாவது, புறத்தே தோன்றும் தோற்றத்தை மாற்றி அகத்தே தோன்றும் தோற்றத்தைத் திருப்பிப் பார்ப்பாயாக என்பது; தோலின் வெளித் தோற்றத்தை விலக்கி அகத்தோற்றத்தைக் காண்டல். இதனைப் "பைம்மறியாப் பார்த்தல்" என்றும் கூறுவர்.

2. குருகு பெயர்க் குன்றம் - கிரவுஞ்சம் என்னும் மலை. இதனைக் கொன்றவன் முருகன்.

3. முருகச் செவ்வி - இளமைக் காலத்து அழகு.

> [1]ஊழ்தரு தவத்தள் ; [2]சாபசரம்,
> காமற் கடந்த வாய்மையள் என்றே

உணர்தல்வேண்டும்" என்று உரைத்தாள், அதனால் அவன் அமைந்தொழியாது, [3]"செவ்வியளாயின் என் செவ்விய ளாகுக" என உரைத்து, "நீ சமண மகளிரிடையே விஞ்சையன் ஒருவனால் கைவிடப்பட்டவள் என்று பல ராலும் கூறப்படும் அவளல்லையோ?" அவரிடத்தின் நீங்கி, இங்கே இம் மணிமேகலையுடன் எவ்வாறு வந்தனை?" எனத் தெரியக் கேட்டான். அவனுக்குச் சுதமதி தன் வரலாறு சொல்லத் தொடங்கி,

> [4]"வார்கழல் வேந்தே, வாழ்கநின் கண்ணி,
> [5]தீநெறிப் படரா நெஞ்சினை யாகுமதி ;
> ஈங்கு இவள் தன்னொடு எய்திய காரணம்,
> [6]வீங்குநீர் ஞாலம் ஆள்வோய், கேட்டருள் :

என் தந்தை என்னையும் என் தாயாகிய தன் மனைவியையும் இழந்து, என்னால் என் குடிக்கு நேர்ந்த குற்றத்தைப் போக்கவெண்ணி, குமரியாட வடமொழியாளர் பலரோடு வந்தான். வந்தவன் குமரித்துறையிலும் அதன்பின் காவிரித்துறையிலும் நீராடி என்னைத் தேடலாயினன். அவன் ஒருநாள் என்னைக் கண்டு, யான் தனக்கு மகளாதலால், என்னைப் பிரியமாட்டானாய், என்னோடே

---

1. ஊழ்வினையால் தவத்தை மேற்கொள்வாளாயினள்.
2. சாபசரத்தின் - சபித்தலாகிய அம்பினால், சபிக்கும் தன்மையை வில்லாகவும், சொல்லை அம்பாகவும் கொள்க.
3. செவ்வியளாயின் என் செவ்வியளாகுக - காமச் செவ்வி யுடையளாயின், எனக்கு அந்நலத்தைத் தரும் இயல்பினளாகுக.
4. வார்கழல் வேந்தன் - வரிந்து கட்டப்பட்ட வீரகண்டை யணிந்த உதயகுமரன்.
5. தீநெறிப்படரா நெஞ்சினையாகுமதி - தீய வழியை நினை யாத நெஞ்சுடையனாவாயாக.
6. வீங்கு நீர்ஞாலம் - பரந்த கடல் சூழ்ந்த நிலவுலகம்.

மனைதோறும் இரந்துண்டு வாழ்ந்துவந்தான். ஒருநாள் கன்றீன்ற ஆவொன்று அவன்மீது பாயவே குடல் சரிந்து விட்டது. அதனைக் கையில் தாங்கிய வண்ணம் அவன் சமணரிடம் தஞ்சம் புகுந்தான். அவர்கள், அவனையும் என்னையும் புறத்தே போக்கி, 'நீவிர் இவ்விடத்திற்கு உரியரல்லீர்' எனக் கையுதிர்த்துவிட்டனர். யாங்கள், 'யாவரேனும் அறவோர் அகப்படுவரோ?' என நகரத்தெருக்களில் அலமந்து திரிந்தோம். அப்போது சங்கதருமன் என்பவன், உச்சிப்போதில் மனைதொறும் சென்று பிச்சை எடுத்துவருவோன், எங்களைக் கண்டு, கழிபேர் இரக்கம் கொண்டு எமது துயர் நீக்கினன். அப் பெரியோன் சங்கதருமன் எனப்படும் புத்த சான்றோனவன். அவனே, எங்கட்குப் புத்தனது அருளறத்தைப் புகன்று, அப் பெருமான்,

> எங்கோன், இயல்குணன்; [1]ஏதமில் குணப்பொருள்;
> [2]உலக நோன்பின் பலகதி யுணர்ந்து
> தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்;

என்றான். அதுமுதல், யான்,

> [3]இன்பச் செவ்வி [4]மன்பதை எய்த
> அருளறம் பூண்ட [5]ஒருபெரும் பூட்கையின்
> [6]அறக்கதி ராழி திறப்பட வுருட்டி,
> காமற் கடந்த வாமன் பாதம்

1. ஏதம் - குற்றம்.

2. உலக நோன்பு - உலகியலில் காணப்படும் வாழ்க்கைத் திறம். இதனைக் கண்டு, துன்பமும், துன்பக் காரணமும், துன்பத்தோற்றம், அதனைப் போக்கும் நெறி முதலிய பன்னெறியாகக் கண்டு தெளிந்து, உயிர்கள்மேல் பேரருள் கொள்ளல். இவ்வுலக நோன்பு இந்நூலில் பயில வழங்கும்.

3. இன்பச் செவ்வி - முத்திநிலையாகிய நிருவாணநிலை.

4. மன்பதை - உயிர்கள்.

5. ஒரு பெரும் பூட்கை - ஒப்பற்ற பெரிய மேற்கோள் (துணிவு).

6. அறக்கதிர் ஆழி - அறமாகிய ஒளி பொருந்திய சக்கரம்.

[1]தகை பாராட்டுதல் அல்லது யாவதும்
[2]மிகைநா இல்லேன், வேந்தே வாழ்க"

என்று சொல்லி முடித்தாள். இதனைக் கேட்ட உதய குமரன், "இனி, யான் இம் மணிமேகலையைச் சித்திரா பதியால் என்பால் சேர்த்துக்கொள்வேன்," என்று அப் பொழிலை விட்டு நீங்கினான். அவன் போனதையுணர்ந்த மணிமேகலை, வெளியே சுதமதியிடம் வந்து,

கற்புத் தான்இலள், நற்றவ வுணர்விலள்,
[3]வருணக் காப்பிலள் [4]பொருள்விலை யாட்டிஎன்று
இகழ்ந்தன னாகி [5]நயந்தோன் என்னாது
[6]புதுவோன் பின்றைப் போனது என்னெஞ்சம்
இதுவோ, அன்னாய், காமத் தியற்கை
இதுவே யாயின் கெடுக தன் திறம்

எனச் சொல்லி நின்றாள். அவர்கள் எதிரில் அழகிய பெண்ணொருத்தி மிக்க நலம் திகழப் போந்து பளிக்கறைப் பீடிகையை வலம்கொண்டு வந்து நின்றாள். அவளை இவர்கள் ஆர்வத்தோடு பார்த்து நிற்கையில் அவள், தெய்வ வுருவுடன் ஓங்கி நின்று,

புலவன், தீர்த்தன், புண்ணியன் [7]புராணன்,
உலக நோன்பின் உயர்ந்தோய் என்கோ ;

1. தகை பாராட்டுதல் - நலத்தைப் பாராட்டிப் பரவுதல், யாவதும் - சிறிதும்.

2. மிகைநா இல்லேன் - வேறே எப்பொருளையும் சொல்லு வது இல்லேன்.

3. வருணக் காப்பு - வருணக் கட்டுப்பாடு.

4. பொருள் விலையாட்டி - பொருளுக்குத் தன் நலத்தை விற்கும் விலைமகள்.

5. நயந்தோன் என்னாது - விரும்புகின்றான் என்று ஒழியாது.

6. புதுவோன் பின்றை - புதியனாய் வந்த இந்த உதயகுமரன் பின்னே.

7. புராணன் - பழமையானவன்; புராணங்களால் பாராட் டப்படுபவன்.

குற்றம் கெடுத்தோய்' [1]செற்றம் செறுத்தோய்
முற்ற வுணர்ந்த முதல்வா, என்கோ;
[2]காமற் கடந்த வாமை யாயோய்
[3]தீநெறிக் கடும்பகை கடிந்தோய், என்கோ;
[4]ஆயிர வாரத் தாழியந் திருந்தடி
நாவா யிரமிலேன், ஏத்துவது எவன்?

என்று பரவி நின்றாள். அக்காலையில் பகற்போதும் நீங்கிற்று; அந்திமாலை அழகுதிகழ வந்தது. அதனுடைய அவ்வினிய காட்சிக்கண்,

அன்னச் சேவல் அயர்ந்து விளையாடிய
தன்னுறு பெடையைத் [5]தாமரை யடக்க,
[6]பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்டு
ஓங்கிருந் தெங்கின் உயர்மடல் ஏற,
அன்றிற் பேடை [7]அரிக்குரல் அழைஇச்
சென்றுவீழ் பொழுது சேவற் [8]கிசைப்பப்
பவளச் செங்காற் பறவைக் கானத்துக்

1. செற்றம் செறுத்தோய் - பகைமைக்கு இடமாகிய சினத்தைக் கெடுத்தவனே.

2. காமற் கடந்த வாமம் ஆயோய் - காமனது செய்கை முற்றும் அறவே நிகழாவாறு காத்தோம்புதலால் இடையறா இன்பமுடைய ஞயினவனே.

3. தீநெறிக் கடும்பகை - தீய வழியிற் செலுத்தும் வினைவாகிய மிக்க பகை.

4. ஆயிர வாரத் தாழியந் திருந்தடி - ஆயிரம் ஆர்களையுடைய சக்கரரேகை பொருந்திய திருவடி.

5. தாமரை அடக்க - தாமரையின் பூவிதழ் கூம்பி மூடிவிட.

6. பூம்பொதி - பூவின் கூம்பிய இதழ். கூம்பும் காலத்துத் தன்பால் தங்கிய பெடையை, தாமரைப்பூ கூம்பி மூடிக்கொள்ள, சேவல், அவ்விதழைக் கிழித்துத் தன்பெடை பட்ட சிறையை நீக்கி, உடன்கொண்டு சென்றது.

7. அரிக்குரல் - அரித்த ஓசை; மெல்லிய குரல்.

8. இசைப்ப - தெரிவிக்க.

குவளை மேய்ந்த [1]குடக்கண் சேதா
முலைபொழி தீம்பால் எழுதுகள் அவிப்ப,
கன்றுநினை குரல, [2]மன்று வழிப்படர,
அந்தி யந்தணர் செந்தீப் பேணப்,
பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப
யாழோர் [3]மருதத்து இன்நரம்பு உளர,
கோவலர் [4]முல்லைக் குழல்மேல் கொள்ள,
[5]அமரக மருங்கில் கணவனை இழந்து
[6]தமரகம் புகூஉம் ஒருமகள் போல

செஞ்ஞாயிறு மறைந்ததனால் தேம்பிய மேனியுடன் அந்தி மாலையென்னும் அழகி வந்ததுபோல

## 6. சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை

இவ்வண்ணம் தோன்றிய மணிமேகலா தெய்வம், சுதமதியையும் மணிமேகலையையும் கண்டது. பின்பு, அத் தெய்வம், சுதமதியைப் பார்த்து, "இங்கே வாடி நிற்கின்ற நீவிர் என்உற்றீர்?" என்று வினவ, சுதமதி உதயகுமரன் கூறியவனைத்தையும் ஒழியாது உரைத்தாள். அப்போது அத் தெய்வம்,

"அரசிளங் குமரன் ஆயிழை தன்மேல்
[7]தணியா நோக்கம் தவிர்விலனாகி

1. குடக்கண் சேதா - வளைந்த கண்களையுடைய செம்மையான ஆ.
2. மன்று - ஆநிரைகள் ஊரிடத்தே வந்து சேரும் இடம்.
3. மருதத்து இன் நரம்பு உளர - மருதயாழின் இனிய இசையை இசைக்க.
4. முல்லைக் குழல் மேல் கொள்ள - குழல் முல்லைமேற் கொள்ள - குழலிடத்தே முல்லைப்பண்ணைப் பாட.
5. அமரகம் - போர்க்களம்.
6. தமரகம் - தம்மவர்கள் இருக்குமிடம்.
7. தணியா நோக்கம் - நீங்காத காதல்.

அறத்தோர் வனம் என்று அகன்றனன்; ஆயினும்,
[1]புறத்தோர் வீதியில் பொருந்துதல் ஒழியான் :

ஆதலால், நீங்கள் பெருந்தெருவிற் செல்வதை விடுத்து, இவ் வுவவனத்தைச் சூழ்ந்துள்ள மதிலின் மேற்றிசைச் சிறுவாயில் வழியாகச் சக்கரவாளக் கோட்டத்திற்குச் செல்க. அங்கே இரவுப்போது கழியினும் உங்கட்குச் சிறு தீங்கும் எய்தாது'' என்று சொல்லிற்று. சக்கரவாளக் கோட்டம் என்று தெய்வம் உரைப்பக் கேட்டதும் சுதமதி வியப்புற்று, அதனை நோக்கி, "அக் கோட்டத்தை இங்குள்ளோர் அனைவரும் சுடுகாட்டுக் கோட்டம் என்கின்றனர். என்னை இங்கே கொணர்ந்த வஞ்ச விஞ்சையனான மாருதவேகன், இதனைச் சக்கரவாளக் கோட்டம் என்று சொல்லக் கேட்டுளேன்; அதுவேபோல, நீயும் இன்று சொல்லக் கேட்டேன். இதனைச் சுடுகாட்டுக் கோட்டம் என்னாது, நீங்கள் சக்கரவாளக் கோட்டம் என்று சொல்லுவதன் கருத்தென்ன ?'' என்று

மணிமேகலா தெய்வம், அக் கருத்தை யுரைக்கப் புகுந்து, "இதனை யாவரும் சுடுகாட்டுக் கோட்டம் என்பது வழுவன்று. இந் நன்காடு, சம்பாபதி என்னும் இந்நகர் தோன்றிய காலத்தே உடன் தோன்றிய முதுகாடேயாகும்.

சுடுவோர், இடுவோர், தொடுகுழிப் படுப்போர்,
[2]தாழ்வயின் அடைப்போர், தாழியிற் கவிப்போர்,
இரவும் பகலும் [3]இளிவுடன் தரியாது
வருவோர் பெயர்வோர் மாறாச் சும்மையும்,
எஞ்சியோர் மருங்கின் ஈமம் சாற்றி
நெஞ்சு நடுக்குறூஉம் நெய்த லோசையும்,

1. புறத்தோர் வீதியில் - வெளியே ஏனைமக்கள் செல்லும் தெருவில்.

2. தாழ்வயின் அடைப்போர் - தோண்டிய பள்ளங்களில் புதைப்பவர்.

3. இளிவுடன் - அருவருப்போடு.

துறவோர் இறந்த [1]தொழுவிளிப் பூசலும்,
பிறவோர் இறந்த அழுவிளிப் பூசலும்,
நீள்முக நரியின் [2]தீவிளிக் கூவும்,
[3]சாவோர்ப் பயிரும் கூகையின் குரலும்,
புலவூண் பொருந்திய [4]குராலின் குரலும்,
[5]ஊண்தலை துற்றிய ஆண்தலைக் குரலும்,
நல்நீர்ப் [6]புணரி நளிகட லோதையின்
இன்னா இசையொலி என்றும் நின்றறாது.

இன்ன இயல்பிற்றாய சுடுகாடு இருப்பக் கண்டும், மக்கள் நிலைத்த வாழ்வுடையார்போல் மயங்குகின்றனர்" என்று விரித்துரைக்கத் தொடங்கி, அத் தெய்வம்,

"தவத்துறை மாக்கள், மிகப்பெருஞ் செல்வர்,
[7]ஈற்றிளம் பெண்டிர், ஆற்றாப் பாலகர்,
முதியோர் என்னான், இளையோர் என்னான்,
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப,இவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்,
கழிபெருஞ் [8]செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ?

1. தொழுவிளிப்பூசல் - துதி முழக்கம்.

2. தீவிளிக் கூவும் - ஊளையிடும் ஓசையும்.

3. சாவோர்ப் பயிரும் - இறப்பவரை அழைக்கும். கூகை - பேராந்தை.

4. குரால் - கோட்டான்.

5. ஊண்தலை துற்றிய ஆண்தலை - தலை மூளையை உணவாக உண்ட ஆண்டலைப் பறவை. ஆண் மகனது தலை போன்ற வடிவ முடையது இப்பறவை; அதனால் இதனை ஆண்டலைப்புள் என்றனர்.

6. புணரி - அலைகள்.

7. ஈற்றிளம் பெண்டிர் - மகவீன்ற இளைய மடந்தையர்.

8. செல்வக் கள்ளாட்டயர்ந்து - செல்வ மிகுதியால் செருக்குற்று மயங்கி வெறுப்பவைகளைச் செய்து.

நிற்க, ஒருநாள் இரவு ஒரு பேய்மகள் பெண் பிணமொன்றின் கருந்தலையைக் கையில் ஏந்தி,

புயலோ குழலோ? கயலோ கண்ணே?
குமிழோ மூக்கோ? இதழோ கவிரோ?
பல்லோ முத்தோ என்னாது, இரங்காது,
கண் [1]தொட்டுண்டு [2]கவையடி பெயர்த்துத்
தண்டாக் களிப்பின் ஆடும் கூத்து.

ஒன்றை, அவ்வழியே அறியாது சென்ற, சார்ங்கலன் என்னும் பார்ப்பனச் சிறுவன் ஒருவன் கண்டு அஞ்சி நடுநடுங்கி, தன் வீட்டிற்குச் சென்று, தன் தாயிடம் நடந்தது சொல்லி உயிர்விட்டான். அவன் பெற்றோர் மிக்க முதியோராவர். அவருள், அவன் தந்தை கண்ணிழந்தவன். கோதமை யென்னும் அவனது தாய் வயது முதிர்ந்தவள்.

மகன் பிரிவை ஆற்றாத கோதமை, அவன் உடலைச் சுமந்து சுமப்புறங் காட்டின் மதில் வாயிலில் நின்று, சம்பாபதியை நோக்கி முறையிட்டழுதாள். அவள் கண்முன் அச் சம்பாபதி தோன்றி, 'நீ என்னை யழைத்த காரணம் என்னை?' என்றாள். கோதமை தன் மகன் இறந்து கிடப்பது காட்டி,

'என்உயிர் கொண்டு இவன் உயிர்தந்தருளில், என்,
கண்ணில் கணவனை இவன் காத்து ஓம்பிடும்;
இவன்உயிர் தந்து என்உயிர் வாங்கு'

என்று இரந்தனள். அதுகேட்ட சம்பாபதி,

'ஐய முண்டோ, [3]ஆருயிர் போனால்,
செய்வினை மருங்கில் சென்று பிறப்பெய்துதல்;

---

1. தொட்டு - தோண்டி.

2. கவையடி பெயர்த்து - பிளவுபட்ட அடிகளை இயக்கி. தண்டாக் களிப்பு - குறையாத மகிழ்ச்சி.

3. ஆருயிர் போனால் அது செய்த வினைக்கேற்ப வேறே பிறப்பு எய்தும் என்ற பொருளில் ஐயமுண்டோ, என்றது; செத்தவின் மகனது உயிர் வேறு பிறப்பை எய்தியிருக்கும்: அதனை மீட்டும் தருவிப்பது என்பது முடியாது என்றவாறு.

ஆங்கது கொணர்ந்துநின் [1]ஆர்இடர் நீக்குதல்
ஈங்கு எனக்கு ஆவதொன்றன்று; நீ இரங்கல்.
கொலை அறமாம் எனும் கொடுந்தொழில் மாக்கள்,
[2]அவலப் படிற்றுரை ஆங்கது; மடவாய்!
உலக மன்னவர்க்கு உயிர்க்குஉயிர் ஈவோர்
இலரோ; இந்த ஈமப் புறங்காட்டு
அரசர்க்கு அமைந்தன ஆயிரம் கோட்டம்

அதனால், நீ நின் கருத்தை விடுக' என்றனள். இதனாலும் மனம் தெளியாத கோதமை, 'தேவர்கள் இத்தகைய வரம் தருவர் என நான்மறை யந்தணர் நவில்வதுண்டு; அதனால், நீ அருளாவிடின், யான் இப்பொழுதே உயிர்விடுவேன்' என்று சொல்ல, சம்பாபதி, தெய்வ வகை பலவும் விடாது வரவழைத்து, அவள் முன் நிறுத்தி, 'நீ கேட்கும் வரத்தை இவர் தரவல்லரோ, காண்' என்றாள். அத் தெய்வங்கள் அனைத்தும், சம்பாபதி கூறியவாறே, 'இறந்த உயிரை மீட்டும் தருவித்தல் முடியாது' என்று சொல்ல, கோதமை தன் மகனைச் சுடுகாட்டில் இட்டுத் தானும் உயிர் துறந்தாள்.

சம்பாபதி தன் ஆற்றல் தோன்ற
எங்குவாழ் தேவரும் கூடிய இடந்தனில்,
சூழ்கடல் வளைஇய [3]ஆழியங் குன்றத்து,
நடுவு நின்ற மேருக் குன்றமும்,
புடையில் நின்ற எழுவகைக் குன்றமும்
[4]நால்வகை மரபின் மாபெருந் தீவும்,
ஓரீ ராயிரம் சிற்றிடைத் தீவும்,
பிறவும் ஆங்கதன் இடவகை உரியன,
பெறுமுறை மரபின் அறிவுவரக் காட்டி,
ஆங்குவாழ் உயிர்களும் அவ்வுயிர் இடங்களும்,

1. ஆர் இடர் - பொறுப்பதற் கரிதாகிய துன்பம்.
2. அவலப்படிற்றுரை - கேடு விளைவிக்கும் பொய்ம்மொழி.
3. ஆழியங்குன்றம் - சக்கரவாளகிரி.
4. நால்வகை மாபெருந் தீவுகள், "மஹாத்வீபம் நான்கு; இவற்றுள் ஒன்று ஜம்புத்வீபம்" என்பர் புத்த நூலார்.

பாங்குற [1]மண்ணீட்டில் பண்புற வகுத்து
மிக்க மயனால் இழைக்கப்பட்ட
சக்கர வாளக் கோட்டம் ஈங்கு இதுகாண்;
இடுபிணக் கோட்டத்து [2]எயிற்புற மாதலின்,
சுடுகாட்டுக் கோட்டம் என்றலது உரையார்,

இதுவே இதன் வரலாறு" என அம் மணிமேகலா தெய்வம் கூறி முடித்தது. அதன்பின் சுதமதி உறங்கிவிட்டாள். அத்தெய்வம் மணிமேகலையைத் தன் மந்திரத்தால் மயக்கித் தழுவி யெடுத்துக்கொண்டு வான்வழியாக, தென் திசையில் முப்பது யோசனைத் தொலைவில் கடல் நடுவண் இருந்த மணிபல்லவம் என்னும் ஒரு தீவில் கடற்கரையில் மணற் பரப்பில் அவளைக் கிடத்திவிட்டு நீங்கியது.

## 7. துயிலெழுப்பிய காதை

மணிமேகலையைக் கைப்பற்ற முடியாது, கையற்றுத் தன் அரண்மனைக்கு மீண்டுவந்த உதயகுமாரன், "இக் கங்குல் கழிந்ததும் அவளை என் கையகப்படுத்துவேன்" என்று எண்ணமிட்டுக்கொண்டு, அன்றிரவு கண்ணுறக்கம் பெறாது, தன் படுக்கையில் புரண்டுகொண்டிருந்தான். அவன் கண்முன்னே மணிமேகலா தெய்வம் தோன்றி, "மன்னவன் மகனே,

கோல்நிலை திரிந்திடின், கோள்நிலை திரியும்;
கோள்நிலை திரிந்திடின், [3]மாரி வறங்கூரும்;
மாரிவறங் கூரின், மன்உயிர் இல்லை;
மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதி இன்றாகும்

1. மண்ணீடு - வெண் சுதையால் செய்த வடிவுகள்.
2. எயில் - மதில்.
3. மாரி வறம்கூரும் - மாரி வற்றிவிடும்; மழை இல்லையாய் விடும்.

"[1]தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த
அவத்திறம் ஒழிக"

என்று உரைத்துவிட்டு நீங்கி, உவவனம் புகுந்து அங்கே உறங்கிக்கொண்டிருந்த சுதமதியைக் கண்டு அவளது துயிலை நீக்கிற்று. அவள் தெளிந்த காலை, அவள் முன்னே நின்று, "சுதமதி, அஞ்சேல், யான் மணிமேகலா தெய்வம். இவ்வூரில் நடைபெறும் இந்திரவிழாவைக் காண வந்த யான், என் மந்திரத்தால் மணிமேகலையை மயக்கிக் கொண்டுபோய் மணிபல்லவத்தில் வைத்துள்ளேன். அவள் இன்றைய ஏழாம் நாள், தன் பழம் பிறப்பை அறிந்து கொண்டு இங்கு வருவள். அவளுக்குப் புத்தனது நல்லறத்தைப் பின்பற்றும் நல்லூழ் வந்திருக்கிறது. அவள் இவ்வூரில் தன் உருக்கரந்து உலவிய காலையும் நின் கண்ணுக்குத் தன் உண்மை யுருவை ஒளியாள். இதனை அவள் தாய் மாதவிக்குத் தெரிவிக்க.

திரை [2]இரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக்
கோவலன் கூறிஇக் கொடியிடை தன்னை,என்
[3]நாமம் செய்த நல்நாள் நள்ளிருள்
காமன் [4]கையறக் [5]கடுநவை யறுக்கும்
[6]மாபெருந் தவக்கொடி ஈன்றனை என்றே
நனவே போலக் கனவகத்து உரைத்தேன் ;
ஈங்கு இவ்வண்ணம் ஆங்கு அவட்குஉரை"

என்று சொல்லிவிட்டு மறைந்தேகியது. சுதமதி தான் உறங்கிக்கிடந்த இடத்தினின்றும் எழுந்து சுற்றுமுற்றும் நோக்கினள். எங்கும் எவ்வுயிரும் உறங்கின. இடையிடையே,

---

1. தவத்திறம் பூண்டோள் - தவத்தின் தகுதிகொண்ட மணிமேகலை.

2. இரும்பௌவம் - பெரிய கடல்.

3. நாமம் செய்த நல்நாள் - பெயர் வைத்த நன்னாள்.

4. கையற - செயல் அற. 5. கடுநவை - பிறவி நோய்.

6. மாபெருந் தவக்கொடி - மிக்க பெரிய தவத்திறம் பூணுதற்குரிய கொடிபோலும் மகள்.

[1]யாமம் கொள்பவர் ஏத்தொலி யரவமும்,

* * * *

[2]நிறையழி யானை நெடுங்கூ விளியும்,
ஊர்காப் பாளர் எறி [3]துடி யோதையும்,

* * * *

புதல்வரைப் பயந்த [4]புனிறுதீர் கயக்கம்
தீர்வினை மகளிர் குளநாடு அரவமும்,
[5]வலித்த நெஞ்சின் ஆடவர் இன்றியும்,
[6]புலிக்கணத் தன்னோர் பூத சதுக்கத்துக்
கொடித்தேர் வேந்தன் கொற்றம் கொள்கஎன
இடிக்குரல் முழக்கத்து [7]இடும்பலி யோதையும்
ஈற்றிளம் பெண்டிர், ஆற்றுப் பாலகர்
கடுஞ்சூல் மகளிர் [8]நெடும்புண் உற்றோர்
தம்துயர் கெடுக்கும் மந்திர மாக்கள்
மன்றப் பேய்மகள் வந்துகைக் கொள்க என
நின்றெறி பலியின் நெடுங்குரல் ஓதையும்

---

1. யாமம் கொள்பவர் - நாழிகைக் கணக்கெடுப்போர்.

2. நிறையழியானை நெடுங்கூவிளி - போக்குவரவின்றிக் கட்டுண்டு கிடத்தலால் உணவு கொள்ளாது வருந்தி, பாகர் நிறுத்தும் நிறை கடந்த யானைகள் நெடிதாய் இசைக்கும் பிளிறல்.

3. துடி - பம்பைபோலும் ஒருவகை இசைக்கருவி.

4. புனிறுதீர் மகளிர் - மகவுபெற்று வாலாமை நீங்கும் மகளிர்; கயக்கம் தீர் மகளிர் - மகவுபெற்று வருத்தம் நீங்கும் மகளிர்.

குறிப்பு:—மகவுபெற்ற மகளிர் பத்தாம் நாள் இரவில் மகப் பயந்த முதிய மகளிர் புடைசூழச் சென்று மாலையில் நீராடல் பண்டையோர் மரபு.

5. வலித்த நெஞ்சின் ஆடவர் - பகைமை யிருத்தலால் அது குறித்த நெஞ்சினையுடைய வீரர்; வலிய பகைவர்கள்.

6. புலிக்கணத்து அன்னோர் - புலிக்கூட்டம் போன்ற வீரர்கள்.

7. இடும்பலி யோதை - பலியிடும் ஓதை - பலியிடுவோர் செய்யும் பெருமுழக்கம்.

8. நெடும்புண் உற்றோர் - போரில் பெரிய புண்பட்டவர்.

பிறவும் எழுந்து இசைத்தன. இவற்றால் உள்ளம் கலக்கமுற்ற சுதமதி, அவ்வனத்தின் மேற்றிசையில் உள்ள சிறு வழியினூடு, அயலதாகிய சக்கரவாளக் கோட்டத்தை அடைந்தாள். அவ்விடத்தே பலரும் புகுமாறு திறந்த வாயிலையுடைய [1]உலகவறவி இருந்தது. அங்கே சென்ற சுதமதி அதன் ஒருபுடையே இருந்தனள். அவ்விடத்தே நின்ற தூணில் அமைந்திருந்த பாவையொன்றை உடலாகக் கொண்டு ஒரு தெய்வம், அவளை அழைத்து, "சுதமதி, நீ முன் பிறப்பில் அசோதரநகரத்து அரசனான இரவிவன்மன் மகள். நீ துச்சயன் என்னும் வேந்தற்கு மனைவி நினக்கு முற்பிறப்பில் வீரை என்பது பெயர். நினக்குத் தமக்கை யொருத்தியுண்டு. அவள் தாரை எனப்படுவாள். அவள் இறந்தது கேட்டு நீ உயிர்விட்டாய் இப்போது நீ நின் முன் பிறந்தாளாகிய தாரையொடு கூடியிருக்கின்றாய். இன்றைய ஏழாம்நாள் நின் பழம் பிறப்பின் தங்கை இலக்குமி என்பாள நின் பிறப்பும் தன் பிறப்பும அறிந்து வருவள். நீ அஞ்சற்க" என்று சொல்லிற்று இச் சொற்களால் சுதமதி திகைப்புண்டு அஞ்சி மருண்டிருக்கையில்,

[2]காவ லாளர் கண்துயில் கொள்ள,
தூமென் சேக்கைத் துயில்கண் விழிப்ப,
[3]வலம்புரிச் சங்கம் வறிது எழுந்தார்ப்ப,
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க,

---

1. உலக அறவி - எல்லா வகை மக்களும் வந்து தங்குதற்குரிய அறச்சாலை.

2. காவலாளர் கண் துயில்கொள்ள - இரவு முற்றும் காவல் புரிந்த வீரர் விடியலில் கண்ணுறக்கம் கொள்ள.

தூமென்சேக்கைத் துயில்கண் விழிப்ப - தூய மெல்லிய பள்ளியில் துயின்ற ஆடவர் மகளிர் என்ற இருபாலார் கண்களும் விழித்துக்கொள்ள.

3. வலம்புரிச் சங்கம் - வலம்புரி என்னும் சங்கு. வறிது எழுந்து ஆர்ப்ப - வறிதே முழங்க. புலம்புரிச் சங்கம் - புலவர் கூட்டம். பொருளொடு முழங்க - பொருள் நிரம்பிய மொழிகளைச் சொல்லி ஓசை செய்ய.

[1]புகர்முக வாரணம் நெடுங் கூ விளிப்ப,
பொறிமயிர் வாரணம் குறுங் கூ விளிப்ப,
[2]பணைநிலைப் புரவி பலஎழுந் தாலப்
[3]பணைநிலைப் புள்ளும் பலஎழுந் தால,
[4]பூம்பொழி லார்கைப் புள்ளொலி சிறப்ப,
பூங்கொடி யார்கைப் புள்ளொலி சிறப்ப,
[5]கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொள,
கலம்பகர் பீடிகைப் பூப்பலி கடைகொள,
[6]குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ
கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ
ஊர்துயில் எடுப்ப, [7]உரவுநீர் அழுவத்துக்
[8]கார்இருள் சீத்துக் கதிரவன் முளைத்தலும்,

1. புகர்முக வாரணம் - புள்ளி பொருந்திய பட்டமணிந்த யானை. பொறிமயிர் வாரணம் - பொறிகள் பொருந்திய மயிரினை யுடைய கோழி.

2. பணைநிலைப்புரவி-குதிரைப் பந்தியில் நிற்கும் குதிரைகள். ஆல - ஆட.

3. பணைநிலைப் புள் - மரக்கிளையில் தங்கும் பறவைகள். ஆல - முழங்க.

4. பூம்பொழில் - பூஞ்சோலைகளில். ஆர்கை - நிரம்பிய. புள் - பறவைகள். பூங்கொடியார் - பூங்கொடி போலும் மகளிர். கைப்புள் - கையில் அணிந்த வளைகள்.

5. கடவுட் பீடிகை - தெய்வங்கட்குரிய பீடங்கள். பூப்பலி- அழகிய படைச்சல்கள். கடைகொள - முற்றுப்பெற.

கலம் பகர் பீடிகை - அணிகலம் விற்கும் கடைத்தெரு. கடையின் வாயிலுக்குப் பூச்சொரிந்து பொட்டிட்டுப் பூசை செய்தல்.

6. குயிலுவர் கடை - தோற்கருவி வாசிப்போருடைய வீட்டு முற்றம். பண்இயம் - பண்ணமைந்த இசை.

கொடுப்போர்கடை - கொடைவள்ளல் வீட்டு முற்றம். பண்ணியம் - பல பண்டங்கள்.

7. உரவுநீர் அழுவம் - விரிந்த நீர்மிக்க கடல்.

8. கார்இருள் சீத்து - மிக்க இருளைக் கெடுத்து.

சுதமதிக்கு அச்சம் நீங்கிற்று. அவள் மயிலென நடந்து மாநகரின் தெருவழியே சென்று மாதவியை யடைந்து நிகழ்ந்தது முற்றும் வழுவின்றிக் கூறினாள். மாதவி, அது கேட்டு, மணியிழந்த நாகம்போல் வருத்தம் கொண்டனள்; சுதமதியோ, மணிமேகலையின் பிரிவாற்றாது உயிரிழந்த உடல்போலத் துயர் உழப்பாளாயினள்.

---

## 8. மணிபல்லவத்துத் துயருற்ற காதை

மணிமேகலா தெய்வத்தால் தனித்து விடப்பெற்ற மணிமேகலை மணிபல்லவத் தீவின் கடற்கரையில், துயி லெழுந்து சுற்றுமுற்றும் பார்க்கலுற்றாள். தன்னோடிருந்த ...யையும் அவள் கண்டிலள். அவள் கண்ணெதிரே,

[1]ஞாழல் ஓங்கிய [2]தாழ்கண் அசும்பின்
ஆம்பலும் குவளையும் தாம்புணர்ந்து மயங்கி,
வண்டுண மலர்ந்த [3]குண்டுநீர் இலஞ்சி
[4]முடக்கால் புன்னையும் மடற்பூந் தாழையும்
[5]வெயில் வரவு ஒழித்த பயில்பூம் பந்தர்

தோன்றிற்று. அங்கே தோன்றிய அனைத்தும் அவட்குப் புதுமையாகவே தோன்றின. சிறிது காலத்தே விடியலின் வெள்ளிருள் நீங்க, ஞாயிறு கிழக்கே எழுந்தது. மணி மேகலை, அவ்விடத்தை வியந்து நோக்கி,

"உவவன மருங்கினில் ஓரிடம் கொல்இது!
சுதமதி! ஒளித்தாய்: துயரம் செய்தனை;

1. ஞாழல் - ஒருவகைக் கொன்றை; புலிநகக் கொன்றை.
2. தாழ்கண் அசும்பு - ஆழ்ந்த நீர்நிலைச் சேற்றில்.
3. குண்டுநீர் இலஞ்சி - ஆழமான நீரையுடைய பொய்கைக் கரை.
4. முடக்கால் புன்னை - வளைந்த அடி மரத்தையுடைய
5. வெயில் வரவு ஒழித்த - வெயில் நுழையாதபடி நெருங்கத் தழைத்த.

நனவோ, கனவோ என்பதை அறியேன்;
மனம் [1]நடுக் குறூஉம்; மாற்றம் தாராய்,
வல்இருள் கழிந்தது; மாதவி மயங்கும்;
[2]எல்வளை வாராய்; விட்டகன் றனையோ?
[3]விஞ்சையில் தோன்றிய விளங்கிழை மடவாள்,
வஞ்சம் செய்தனள் கொல்லோ! அறியேன்
ஒருதனி அஞ்சுவென், திருவே வா"

எனச் சொல்லிக்கொண்டு, சுதமதியைத் தேடித் திரிய லானாள். நீர்த்துறைகள், மணற் குன்றங்கள், பெரும் பொழில்கள் ஆகிய இவ்விடந்தோறும் தேடினாள். எங்கும் அவளைக் காணாமையால், பெரிதும் அச்சமும் அவலமும் கொண்டு,

[4]குரல்தலைக் கூந்தல் குலைந்து பின்வீழ
அரற்றினள் கூஉய் அழுதனள் ஏங்கி
[5]வீழ்துயர் எய்திய [6]விழுமக் கிளவியின்,
தாழ்துயர் உறுவோள் [7]தந்தையை உள்ளி
"எம்இதிற் படுத்தும் [8]வெவ்வினை உருப்பக்
[9]கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து
வைவாள் [10]உழந்த மணிப்பூண் அகலத்து
ஐயாவோ" என்று

1. நடுக்குறூஉம் - நடுக்கம் கொள்ளும்.

2. எல்வளை - விளங்குகின்ற வளையினையுடையவளே.

3. விஞ்சையில் தோன்றிய - வித்தையால் தோன்றின.

4. குரல்தலைக் கூந்தல் - பூங்கொத்துக்களைச் சூடிய கூந்தல்.

5. வீழ்துயர் - மிக்க துயரம்.

6. விழுமக்கிளவி - துயரத்தைப் புலப்படுக்கும் சொல்.

7. தந்தை - கோவலன்.

8. வெவ்வினை உருப்ப - தீவினை வருத்த.

9. கோற்றொடி மாதர் - திரண்ட வளையணிந்த காதலியாகிய கண்ணகி.

10. உழந்த - வெட்டுண்டு வருந்திய.

அழலானாள். அவ்வாறு அழுபவள் முன்னர், புத்தனாகிய பெருந்தவ முனிவன் இருந்து அறம் உரைக்கும் தரும பீடிகையொன்று தோன்றுவதாயிற்று. இஃது,

> அறவோற்கு அமைந்த ஆசன மென்றே
> [1]நறுமலர் அல்லது பிறமரம் சொரியாது ;
> பறவையும் முதிர்சிறை பாங்குசென்று அதிராது ;
> தேவர்கோன் இட்ட மாமணிப் பீடிகை,
> [2]பிறப்பு விளங்கு அவிரொளி அறத்தகை ஆசனம்

ஒரு காலத்தே, நாகவேந்தர் இருவர் இப் பீடிகையைக் கண்டு, ஒவ்வொருவரும் தமக்கே உரியதெனக் கருதிக் கொண்டு எடுக்கலுற்று ஆற்றாராயினர். ஆயினும், அதன் பாற்கொண்ட ஆசையால் இருவரும் ஒருவரோடொருவர் பெருந்தானையுடன் நெருங்கிப் போர் செய்தனர். அது போழ்து, அவர்முன் புத்தர்பெருமான் தோன்றி, [3]"இருஞ் செரு ஒழிமின்; ஈது எமது," என்று சொல்லி, அதன் மீது இருந்து அறங் கூறினன். இது புத்த பீடிகையின் வரலாறு.

## 9. பீடிகை கண்டு பிறப்பு உணர்ந்த காதை

இவ்வண்ணம் தோன்றிய புத்த பீடிகையைக் கண்ட தும் மணிமேகலை தன்னை மறந்து, அதன் அருகே சென்று, தலைமேற் கைகுவித்து உவகையாற் கண்ணீர் சொரிந்து, வணங்கி அதனை மும்முறை வலம்வந்து வழிபட்டு நின்றாள். அந்நிலையே அவட்கும் பழம் பிறப்பின் செய்திகள் நினைவு வந்தன. உடனே, அவள்,

---

1. நறுமலர் அல்லது மரம் பிறசொரியாது - நறிய பூக்களைத் தவிர, ஏனை எவற்றையும் மரங்கள் உதிர்ப்பதில்லை.

2. பிறப்பு விளங்கு அவிர்ஒளி அறத்தகை ஆசனம் - அறவோர் காண்பார்க்குப் பழம்பிறப்பு விளங்குதற்கு ஏதுவாகிய ஒளி பொருந்திய வீற்றிருக்கும் அழகுடைய ஆசனம்.

3. இருஞ்செரு - மிக்க போர்.

[1]"தொழுதகை மாதவ, [2]துணிபொருள் உணர்ந்தோய்!
[3]காயங் கரையில்நீ உரைத்ததை யெல்லாம்,
[4]வாயே ஆகுதல் மயக்கற உணர்ந்தேன்."

காந்தார நாட்டுப் பூருவதேய மன்னனை மத்திபதி என்னும் அரசன் தன்னாட்டிற்கு நிகழவிருந்த பெருந்தீங்கினைப் பிரமதருமன் என்னும் முனிவனால் உணர்ந்து, தன்னாட்டு மக்களுடன் இடவயம் என்னும் தன் நகரின் நீங்கி, அவந்தி நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். ஒருகால் அவன் காயங்கரை என்னும் யாற்றின் கரையில் பாடியமைத்துத் தங்கியிருக்கையில், அம் முனிவன் கூறிய வாறே நாடு [5]நிலநடுக்கத்தால் கெட்டழியக் கேட்டறிந்து வருந்தினன் அப்போழ்து அம்முனிவன் மீண்டும் வந்து அவ்வரசனுக்கும், குடிமக்கட்கும் நல்லறம் உரைத்தனன். அந்நாளில்,

அரவக் கடலொலி அசோதரம், ஆளும்
இரவி வன்மன் ஒருபெருந் தேவி,
[6]அலத்தகச் சீறடி அமுதபதி வயிற்று
இலக்குமி என்னும் பெயர்பெற்றுப் பிறந்தேன்."
அத்தி பதியெனும் அரசன் பெருந்தேவி
சித்திபுரம் ஆளும் சீதரன் திருமகள்,
நீலபதி யெனும் நேரிழை வயிற்றில்,
காலை ஞாயிற்றுக் கதிர்போல் தோன்றிய

1. "தொழுதகை மாதவ"—இது முதல் மணிமேகலை முன்னைப் பிறவியில் தன் முன் தோன்றி நல்லவை கூறிய பிரமதருமன் என்னும் முனிவனை அப் பீடிகையில் எதிர்பெய்து கொண்டு கூறுகின்றாள். தொழுதகை மாதவ - யாவரும் தொழத்தக்க பெரிய தவத்தையுடைய பிரமதரும முனிவ.

2. துணிபொருள் - மெய்ப்பொருள்.

3. காயங்கரை - ஒரு யாறு.

4. வாய் - உண்மை.

5. நிலநடுக்கம் - பூகம்பம்.

6. அலத்தகச்சீறடி அமுதபதி - செம்பஞ்சூட்டிய சிறிய அடிகளையுடைய அமுதபதி என்க.

இராகுலன் [1]தனக்குப் புக்கேன்; அவனொடு
[2]பராவரு மரபின்நின் பாதம் பணிதலும்
எட்டிரு நாளில் இவ்விராகுலன் தன்னைத்
[3]திட்டிவிடம் உணும்; செல்உயிர் போனால்,
தீயழல் அவனொடு சேயிழை மூழ்குவை;
[4]ஏது நிகழ்ச்சி ஈங்கின்று; ஆதலின்,
[5]கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய
[6]தவாக்களி மூதூர்ச் சென்று பிறப்பெய்துதி;
அணியிழை, நினக்கு ஓர் [7]அருந்துயர் வருநாள்,
மணிமேகலா தெய்வம் வந்து தோன்றி,
அன்று அப்பதியில் ஆரிருள் எடுத்துத்
தென்திசை மருங்கில்ஓர் தீவிடை வைத்தலும்,
[8]வேக வெந்திறல் நாகநாட் டரசர்
[9]சினமாசு ஒழித்து [10]மனமாசு தீர்த்து ஆங்கு
[11]அறச்செவி திறந்து [12]மறச்செவி அடைத்துப்
[13]பிறவிப்பிணி மருத்துவன் இருந்தறம் உரைக்கும்

---

1. தனக்குப்புக்கேன் தனக்கு மனைவியாயினேன்.

2. பராவரும் மரபு - வழிபடும் முறைமை.

3. திட்டிவிடம் - கண்ணில் விடம் உடையதொரு பாம்பு.

4. ஏது நிகழ்ச்சி ஈங்கு இன்று - ஞானம் பிறத்தற்குரிய தகுதி இப்பிறப்பில் இல்லை.

5. கவேரகன்னி - காவிரி.

6. தவாக்களிமூதூர் - கெடாத செல்வக் களிப்பினையுடைய பழையவூராகிய காவிரிப்பூம்பட்டினம்.

7. அருந்துயர் - உதயகுமரனால் மணிமேகலைக் குண்டாவது போன்றிருக்கும் துன்பம்.

8. வேகவெந்திறல் - சினமும் மிக்க திறலுமுடைய.

9. சினமாசு - சினமாகிய குற்றம்.

10. மனமாசு - மனவழுக்காகிய காமமும் மயக்கமும்.

11. அறச்செவி - அறத்தைக் கேட்டற்குரிய காது.

12. மறச்செவி - பாவத்தைக் கேட்கும் காது.

13. பிறவிப்பிணி மருத்துவன் - பிறவி நோய்க்கு மருந்தாகிய ஞானமளிக்கும் புத்தன்.

[1]திருந்தொளி யாசனம் சென்றுகை தொழுதி.
அன்றைப் பகலே உன்பிறப் புணர்ந்தீங்கு
இன்று யான் உரைத்த உரைதெளிவாய் என

உரைத்தனை; அதுகேட்டு, என் காதலன் பிறப்பும் காட்டாயோ என்று வேண்டினேன். அதுபோது, அத்தீவிடை நின்னைக்கொண்டு சென்ற தெய்வம் தோன்றி, அவனைக் காட்டி, 'இவனே நின் கணவன்' என்று சொல்லுமென்று மொழிந்தனை. அத்தெய்வம் இன்னும் வந்திலதே'' என்று உரைத்து நின்று அழுதாள்.

## 10. மந்திரம் கொடுத்த காதை

மணிமேகலை தன் பழம் பிறப்புணர்ந்து நிற்கையில், அவளை அத்தீவில் விட்டுச்சென்ற மணிமேகலை தெய்வம் அப் புத்த பீடிகையைப் புத்தனாகவே கருதி,

உயிர்களெல்லாம் [2]உணர்வு பாழாகிப்
பொருள்வழங்கு [3]செவித்துளை தூர்ந்து அறிவிழந்த
[4]வறந்தலை உலகத்து [5]அறம்பாடு சிறக்கச்
[6]சுடர்வழக்கற்றுத் தடுமாறு காலையோர்
இளவள ஞாயிறு தோன்றியது என்ன,
நீயோ தோன்றினை; நின் அடி பணிந்தேன்;
நீயே ஆகி, நிற்கு அமைந்த இவ்வாசனம்
[7]நாமிசை வைத்தேன்; தலைமிசைக் கொண்டேன்,

1. திருந்தொளி ஆசனம் - அழகிய ஒளி விளங்கும் பீடிகை.
2. உணர்வு பாழாகி - அறிவு கெட்டு.
3. செவித்துளை - செவியில் நற்பொருளைக் கேட்கும் திறம்.
4. வறந்தலையுலகம் - வறுமையுற்ற உலகில் (அறிவு வறுமை).
5. அறம் பாடுசிறக்க - அறம் தோன்றி விளங்க.
6. சுடர்வழக்கு அற்று தடுமாறுகாலை-வெயிலவன் தோன்றுவதின்றி எப்போதும் இருளேயாகி யாவும் மயங்கும் காலத்து.
7. நாமிசை வைத்தேன் - நாவால் பரவுகின்றேன்.

என்று சொல்லி வணங்கி நின்றாள். அவளைக் கண்டதும், மணிமேகலை, அவள் அடியிற் பணிந்து, "நின் திருவருளால் என் பழம்பிறப்பை உணர்ந்தேன்; என் பெருங் கணவன் யாங்கு உளன்?" என்று கேட்டனள். மணிமேகலா தெய்வம், அவட்கு அவளது வரலாறு கூறத்தொடங்கி, "நீ முற்பிறப்பில் இலக்குமி யென்னும் பெயருடனிருந்தாய். நினக்குக் கணவன் இராகுலன் என்பவன். ஒருகால் அவன் நின்னொடுகூடி ஒரு பொழிலிடத்தே தங்கியிருக்கையில், அவனோடு நீ ஊடினை. அவன் நின்னைப் புலவி தீர்த்தற்கு அடிவீழ்ந்து வணங்கினன். அப்போழ்தில், சாது சக்கரன் என்னும் முனிவன் வான்வழியாக வந்து நிற்க, அவனைக் கண்டு நீ வணங்கினை; இராகுலன் உண்மை யுணராது நின்னை வெகுண்டான். அவனுக்கு நீ முனிவனது சிறப்புக்கூறி வணங்குவித்தனை. பின்பு அம்முனிவனை மீட்டும் வணங்கி,

> அமர,கேள் : [1]நின் தமர்அலம் ஆயினும்
> அந்நீர்த்தண்ணீர் அமுதொடு கொணர்கேன் ;
> உண்டி ; யாம் [2]உன் குறிப்பினம்

என்று உரைத்து உணவுகொடுத்து ஓம்பினை; அன்று நீ செய்த அறவினை நின்னைப் பிரியாது நின் பிறப்பை அறுப்பதற்குத் துணையாயிற்று.

> உவவன மருங்கில் உன்பால் தோன்றிய
> உதய குமரன் அவன், உன் இராகுலன் ;
> ஆங்கு அவன் அன்றியும் அவன்பால் உள்ள
> [3]நீங்காத் தன்மை நினக்கும் உண்டாகலின்,
> [4]கந்த சாலியின் கழிபெரு வித்துஓர்

---

1. நின்தமர் அலம் - யாம் உனக்குச் சிறந்த அன்புடையவர்களல்லேம்.

2. உன் குறிப்பினம் - உன் குறிப்பின்படியே நின்று ஒழுகுவேம்.

3. நீங்காத்தன்மை - எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கும் தன்மை.

4. கந்தசாலி - மிக்க மணமுள்ள ஒருவகை நெல்.

[1]வெந்துகு வெண்களர் [2]வீழ்வது போன்மென
அறத்தின்வித்து ஆங்கு ஆகிய உன்னை ஓர்
[3]திறப்படற்கு ஏதுவாச் சேயிழை! செய்தேன் ;

இன்னும் கேள் ; நினக்குமுன் பிறந்த தாரை, வீரை என்ற இரு மடந்தையரும் தத்தம் கணவன்மாருடன் கங்கைப்பேர் யாற்றங்கரையில் விளையாடிக்கொண்டிருக்கையில், அறவண வடிகள் வந்து சேர்ந்தனர். அவரை இம் மடந்தையர் வணங்கி வழிபட்டனர். அவர்கட்கு அடிகள், "மங்கையீர், யான் புத்தன் இருந்து அறம் உரைத்த குன்றின் அருகில் உள்ள பாதபங்கய மலையைத் தொழுது வலங்கொள்ள வந்தேன்; நீவிரும் சென்று வழிபடுமின்" என்று உரைத்தேகினர். அவரும் அவ்வாறே செய்து இப்பிறப்பில் மாதவியும் சுதமதியுமாயினர்," என்று இவ்வாறு கூறி அத் தெய்வம் மேலும் கூறத்தொடங்கி,

[4]"அறிபிறப் புற்றனை, [5]அறம்பா டறிந்தனை;
[6]பிறவறம் உரைப்போர் பெற்றியும் கேட்குவை;
பல்வேறு சமயப் [7]படிற்றுரை எல்லாம்
[8]அல்லியங் கோதை கேட்கும் அந்நாள்,
இளையள், வளையோள் என்று உனக்கு யாவரும்
விளைபொருள் உரையார்; வேற்றுரு எய்தவும்

1. வெந்துகு வெண்களர் - வெந்துகரிந்து உதிரும் வெண்மையான களர்நிலம்.

2. வீழ்வதுபோன்ம் - விதைக்கப்படுவது போலும்; நீ உதயகுமரனைச் சேர்வது, கந்தசாலியின் விதையைக் களர்நிலத்தே விதைப்பதுபோலப் பயனற்றுப்போம்.

3. திறப்படற்கு ஏதுவா - நல்ல நெறியிற் செல்வதற்கு ஏதுவாக.

4. அறிபிறப்பு - அறிதற்கு வேண்டியவற்றை அறியும் பிறப்பை.

5. அறம்பாடு - அறத்தின் தோற்றம்.

6. பிறவறம் உரைப்போர் பெற்றி - பிறசமய வாதிகளின் சமய அறங்கள்.

7. படிற்றுரை - பொய்யுரை.

8. அல்லியங்கோதை - மணிமேகலையே.

[1]அந்தரம் திரியவும் ஆக்கும் [2]இவ்வருந்திறல்
மந்திரம்கொள்க" என வாய்மையின் ஓதி,

முடிவில், "புத்தனருளிய திருவறம் எய்துதல் ஒருதலை"
இனி, நீ இப் புத்த பீடிகையை வணங்கி நின் ஊர்க்குச்
செல்க" என்று மொழிந்து அந்தரத்தே செல்லத் தொடங்
கிற்று.

அத் தெய்வம் சிறிது தொலைவு சென்று, சட்டெனத்
திரும்பிவந்து, "நினக்கு ஒன்று சொல்லமறந்தேன், கேள்"
என்று சொல்லி,

சிறந்த [3]கொள்கைச் சேயிழை, கேளாய் :
மக்கள் யாக்கை [4]உணவின் பிண்டம்;
இப்பெரும் மந்திரம் இரும்பசி அறுக்கும்

என்று ஒரு மந்திரத்தை வழங்கி, விசும்பு வழியாக மேற்

## 11. பாத்திரம் பெற்ற காதை

மணிமேகலா தெய்வம் நீங்கிய பின் மணிமேகலை
எழுந்து மணிபல்லவத்துள் செறியத் தோன்றிய வெண்
மணற் குன்றுகள், விரிபூஞ்சோலைகள் முதலிய காட்சிக்கு
இனிய இடங்களைக் கண்டுவந்தனள். இவ்வாறு ஒரு காவ
தத்தொலைவு இவள் திரிந்துவருகையில், அவளெதிரே தீவ
திலகை என்பவள் தெய்வக் கோலத்துடன் தோன்றினள்.
தீவதிலகை மணிமேகலையின் தனிமைகண்டு, [5]"இலங்கு
தொடி நல்லாய், நீ யார்?" என்று வினவினள். அவட்கு
மணிமேகலை,

---

1. அந்தரம் - வானம்.
2. அருந்திறல் - மிக்க வன்மை.
3. கொள்கை - ஒழுக்கம்; விரதமுமாம்.
4. உணவின் பிண்டம் - உணவினாலாகிய தசைப்பிண்டம்.
5. இலங்கு தொடி - விளங்குகின்ற வளையினையணிந்த.

எப்பிறப் பகத்துள் யார் நீ என்றது?
[1]பொற்கொடி யன்னாய், பொருந்திக் கேளாய்
போய பிறவியில் [2]பூமியங் கிழவன்
இராகுலன் மனையாள்: இலக்குமி [3]என்பேன்;
[4]ஆய பிறவியில் ஆடலங் கணிகை
மாதவி ஈன்ற மணிமேகலை யான்;
என் பெயர்த் தெய்வம் ஈங்கு எனைக் கொணர, இம்
[5]மன்பெரும் பீடிகை என்பிறப் புணர்ந்தேன்;
ஈங்கு என்வரவு இது; ஈங்கு எய்திய பயன் இது,

என்று தன் வரலாறுகூறி, அத்தீவதிலகையின் வரலாற்றை வினவினள். அதுகேட்ட தீவதிலகை, "இத்தீவிற்கு அயலே இரத்தினத்தீவு என்பதொன்றுண்டு; அதன்கண் சமந்தம் என்னும் மலையொன்றுளது. அதன் உச்சியில் புத்தர்பெருமானது திருவடி அமைந்திருக்கிறது. அதனைத் தொழுது வலங்கொண்டு வந்த யான், இங்குள்ள புத்த பீடிகைக்கு வந்தேன். என்னை இந்திரன் இங்கே இருத்தி இதனைக் காவல்புரிந்து வருமாறு கட்டளையிட்டான். யானும் அதுமுதல் இங்கே இதனைக் காத்துவருகின்றேன்; என்பெயர் தீவதிலகை என்பது" என்றாள்.

தீவதிலகையின் வரலாறுகேட்ட மணிமேகலை மனம் மகிழ்கையில், அத் தீவதிலகை மேலும் கூறலுற்றுப், "புத்தர்பெருமான் உரைத்த நல்லறத்தை யுணர்ந்து, அவன் வழங்கிய நோன்பினை மேற்கொண்டவர் இப் பீடிகையைக் கண்டு தொழுது தம் பண்டைப் பிறப்பை அறிந்துகொள்வர்," என்று உரைத்தாள். அதன்பின், இப் பீடிகையின் முன்னே கோமுகியென்னும் நீர்நிலையொன்று உளது. அதன்கண், ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் பதினான்

1. பொற்கொடி - காமவல்லிக்கொடி.
2. பூமியங்கிழவன் - அரசன்.
3. என்பேன் - என்று பெயர் கூறப்படுவேன்.
4. ஆய பிறவியில் - இப்போது ஆகிய இப்பிறப்பில்.
5. மன்பெரும் பீடிகை - மிக்க பெருமையான பாதபீடிகையால்.

காம் நாளாகிய விசாகத்தன்று, அமுதசுரபி என்னும் உண்கலமொன்று தோன்றுவதுண்டு. இந்நாள் அந்நாளாகும். நீ செல்வாயாயின், அக்கலம் நின்கையிடத்தே வந்து பொருந்தும்; அது முன்னாளில் ஆபுத்திரன் கையில்

ஆங்கு அதிற்பெய்த [1]ஆருயிர் மருந்து
வாங்குநர் கையகம் வருத்துத லல்லது,
தான் [2]தொலைவில்லாத் தகைமையதாகும்;
நறுமலர்க் கோதை! நின் [3]ஊராங்கண்
அறவணன் தன்பால் கேட்குவை இதன்திறம்

என்று மொழிந்தாள். மணிமேகலையும் உடனே எழுந்து சென்று பாதபீடிகையைத் தொழுது வலங்கொண்டு, கோமுகியையும் அவ்வாறே வணங்கித்தொழுது நின்றாள். சிறிது போழ்தில், தீவதிலகை மொழிந்த வண்ணமே, அமுதசுரபி என்னும் உண்கலம் தோன்றி, அவள் கையகத்தேவந்து பொருந்திற்று.

பாத்திரம் பெற்ற பைந்தொடி மடவாள்
[4]மாத்திரை யின்றி மனமகிழ் வெய்தி,
[5]மாரனை வெல்லும் வீர, நின்னடி,
[6]தீநெறிக் கடும்பகை கடிந்தோய், நின்னடி,
பிறர்க்கு அறம் முயலும் பெரியோய், நின்னடி,
[7]துறக்கம் வேண்டாத் தொல்லோய், நின்னடி,

1. ஆருயிர் மருந்து - சோறு.
2. தொலைவு - குறைதல்.
3. ஊர் ஆங்கண் - ஊரிடத்தே.
4. மாத்திரை - அளவு.
5. மாரன் - அறத்திற்கு மாறான ஆசைகளை மனத்தில் எழுப்பும் ஒரு தேவன். இவன் மன்மதன் அல்லன்.
6. தீநெறிக் கடும்பகை - பாவ வழிகளாகிய மிக்க பகை. பாவநெறி - ஒருவனைப் பகைவன்போலத் துன்பத்துக்குள்ளாக்குதலின் "கடும்பகை" யென்றார்.
7. அழிவில்லாத நிருவாணத்தை விரும்புதலால், அழியும் இயல்பினதான துறக்கம் வேண்டப்படாதாயிற்று.

[1]எண் பிறக்கொழிய இறந்தோய், நின்னடி;
[2]கண் பிறர்க்கு அளிக்கும் கண்ணோய், நின்னடி,
தீமொழிக் கடைத்த செவியோய், நின்னடி,
[3]வாய்மொழி சிறந்த நாவோய், நின்னடி,
[4]நரகர் துயர்கெட நடப்போய், நின்னடி,
[5]உரகர் துயரம் ஒழிப்போய், நின்னடி,
வணங்குத லல்லது வாழ்த்தல், என் நாவிற்கு
அடங்காது

என்று இவ்வாறு மணிமேகலை பரவினாள். தீவதிலகையும் அப் பாதபீடிகையைப் பணிந்து போற்றி, மணிமேகலைக்கு அவ்வுண்கலத்தின் உயர்வு சொல்லத் தொடங்கி,

"குடிப்பிறப் பழிக்கும், [6]விழுப்பம் கொல்லும்,
பிடித்த கல்விப் பெரும்புணை [7]விடூஉம்,
நாண் அணி களையும், மாண்எழில் சிதைக்கும்,
பூண்முலை மாதரொடு [8]புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி; அது தீர்த்தோர்,
[9]இசைச் சொல் அளவைக்கு என்நா நிமிராது"

என்று சொன்னாள். பின்பு, ஒருகாலத்தே பெரு வறம் உலகில் தோன்றி வருந்த, எவ்வுயிரும் பசிப்பிணியால் பெருந்துயர் உழப்ப, கோசிகமுனிவன், பசிமிகுதியால்

---

1. எண்பிறக்கு ஒழிய இறந்தோய் - மாந்தர் எண்ணமுடியாத உயர்நிலை யடைந்தோய். பிறக்குஒழிய - பிற்பட.

2. கண் - ஞானக்கண். கண்ணோய் - ஞானியே. இந்திரனுக்குக் கண்ணிரண்டும் கொடுத்த வரலாறு உண்மையின், கண்ணைக் கொடுத்தோய் என்றுமாம்.

3. வாய்மொழி - மெய்ம்மை.

4. நரகர் துயர் - நரகர் என்பவர்க்குற்ற துன்பம்.

5. உரகர் - நாகர். இவர் பண்டையில் பாம்பு வணக்கம் புரிந்த ஆரியர் கூட்டத்து ஒரு பிரிவினர் என்றும் கூறுப.

6. விழுப்பம் - பெருமை.

7. விடூஉம் - நீக்கும்.

8. புறங்கடை - வாயிற்புறத்தே.

9. இசை - புகழ்.

நாயூனைத் தின்ன முயன்று, அதனைப்பெற்று, முறைமைப் படி தொடக்கத்தே இந்திரனுக்குப் படைத்துப் பின் தான் உண்ணலுற்றான். உடனே இந்திரன் தோன்றி மழை வளம் சுரந்தான். அதன் பின்பே உலகில் வசியும் வளமும் பெருகின. அத் தேவனும் நல்ல சிறப்பைப் பெற்றான்.

> [1]ஆற்றுநர்க்கு அளிப்போர், [2]அறவிலை பகர்வோர்,
> [3]ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்,
> மேற்றே உலகில் [4]மெய்ந்நெறி வாழ்க்கை;
> [5]மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்,
> உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே

இவ்வாறு தீவதிலகை பசித்தோர்க்கு உணவு நல்கும் அறத்துறையின் பாங்கினை உரைக்க, மணிமேகலை, "முற் பிறப்பில், யான் சாது சக்கர முனிவனுக்கு உணவூட்டிய அறப்பயனால் இப் பிறப்பில் இச் சுரபியினையடைவேனாயி னேன். நிற்க, இந் நாவலந்தீவில் வெயிலென முனியாது புயலென மடியாது பசி நோயால் வருந்தி, பிறர் பிறர் இல்லந்தோறும் சென்று இரப்போர் பலர் உளர். அவர்க்கு உணவு தந்து அவர் முகம் குளிர்வதைக் காண வேட்கின் றேன்" என்று உரைத்தாள். அவட்கு அத் தீவதில கையும், "அன்னாய், இச் சுரபிதானும், அருள் மிகவுடைய சிறந்தோர்க்கல்லது, செவ்வனம் உணவு சுரவாது; இஃது அதன் இயல்பு; இதனை முன்பே சொல்ல மறந்தேன்" ?ள்.

சிறிது இவ்வாறு பேசியிருந்தபின் மணிமேகலை தீவ திலகைபால் விடைபெற்றுக்கொண்டு, புத்த பீடிகையை

1. ஆற்றுநர்க்கு அளிப்போர் - பிறர் செய்யும் மிகையினைப் பொறுக்கும் வன்மையாகிய செல்வர்க்கு உதவி செய்பவர்.

2. அறவிலை பகர்வோர் - பயன் நோக்கி உதவி செய்பவ ராவர்.

3. ஆற்றாமாக்கள் - மிக்க வறியர்.

4. மெய்ந்நெறி வாழ்க்கை - மெய்யாகிய அறநெறிக்கட் செலுத்தப்படும் வாழ்க்கை.

5. மண்திணி ஞாலத்து-அணுக்கள் செறிந்த நிலவுலகத்தில்.

வலம் வந்து வணங்கி, காவிரிப்பூம்பட்டினத்திற்கு வான் வழியாக வந்து சேர்ந்தனள். இவள் வருதற்குள் நாட்கள் ஏழு சென்றன. "மணிமேகலா தெய்வம் உரைத்தவாறு இன்னும் மணிமேகலை வந்திலளே" என்று மாதவியும் சுதமதியும் மனம் மயங்கியிருந்தனர். சடேரென மணி மேகலை அவர் முன்னே வந்து தோன்றி நின்றனள். அவ் விருவரும் அவளைத் தழுவி மகிழ்ச்சிமிக்கனர். அவர்கட்கு மணிமேகலை, நிகழ்ந்தது முற்றும் கூறி, அவர்தம் பழம் பிறப்பையும் எடுத்தோதலுற்று,

> இரவி வன்மன் ஒரு பெருமகளே,
> [1]துரகத் தானைத் துச்சயன் தேவி,
> அமுதபதி வயிற்று [2]அரிதின் தோன்றித்
> [3]தவ்வைய ராகிய தாரையும் வீரையும்
> [4]அவ்வைய ராயினீர் நும்மடி தொழுதேன்;
> வாய்வதாக மானிட யாக்கையின்
> தீவினை யறுக்கும் செய்தவம் நுமக்கு ஈங்கு
> அறவண வடிகள் தம்பால் [5]பெறுமின்
> செறிதொடி நல்லீர் உம்பிறப்பு ஈங்கிஃது

என்று சொல்லிவிட்டு, "இஃதோ, என் கையிலுள்ள அமுதசுரபி; பண்டு ஆபுத்திரன் கையகத்திருந்ததாகும்; இதனை நீவிரும் தொழுமின்" என்று மொழிந்தாள். அவர்களும் அவ்வண்ணமே செய்தனர். பிறகு மூவரும் அறவணவடிகளைக் கண்டு வணங்கற்குச் சென்றனர்.

1. துரகத்தானை - குதிரைப்படை.
2. அரிதின் தோன்றி - அருமையாகப் பிறந்து.
3. தவ்வையர் - தமக்கையர்.
4. அவ்வையர் - தாய்மார்.
5. பெறுமின் - அறிந்துகொண்மின்.

# 12. அறவணர்த் தொழுத காதை

மணிபல்லவத்திலிருந்து திரும்பிவந்து காவிரிப்பூம் பட்டினத்தையடைந்த மணிமேகலை, "அறவணவடிகள் எங்கே உள்ளார்?" என்று வினவிச்சென்று அவரை அடைந்தனள். அவர் நரைத்து முதிர்ந்த யாக்கையுடையார்; [1]நடுங்காத நாவினையுடையார்; அறம் உரைக்கும் அவ்வடிகளாரைக் கண்ட மணிமேகலை அவரை வலம்வந்து வணங்கித் தொழுதுநின்று, தான் சுதமதியுடன் மலர்வனம் புகுந்தது, உதயகுமரன் தன்னை நோக்கி வந்தது என்பன முதலாக, மணிபல்லவத்திற் புத்த பீடிகையைக் கண்டு பழம் பிறப் புணர்ந்தது, அமுதசுரபி பெற்றது ஈறாக நிகழ்ந்தவை அனைத்தையும் ஒன்றும் விடாது உரைத்தாள்.

இவற்றைக் கேட்டதும் அறவணவடிகள் மிக்க மகிழ்ச்சிகொண்டு "பொற்றொடி மாதராய், [2]நற்றிறம் சிறக்க" என வாழ்த்தி, மணிமேகலைக்குப் பழம் பிறப்பின் வரலாற்றைப் பற்றித் தானும் சில சொல்லல் தொடங்கினர். "யான் ஆதி முதல்வன் அடியிணையைப் பரவுதற்குப் பாதபங்கய மலைக்குச் சென்றேன். வழியில் ஒரு பொழிலில் கச்சய நாட்டரசன் துச்சயனைக் கண்டு, "மன்ன, நின்னோடு நின் தேவியர்க்குத் தீதின்றே?" என நலம் உசாவினேன். அவன் மனம் அழுங்கி, கண்கலுழ்ந்து 'களிமயக்கத்தால் வீரை யானைமுன் வீழ்ந்து இறந்தனள். அத்துயர் பொறுத தாரை, அரமிய முற்றத்தின்மேல் ஏறி, ஆங்கு நின்றும் வீழ்ந்து உயிர்துறந்தாள்,' என்றனன். அதுகேட்டு, யான், அரசே, இது பழவினைப்பயன்; நீ [3]பரியல் என்றேன். இன்று ஆடும் கூத்தியர்போல மாதவியும் சுதமதியும் மணிமேகலையுமாக நீவிர் வேற்றுருக் கொண்டு நிற்பதைக் காண்கின்றேன்" என்று கூறி, மேலும் கூறத்தொடங்கி,

---

1. நடுங்காத - பிழைபடாத.
2. நற்றிறம் - நல்ல கூறுபாடுகள்.
3. பரியல் - வருந்தாதே.

"பிறவியும் [1]அறவியும் பெற்றியின் உணர்ந்த
நறுமலர்க் கோதாய்! நல்கினை கேளாய்:
[2]தரும தலைவன் தலைமையின் உரைத்த
பெருமைசால் நல்லறம் பெருகா தாகி
இறுதியில் நற்கதி செல்லும் பெருவழி
அறுகையும் நெருஞ்சியும் அடர்ந்து [3]கண்ணடைத் தாங்குச்
[4]செயிர் வழங்கு தீக்கதி திறந்து கல்லென்று
உயிர்வழங்கு பெருநெறி ஒருதிறம்பட்டது;
[5]தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டிலம்
உண்டென வுணர்த லல்லது யாவதும்
கண்டு இனிது விளங்காக் காட்சிபோன்றது.

"இதனால் மக்கள் அறவுணர்வின்றி மெலிந்து தீமைகன்றிச் செய்து உழலுவாராயினர். இதனைக் கண்ட சக்கரவாளக் கோட்டத்துத் தேவரெல்லாம், துடிதலோகம் சென்று, ஆங்கு உறையும் பிரபாபாலன் என்னும் பெரியோன் திருவடியில் வீழ்ந்து குறையிரந்து நின்றனர். அவர் வேண்டுகோட்கு இசைந்து,

"இருள்பரந்து கிடந்த [6]மலர்தலை யுலகத்து
[7]விரிகதிர்ச் செல்வன் தோன்றினன் என்ன,
[8]ஈரெண் ணூற்றோடு ஈரெட்டாண்டில்
பேரறிவாளன் தோன்றும்;

"அதன்பின் அவனால், இவ்வுலகில்,

---

1. அறவி - அறத்தோடு கூடிய வழி. பெற்றியின் - முறைப்படி. நல்கினை - உவந்து.

2. தரும தலைவன் - புத்தன்.

3. கண் அடைத்தாங்கு - இடமெல்லாம் நிரப்பி அடைத்து விட்டாற்போல.

4. செயிர் வழங்கு தீக்கதி - குற்றம் நிலவும் துன்பக்கதி. உயிர்வழங்கு பெருநெறி - உயிர்களெல்லாம் செல்லும் வழி.

5. தண்பனி...மண்டிலம் - குளிர்ந்த பனியைப் போக்கிய சிவந்த கதிர்களையுடைய ஞாயிறு.

6. மலர்தலை யுலகம் - இடம் விரிந்த உலகம்.

7. விரி...செல்வன் - ஞாயிறு.

8. ஆயிரத்து அறுநூற்றுப் பதினாறும் யாண்டு. பேரறிவாளன் - புத்தன்.

"பெருங்குள மருங்கில் [1]சுருங்கைச் சிறுவழி
இரும்பெரு நீத்தம் புகுவது போல
[2]அளவாச் சிறுசெவி அளப்பரு நல்லறம்
உளமலி யுவகையோடு உயிர்கொளப் புகூஉம்,

"மேலும், அறம் உரைக்கும் திறலோனாகிய அந்தப் பெரியோன், இவ்வுலகில் தோன்றுங்கால்,

"திங்களும் ஞாயிறும் [3]தீங்குறா விளங்கத்
தங்கா நாண்மீன் தகைமையின் நடக்கும்;
வானம் பொய்யாது; மாநிலம் வளம்படும்;
ஊனுடை யுயிர்கள் உறுதுயர் காணா;
[4]வளிவலம் கொட்கும் மாதிரம் வளம்படும்;
[5]நளியிரு முந்நீர் நலம்பல தரூஉம்;
[6]கறவை கன்றார்த்திக் கலநிறை பொழியும்;
பறவை [7]பயன்துய்த்து உறைபதி நீங்கா;
விலங்குமக்களும் [8]வெரூஉப் பகைநீங்கும்

"அக்காலத்தே, அவன் உரைக்கும் அருளறத்தைக் கேட்டு ஒழுகுவோர் பிறவித்துன்பம் நீங்குவர். அப்பெருமானது அடியிணைகளைப் பிறவிதோறும் யான் மறவாது தொழுகின்றேன்.

"பின்னால் இவ்வூரின்கண் ஏதோ நிகழ்ச்சிகள் பல நிகழவிருக்கின்றன. அவை நிகழ்ந்தபின், நீ நல்லறம்

---

1. சுருங்கைச் சிறுவழி - சுருங்கையாகிய சிறிய வழி. சுருங்கை - மதகு.

2. அளவா - போதிய அளவிற்றாகாத. நல்லறம் புகூஉம் என இயைக்க.

3. தீங்குறா - மாறுபாடின்றி.

4. வளி...கொட்கும் - காற்று வலமாகச் சுழலும்.

5. நளியிருமுந்நீர் - நீர்செறிந்த பெரிய கடல்.

6. கன்று ஆர்த்தி - கன்றை உண்பித்து. கலநிறை பொழியும் - கறவைக்கலம் நிறைந்து வழியும்படி பொழியும்.

7. பயன் - பழம். "பழந்தேர் வாழ்க்கைப் பறவை" என்றார் பிறரும். உறைபதி - வாழுமிடம்.

8. வெரூஉப்பகை - அஞ்சுதற்குக் காரணமான பகை.

பல பெறுவாய். மாதவியும் சுதமதியும், முன் பிறவியில் பாதபங்கய மலையைப் பரசியவராதலால், இனி அவர்கள் அப் புத்தனது திருவடி தொழுது வினை நீங்கி நன்னெறிப் படர்வர். நீ ஆருயிர் மருந்தாகிய அமுதசுரபி பெற்றுளாய். அதுகொண்டு பசிப்பிணி தீர்க்கும் பேரறத்தைப் பண்ணுவாயாக" என்று இவ்வாறு அறவணவடிகள் மணிமேகலைக்கு அறம் உரைத்தார். இதனை மனம்கொள்ளக் கேட்ட மணிமேகலை, பசிப்பிணி தீர்க்கும் பெரும்பணியை மேற்கொண்டு ஆற்ற எழுந்தனள்.

## 13. ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை

வடநாட்டில் உள்ள காசி நகரத்துக்கு வாரணாசி என்னும் பெயருண்டு. அதன்கண் அபஞ்சிகன் என்னும் ஓர் பார்ப்பான் வாழ்ந்துவந்தான். அவன் மறை யோதுவிக்கும் தொழிலினன். அவனுடைய மனைவி சாலி யென்னும் பெயருடையவள். அவள் ஒருகால் தன் கற்புநிலையிழந்து கருப்பமுற்றாள். கணவனை வஞ்சித்த இக் குற்றத்துக்குக் கழுவாய் நாடி, தென்குமரியில் நீராடக் கருதித் தென்னாடு நோக்கி வந்துகொண்டிருந்தாள். பாண்டி நாட்டுக் கொற்கை நகருக்குத் தெற்கே ஒருகாவதத் தொலைவில் கோவலர் வாழும் ஒரு சிற்றூரில், ஒரு சோலையில் வயாவும் வருத்தமுமுற்று ஆண் குழந்தையொன்றைக் கருவுயிர்த்தாள்.

பிறந்த குழந்தையைக் கண்டும், அப் பார்ப்பனி மனம் சிறிதும தெளியாது, அதன்பால் அன்போ அருளோ இறையும் கொள்ளாது, அச்சோலையிலே தனிக்கவிட்டுச் சென்றொழிந்தாள். அங்கே தனித்துக்கிடந்த குழவியைப் பசுவொன்று கண்டு, அதன்பால் இரக்கமுற்றுத் தன் நாவால் நக்கித் தன் மடிசுரந்து பாலை ஊட்டி ஏழுநாள் வரையில் காத்து ஓம்பிவந்தது. கற்புச் சிறப்பில்லா அவ் வன்னெஞ்சப் பார்ப்பனியின் செயல் ஒருபுறமிருக்க, ஆவின் அருட்செயல் வேறொரு புறத்தே சிறக்க, அவ்

வழியே வந்த இளம்பூதி என்னும் அந்தணன் கண்டு, அக் குழவிபால் அன்புமிகக்கொண்டு, வயனங்கோடு என்னும் தன் ஊருக்கு எடுத்துச்சென்று தன் மனைவியுடன் தான் பெற்ற மகனாகவே கொண்டு வளர்த்து வரலானான். அம் மகனும் பார்ப்பார்க்குரிய நெறிமைப்படியே வளர்ந்து கலைபல வுணர்ந்து அறிவுமிகப்படைத்த நல்லாண்மகனாகச் சிறப்புற்றனன்.

இஃது இங்ஙனமாக, ஒருகால் மறையோதும் பார்ப்பனர் பலர்கூடிப் பசு வேள்வியொன்று செய்யலுற்றனர். அவ்வேள்வியிற் கொலை செய்வதற்காகக் கன்றீன்ற கறவை யொன்றைக் கொணர்ந்திருந்தனர். அக் கயவரது செயலை எவ்வாறோ உணர்ந்துகொண்ட அக்கறவை கதறிக் கத்திக் கண்ணீருகுத்து நின்றது. அதனைக் கண்ட இளம்பூதியின் வளர்ப்புச் சிறுவன், அக் கறவையின்பால் கழிபேரருள் கொண்டு, நள்ளிருட்போதில் அக் கறவையை வேறெங் கேனும கைக்கொண்டுபோகக் கருத்தில் எண்ணினான்.

அச் சிறுவன், தான் எண்ணியவண்ணமே, அந்நாள் இரவில், கறவையைக் களவினால் பற்றிக்கொண்டு ஒரு காட்டுவழியே போவானாயினான். பொழுது விடிந்ததும், பார்ப்பனர் தம் வேள்விக்குரிய கறவை காணாதுபோனமை கண்டு, அதனைத் தேடி நாற்புறமும் திரியலுற்றனர். அவருள் ஒருசிலர் இச் சிறுவன் செல்வதைக் கண்டறிந்து கொள்ளவே, அனைவரும் இக் காட்டிடத்துக்கு வந்து, இச் சிறுவனையும் கறவையையும் வளைந்து பற்றிக்கொண்டனர். இச் சிறுவனைப் பலவாறு வைதனர்; வளைந்துபற்றிக் கோல் கொண்டு அவனை நையப்புடைத்து வருத்தினர். அந் நிலையில், அக் கறவை வெகுண்டு, அப் பார்ப்பனருள் முன் னணியில் நின்ற வேள்வியாசானைத் தாக்கித் தன் கொம் பினாற் குத்திக் குடர்சரிந்து வீழச்செய்துவிட்டு ஓடி [illegible]

பாரபபனர் தன்னை மிகவும் அடித்து வருத்தியவழியும் அச் சிறுவன் மனச்சோர்வு கொள்ளாது, அவர்களை நோக்கி, “பார்ப்பனர்களே,

நோவன செய்யன்மின்; [1]நொடிவன கேண்மின்;
[2]விடுநில மருங்கில் படுபுல் ஆர்ந்து,
நெடுநில மருங்கில் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந் தூட்டும்
இதனொடு வந்த செற்றம் என்னை?

என்று வினவினன்; அதற்கு அவ்வேதியர்கள், நேரிய காரணம் உரைக்கும் நீர்மை இல்லாமையால்,

"பொன்னணி [3]நேமி வலங்கொள் சக்கரக்கை
மன்னுயிர் முதல்வன் மகன் எமக்கு அருளிய,
அருமறை நன்னூல் அறியாது இகழ்ந்தனை;
[4]தெருமரல் உள்ளத்துச் சிறியை; நீ அவ்
ஆமகன் ஆதற்கு ஒத்தனை; அறியா
நீ மகனல்லாய்'.

என இகழ்ந்து பேசத் தொடங்கினர்.

"இவன் மக்களினத்து மகனல்லன்; விலங்கினத்து ஆனின் மகன்" என்று அப் பார்ப்பனர் இகழ்ந்து பேச, "அது குற்றமன்று" என்றற்கு அச் சிறுவன்,

[5]"ஆன்மகன் அசலன்; மான்மகன் சிருங்கி;
புலிமகன் விரிஞ்சி; [6]புரையோர் போற்றும்

---

1. நொடிவன - சொல்லுவனவற்றை.

2. விடுநிலம் - மேய்ச்சலுக்காக அரசனால் விடப்பட்ட புல் வெளி. படுபுல் - தானே முளைத்துச் செழித்த புல். செற்றம் - பகைமை.

3. நேமி - வட்டம். நேமியையுடைய சக்கரம் என்க. முதல்வன் - திருமால். மகன் - பிரமன்.

4. தெருமரல் உள்ளத்து - தடுமாறுகின்ற நெஞ்சத்தை யுடைய. விலங்கு மகன் என இகழ்வார், "ஆன்மகனாதற்கு ஒத்தனை" என்றனர். மகனல்லாய் - ஆறறிவுடைய மகன் அல்லை.

5. ஆன்மகன் - ஆனுக்கு மகன். மான்மகன் - மானுக்கு மகன். அசலன், சிருங்கி, விரிஞ்சி முதலிய அந்தணர் முறையே ஆனுக்கும், மானுக்கும், புலிக்கும் பிறந்தவர் என்க.

6. புரையோர் - உயர்ந்தோர். கேசகம்பளன் என்பான் ஒரு முனிவன்.

நரிமகன் அல்லனோ கேசகம்பளன்;
ஈங்கிவர் நம்குலத்து இருடிகணங்கள் என்று
[1]ஓங்குயர் பெருஞ்சிறப்பு உரைத்தலும் உண்டால்,"

என அவர் கூற்றை மறுத்து, "ஆவொடுவந்த அழிகுல முண்டோ?" என்று அவர்கள் வாய் அடைப்புண்ணக் கடாவினன். யாவரும் பேசும் திறமின்றிப் பேதுறுகின்ற போது, வேறொரு பார்ப்பனன் பேசுதற்கு வேறு விரகு தெரியாது இச் சிறுவன் பிறப்பைப் பழிக்கத் தொடங்கி, "இவன் தன் பிறப்பு வரலாற்றினை யான் அறிகுவேன்; கேண்மின்" எனக் கூறலுற்றான்.

[2]"நடவை வருத்தமொடு நல்கூர் மேனியன்;
வடமொழி யாட்டி; மறைமுறை எய்திக்
குமரிபாதம் கொள்கையின் வணங்கி,
[3]தமரில் தீர்ந்த சாலியென் போள்தனை
'யாது நின்னூர்? ஈங்கு என்வரவு' என,
மாமறை யாட்டி வருதிறம் உரைக்கும்;
'வாரணாசி யோர் மாமறை முதல்வன்,
ஆரண வுவாத்தி அரும்பெறல் மனைவியான்;
பார்ப்பார்க்கு ஒவ்வாப் பண்பின் ஒழுகிக்
[4]காப்புக் கடைகழிந்து கணவனை இழந்தேன்;
[5]எறிபயம் உடைமையின் இரியல் மாக்களொடு
தெற்கட்குமரி ஆடிய வருவேன்
பொன்தேர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க்
காவதம் கடந்து கோவலர் இருக்கையின்

1. ஓங்குயர் - மிகவுயர்ந்த.
2. நடவை - நடந்து செல்லும் வழி.
3. தமர் இல் தீர்ந்த - தனக்கு உரியவர் இல்லத்தினின்றும் ஒழுக்கக் கேட்டால் நீங்கின.
4. காப்புக்கடை கழிந்து - கொண்ட கணவனது காவலைக் கடந்து (விபசாரம் செய்து).
5. எறிபயம் உடைமையின் - கண்டோர் வருத்துவர் என்னும் அச்சத்தால். இரியல் மாக்கள் - நீங்கிச் செல்லும் மாந்தருடன். ஆடிய - ஆடுவதற்கு. செழியன் - பாண்டியன்.

ஈன்ற குழவிக்கு இரங்கேனாகி
[1]தோன்றாத் துடவையின் இட்டனன் போந்தேன்;
செல்கதி யுண்டோ தீவினையேற்கு என்று
[2]அல்லலுற் றழுத அவள்மகன் ஈங்கு இவன்;
[3]சொல்லுதல் தேற்றேன் சொற்பயம் இன்மையின்
புல்லல் ஓம்பன்மின், புலைமகன் இவன்"

என்று மொழிந்தான். இது கேட்ட அச் சிறுவன், அப் பார்ப்பனரை இகழ்ந்து நோக்கி நகைத்து, "பார்ப்பன மாக்களே, உங்கள் குலமுறை கூறுவேன் : கேண்மின் :

முதுமறை [4]முதல்வன் முன்னர்த் தோன்றிய
[5]கடவுட் கணிகை காதலஞ் சிறுவர்,
அருமறை முதல்வர் அந்தணர் இருவரும்;
[6]புரிநூல் மார்பீர்! பொய்யுரை யாமோ?"

என்று சொல்லித் "தேவ வேசிமக்களான வசிட்டன், அகத்தியன் என்ற இருவரையும் மேற்கொண்டு அவர் வழியே வரும் பார்ப்பன மாக்களாகிய உங்கள் முறைமையே நோக்கின், என்னைப் பயந்த சாலிக்கு ஒரு குற்றமும் இல்லையாமன்றோ!" என அப் பார்ப்பனர் முகம் சுளித்துத் தலைகுனியுமாறு பேசி நகையாடி எள்ளினன். இதுகண்ட இளம்பூதி இச்சிறுவனைத் தன் மனையினின்றும் நீக்கிவிட்டான். அவன் பின், அவ்வூரிடத்து ஓடேந்திச் சோறு இரந்துண்பானாயினன். அவ்வூரில் வாழ்ந்த கன்மனப்

1. தோன்றா போந்தேன் - பிறர் கண்ணுக்குத் தோன்றாத படி வந்துவிட்டேன். துடவை - தோட்டம். இட்டனன் -

2. அல்லல் உற்று - துயர் மிகுந்து.

3. சொல்லுதல் தேற்றேன் - சொல்லிற்றிலேன். சொற்பயம் இன்மையின் - சொல்வதால் ஒரு பயனும் இல்லாமையால். புல்லல் ஓம்பன்மின் - தீண்டன்மின்.

4. முதல்வன் - பிரமன்.

5. கடவுட்கணிகை - திலோத்தமை. சிறுவர் இருவரும் என்க. இருவர் - வசிட்டனும் அகத்தியனும்.

6. புரிநூல் - பூணுநூல்.

பார்ப்பனர், அவன் சோறு இரக்கும் ஓட்டில் சோறு இடாது கல்லையும் மண்ணையும் எறியலுற்றனர்.

அவன் பின்பு அவ்வூரின் நீங்கி தென்மதுரை அடைந்தான். அங்கே சிந்தாதேவி கோயிலிலுள்ள பீடிகையில் தங்கி சோறு இரந்துண்டுவந்தனன். அவனேந்திய ஓட்டில் பெற்ற உணவை அவன் அவ்வூரிடத்தே இருந்து பசியால் வாடிய,

> [1]காணார், கேளார், கால்முடப் பட்டோர்,
> [2]பேணுநர் இல்லோர், பிணிநடுக் குற்றோர்,
> யாவரும் வருக என்று [3]இசைத்து உடனூட்டி,

அவருண்டொழிந்த மிச்சிலைத் தான் உண்டு, அதனையே தலைக்கு அணையாகவும் கொண்டு உறங்கியுறைவானாயினன்.

குறிப்பு:—இச் சிறுவனே, ஈங்குப் பார்ப்பனரால் ஆமகன் என இழித்துக் கூறப்பட்டானாயினும், மறுபிறப்பில் சாவகநாட்டில் ஒரு பசு வயிற்றிற் பிறந்து சிறக்கின்றானாதலின், நம் கதை இனிது செல்வதுவேண்டி ஆபுத்திரன் என்றே வழங்குகின்றோம்.

## 14. பாத்திரமரபு கூறிய காதை

இதுகாறும் தான் கூறிவந்ததை மிக்க ஆர்வத்தோடு கேட்ட மணிமேகலையை நோக்கி, அறவணவடிகள் அச் சிறுவனை ஆபுத்திரனது வரலாற்றை மேலும் கூறுகின்றார்.

மதுரை நகரிலுள்ள சிந்தாதேவி திருக்கோயிற் பீடிகையில் தங்கியிருந்த ஆபுத்திரன், மழைக்காலத்தில் ஒரு

1. காணார் - குருடர்.
2. பேணுநர் இல்லோர் - அகதிகள்.
3. இசைத்து - அழைத்து. உடனூட்டி - ஒருங்கே யிருந்து

நாள் நள்ளிரவில் இனிது உறங்கிக்கொண்டிருக்கையில், நெடுந்தொலைவு நடந்து பசியால் மெலிந்து சிலர் வந்து அவனை எழுப்பி, "ஐயனே, வயிறு காய் பெரும்பசியால் மிகவும் வருந்துகின்றோம்" என்று வணங்கி மொழிந்தனர். அவனோ ஏறாண் அல்லது வேற்றாண் இல்லாதவன்; அதனால், அவன் அவர் பசி களையும் வகையறியாது திகைத்தான் அப்போழ்தில் சிந்தாதேவி தோன்றி, அவனை

"எடா! [1]அழியல்; எழுந்து இது கொள்ளாய்;
நாடு [2]வறங்கூரினும் இவ்வோடு வறங்கூராது;
வாங்குநர் கையகம் வருந்துதல் அல்லது
தான் [3]தொலைவில்லாத் தகைமையது"

என்று மொழிந்து தன் கையிடத் திருந்ததொரு உணவுக் கலத்தை அவன் கையில் அன்போடு அளித்தது.

அதனைப் பெற்றதனால் பேருவகைக் கடல்மூழ்கிய ஆபுத்திரன், அத்தேவியைப் பரவி,

"[4]சிந்தா தேவி! செழுங்கலை [5]நியமத்து
[6]நந்தா விளக்கே! [7]நாமிசைப் பாவாய்!
வானோர் தலைவி! மண்ணோர் முதல்வி!
ஏனோர் உற்ற இடர்களைவாய்"

எனச் சொல்லித் தொழுது, தன்பால் பசித்து வந்தவரது பசிப்பிணி போக்கினன். அன்றுமுதல், அந்நகரினும்

1. அழியல் - வருந்தாதே. கொள்ளாய் - கொள்வாயாக.

2. வறம் கூரினும் - வறிதாய்விடினும். வறம் கூரா - வறுமையுறாது.

3. தொலைவு - குறைதல்.

4. சிந்தா தேவி - சிந்தா விளக்காகிய தேவி.

5. நியமம் - கோயில்.

6. நந்தா - அவியாத. கல்வெட்டுக்கள் "நுந்தா விளக்கு" என்பதும் இதுவே.

7. நாமிசைப்பாவாய் - நாவிடத்தே யிருந்து நல்ல சொற்களைச் சொல்விக்கும் தேவி.

அதனைச் சூழவிருந்த நாட்டிலும் பசிப்பிணி இலதாயிற்று. ஆபுத்திரனது அறப்பயனும் சிறந்து மிகுவதாயிற்று. அதனால் விண்ணுலக வேந்தனை இந்திரனது பாண்டு கம்பளம் அளங்கத் தொடங்கியது. இதனை யறிந்த அவ் விந்திரன், திரைந்து நரைத்து மூத்தாக தளர்ந்த மறையோ னொருவனைப்போல ஆபுத்திரன் முன்தோன்றி, "யான் இந்திரன்; நின் அறத்தின் சிறப்பை அறிந்தேன்; நீ வேண்டும் வரம் யாது? கேள், தருவேன்" என்றான். அவனை எள்ளி நகைப்பான்போல ஆபுத்திரன் விலாவறச் சிரித்து,

> [1]"ஈண்டுச் செய்வினை [2]ஆண்டு நுகர்ந் திருத்தல்
> [3]காண்தகு சிறப்பின் நும் கடவுள ரல்லது
> அறஞ்செய் மாக்கள் [4]புறங்காத்து ஓம்புநர்,
> நற்றவம் செய்வோர் [5]பற்றற முயல்வோர்
> [6]யாவரும் இல்லாத் தேவர் நன்னாட்டுக்கு
> இறைவ னாகிய பெருந்திறல் வேந்தே!
> வருந்தி வந்தோர் அரும்பசி களைந்து அவர்
> [7]திருந்துமுகம் காட்டும் என்தெய்வக் [8]கடிஞை

எனக்கு ஈது ஒன்றே அமையும்; நின்னால் தரப்படக்கூடிய உண்டியும் உடையும் பெண்டிரும் பிறவும் எனக்கு வேண்டா" என்று விளம்பினன்.

---

1. ஈண்டுச் செய்வினை - இவ்வுலகத்தே செய்யும் அறத்தின் பயனை.

2. ஆண்டு நுகர்ந்திருத்தல் - தேவருலகத்தே நுகர்ந்து கொண்டிருத்தலே.

3. காண்டகு சிறப்பின் - கண்டுகொண்டிருக்கும் சிறப்பினை யுடைய.

4. புறங்காத்து ஓம்புநர் - பிறரைப் பாதுகாப்பவர்.

5. பற்றற முயல்வோர் - இருவகைப்பற்றும் கெட முயல் பவர்.

6. யாவரும் - ஈவோரும் கொள்வோருமாகிய எவரும்.

7. திருந்து முகம் - உவகையால் மலர்ந்த முகம்.

8. கடிஞை - பிச்சைக்கலம்.

இச்சொற்களைக் கேட்டதும் இந்திரனுக்குச் சினம் தோன்றியது. "ஈத்துவக்கும் இன்ப மிகுதியால் இவன் இவ்வாறு மொழிகின்றான்; இனி, இந்நாட்டில் இவன்பால் உணவு ஏற்பார் இல்லாமாறு மழையும் விளைநலனும் மிக வுண்டாக்குவேன்" என்று நினைத்து, நினைத்த வண்ணமே செய்தனன். ஆபுத்திரனும் தன்பால் பசித்துப் போந்து உணவு கொள்வோர் இல்லாமை கண்டு ஊர்தோறும் உணவின்றி வருந்துவோர் உளரோ எனத் தேடித் திரிய லானான். பன்னிரண்டாண்டுகளாக மழையின்மையால் பெருவறம் கூர்ந்திருந்த பாண்டிநாட்டில், இப்போது பெரு வளம் சுரந்து பேரின்பம் செய்ததனால்,

[1]"விடரும் தூர்த்தரும் [2]விட்டேற் றாளரும்
[3]நடவை மாக்களும் நகையொடு வைகி
[4]வட்டும் சூதும் வம்பக் கோட்டியும்
[5]முட்டா வாழ்க்கையும் முறைமைய தாக,

பசித்தோரைத் தேடித் திரியும் ஆபுத்திரனை, "யார் இவன் என்றே யாவரும் இகழ்ந்தனர்." அதனால் அவன்,

[6]திருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள
[7]ஒருதனி வரூஉம் பெருமகன் போலத்
தானே தமியன் வருவோன் தன்முன்
[8]மாநீர் வங்கம் வந்தோர்

---

1. விடர் - தீயொழுக்கமுடைய காமுகர்.

2. விட்டேற்றாளர் - பிறரை இகழ்ந்து கடுஞ்சொல் சொல் லும் தீயவர்.

3. நடவைமாக்கள் - வழிச்செல்லும் தீயவர். நகை-அற்பர்.

4. வட்டு - உருண்டை யுருட்டியாடல். வம்பக்கோட்டி - பயனில் சொல் கூறித் திரிவோர் கூட்டம்.

5. முட்டா வாழ்க்கை - குறைவில்லாத வாழ்வு.

6. திருவின் செல்வம் - கண்டோர் மதிக்கத்தக்க பெருஞ் செல்வம்.

7. ஒருதனி - தன்னந்தனியாக. பெருமகன் - அரசன், இந்திரனுமாம். இந்திரன் செல்வம் முனிவன் சாபத்தால் கடல் கொள்ளப்பட்டதென்றொரு கதையுண்டு.

8. மாநீர் வங்கம் - கடலிற் செல்லும் கலம்.

சிலர் வந்து வணங்கி, "சாவக நாட்டில் பெயலின்மையால் உயிர்கள் பெரிதும் வருந்துகின்றன" என்றனர். அது கேட்டதும், ஆபுத்திரன்,

அமரர்கோன் ஆணையின் [1]அருந்துவோர்ப் பெறாது
[2]குமரி மூத்த என்பாத் திரமேந்தி
அங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
[3]வங்க மாக்களொடு மகிழ்வுட னேறி
[4]கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
[5]மால்இதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்
தங்கியது ஒருநாள்; தான் ஆங்கு இழிந்தனன்.

இழிந்து அம் மணிபல்லவத் தீவிடை அவன் திரிந்து கொண்டிருக்கையில், வங்கமாக்கள், அவன் வங்கம் ஏறிக் கொண்டனன் எனப் பிறழவுணர்ந்து போய்விட்டனர். திரிந்து போந்த ஆபுத்திரன் வங்கம் போய்விட்டதை யறிந்து மனம் அழிந்து,

அங்கு வாழ்வோர் யாவரும் இன்மையின்,
[6]மன்னுயிர் ஓம்பும் இம்மாபெரும் பாத்திரம்
என்னுயிர் ஓம்புதல் யானோ [7]பொறேஎன்;
[8]தவந்தீர் மருங்கில் தனித்துயர் உழந்தேன்;
சுமந்தென் பாத்திரம் என்றனன் தொழுது;

கோமுகி யென்னும் பொய்கைக்கண் அப்பாத்திரத்தை எறிந்து, "ஓராண்டில் ஒருநாளில் இது வெளிப்படுக; அது

1. அருந்துவோர் - உணவு ஏற்று உண்போர்.
2. குமரி மூத்த பாத்திரம் - வறிதே நெடுநாள் கிடந்த கலம்.
3. வங்கமாக்கள் - மரக்கலத்துக்கு உரியவர்.
4. கால் - காற்று.
5. மால் இதை - மரக்கலத்தின் பெரிய பாய்.
6. மன்னுயிர் - நிலைபெற்ற உயிர்கள்.
7. பொறேஎன் - விரும்பேனாயினேன்.
8. தவந்தீர் மருங்கில் - தீவினைப்பக்கத்தேனாய். பாத்திரம் சுமந்து என் - ஏற்போரில்லாதபோது இப் பாத்திரத்தைச் சுமத்தலால் பெறும் பயன் என்னை?

போது, அருளறம் பூண்டு ஆருயிரோம்பும் பெரியோர் உள ரெனில், அவர் கைக்கண் இது சென்று அமர்வதாக" எனக்கூறி உண்ணா நோன்பாற்றி உயிர்விட்டான். அக் காலத்தே சென்ற யான் அவனை வினவியபோது, அவன் எனக்கு இச்செய்தியைக் கூறினன். பின்பு, அவன் சாவக நாட்டை யாளும் பூமிசந்திரன் என்னும் வேந்தனுடைய கோல் நிழலில் இருந்த மண்முகன் என்னும் முனிவர னிடம் இருந்த ஆவின் வயிற்றில் பிறந்தான்.

## 15. பாத்திரங் கொண்டு பிச்சைபுக்க காதை

ஆபுத்திரனை ஈன்ற சாலியென்பவள் விட்டுப்போன பின், அவனை யாதரித்த பசு மறுபிறப்பில் சாவகநாட்டுத் தவளமலையிடத்தே வாழ்ந்த மண்முகன் என்னும் முனி வன்பால் பொற்கோடும் பொற்கொம்பும் உள்ள பசுவாய்ப் பிறந்து வாழ்ந்துவந்தது. அதன் வயிற்றில் பொற்றகட் டாலான முட்டையொன்றில் ஆபுத்திரன் சென்று தங்கி னன். இதனை முக்காலமும் உணர்ந்த அம்முனிவன் முன்பே அறிந்து இதன்பால்,

> மழைவளம் சுரப்பவும் மன்னுயி ரோம்பவும்,
> [1]உயிர்காவலன் வந்து ஒருவன் தோன்றும்;
> [2]குடர்த் தொடர் மாலை பூண்பா னல்லன்;
> [3]அடர்ப்பொன் முட்டை அகவையினன்...என்றான்.

பின்னர்,

> பிணிநோய் இன்றியும் பிறந்தறம் செய்ய,
> மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்;

1. உயிர் காவலனாகிய ஒருவன் வந்து தோன்றும் - உயிரைக் காக்கும் ஒருவன் வருவன்.

2. குடர்த்தொடர்மாலை - குடராகிய மாலை.

3. பொன் அடர் முட்டை அகவயினன் - பொன் தகட்டா லான முட்டையின் உள்ளிடத்தான்.

[1]தற்காத் தளித்த தகைஆ அதனை,
[2]ஒற்கா உள்ளத் தொழியா ததலின்,
ஆங்கவ் [3]வாவயிற்று அமரர்கணம் உவப்ப,
[4]தீங்கனி நாவல் ஓங்குமித் தீவினுக்கு
ஒருதா னாகி உலகு தொழத் தோன்றினன்.

இவன் பிறந்தநாள் புத்ததேவன் பிறந்த நாளாதலின்,

மண்ணக மெல்லாம் மாரி யின்றியும்,
[5]புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது.

இச்சிறப்பைக் கண்ட சக்கரவாளக் கோட்டத்தில் வாழும் மாதவர்கள் திரண்டுசென்று சுந்திற்பாவையை வினவினர். அவர்கட்கு அப்பாவை ஆபுத்திரனது தோற்றத்தைக் கூறி, ஏனைச் செய்திகளை அறவணவடிகள்பால் கேட்குமாறு விடுத்தது. அவர்கட்கு அவ்வடிகள் பின்வரும் செய்தியைக் கூறினன்.

[6]மண்ணாள் வேந்தன், மண்முக னென்னும்
[7]புண்ணிய முதல்வன் திருந்தடி வணங்கி,
'மக்களை யில்லேன்; மாதவன் அருளால்
பெற்றேன் புதல்வனை' என்று அவன் வளர்ப்ப,
[8]அரைசாள் செல்வம் அவன்பால் உண்மையின்,

1. தற்காத்தளித்த தகை ஆ - தன்னைப் பாலூட்டி வளர்த்த அழகிய ஆ.

2. ஒற்கா - ஒல்கா ; தளராத.

3. ஆ வயிற்று - ஆவின் வயிற்றில். அமரர்கணம் - தேவர் கூட்டம்.

4. தீங்கனி நாவல் - தீவிய கனிகளையுடைய நாவல் மரம். தீவு - நாவலந் தீவு.

5. புண்ணிய நன்னீர் - புண்ணியப் பொருளாகிய நல்ல நீர். பூ - வானவர் சொரியும் பூ.

6. மண் - மண்ணுலகம். வேந்தன் - பூமிசந்திரன் என்னும் அரசன்.

7. புண்ணிய முதல்வன் - புண்ணியத் தலைவனான முனிவன்.

8. அரைசு - அரசு.

ரா வேந்தன் ஆயினன்; அவன் தான்.
[2]துறக்க வேந்தன், துய்ப்பிலன் கொல்லோ!
[3]அறக்கோல் வேந்தன், அருளிலன் கொல்லோ!

இவ்வண்ணம் கூறிப்போந்த அறவணவடிகள், மணிமேகலையை நோக்கி,

[4]நலத்தகை யின்றி நல்லுயிர்க் கெல்லாம்
[5]அலத்தற் காலை யாகியது; ஆயிழை,
வெண்திரை தந்த அமுதை வானோர்
உண்டொழி மிச்சிலை [6]ஒழித்து வைத்தாங்கு
[7]வறனோ டுலகில் வான்துயர் கெடுக்கும்
அறனோடு ஒழித்தல், ஆயிழை, தகாது

என்று மொழிந்தார். அது கேட்டதும், மணிமேகலை தன்னைச் சூழ இருந்த தாயருடன் அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கி விடைபெற்று, பிக்குணிக் கோலத்துடன் பிச்சைப்பாத்திரம் கையில் விளங்கக் காவிரிப்பூம்பட்டினத்துப் பெருந்தெருவை அடைந்தாள். அவளைக் கண்ட ஊரவரும் பிறரும்,

உதய குமரன் உளம்கொண் டொளித்த
[8]மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்

1. நிரைதார் வேந்தன் - வரிசையுறத்தொடுத்த மாலை பணிந்த அரசன்.

2. துறக்க வேந்தன் - இந்திரன். துய்ப்பு - அவியுணவு.

3. அறக்கோல் - அறம் திரியாத செங்கோல்.

4. நலத்தகை - நற்பயன்; செல்வக்காலம்.

5. அலத்தற்காலை - வறுமைக் காலம். ஆகியது - உண்டா

6. ஒழித்துவைத்தாங்கு - பயன் படுத்தாது ஓரிடத்தே வறிதே வைத்ததுபோல.

7. வறன் ஓடு உலகில் - வறுமை விரியப் பரந்துள்ள உலகில். வான் துயர் - மிக்க துன்பம்.

அறனோடு ஒழித்தல் - அறம் செய்தற்குரிய அமுதசுரபி யாகிய ஓட்டினைப் பயன்படுத்தாது வைத்திருத்தல்.

8. மதுமலர்க் குழலாள் - தேனையுடைய பூவணிந்த கூந்தலையுடைய மணிமேகலை.

பிச்சைப் பாத்திரம் கையின் ஏந்தியது
[1]திப்பியம் என்றே சிந்தைநோய் கூர,

மனமகிழ்ச்சி மிகவுடையளாய், "பத்தினிப் பெண்டிர் இடும் பிச்சையை முதற்கண் ஏற்றல் பெருந்தகவாகும்" என்றனள். அவட்குக் காயசண்டிகை என்னும் விஞ்சையர் மகளொருத்தி,

[2]"குளன் அணிதாமரைக் கொழுமலர் நாப்பண்,
ஒருதனி ஓங்கிய [3]திருமலர் போன்று,
[4]வான்தரு கற்பின் மனையுறை மகளிரின்
தான் [5]தனி யோங்கிய தகைமைய ளன்றே
ஆதிரை நல்லாள்; அவள்மனை, இம்மனை ;
நீ [6]புகல் வேண்டும், நேரிழை!" என்றனள்.

இவ்வாறு முன்மொழிந்த காயசண்டிகை மேலே ஆதிரையின் வரலாற்றினைக் கூறலுறுகின்றாள்.

## 16. ஆதிரை பிச்சையிட்ட காதை

ஆதிரை யென்பவள் சாதுவன் என்னும் வணிகற்கு மனைவி. அவன் தொடக்கத்தே, கணிகைமகளிரின் காம வலைப்பட்டுத் தன் மனைவியைக் கைவிட்டொழுகினன்; அவன்பால் கள்ளுண்டல், கவறாடல் முதலிய தீச்செயல்கள் உளவாயின. அவற்றால் அவன் செல்வமிழந்து வறியனா

---

1. திப்பியம் - வியப்புத் தருவது.

2. குளன் அணி தாமரை - குளத்திடத்தே அழகுற மலர்ந்த தாமரை. நாப்பண் - நடுவே.

3. திருமலர் - அழகு சிறந்த தாமரைப்பூ.

4. வான் தரு கற்பு - மழை பெய்விக்கும் கற்பு.

5. தனி ஓங்கிய - நிகரறச் சிறந்த. தகைமையள் - தகுதியுடையள்.

6. புகல்வேண்டும் - விரும்பிச் செல்லவேண்டும்.

யினன். அவனாற் பேணப்பட்ட கணிகையரும் அவனைக் "காணமிலி" எனக் கையுதிர்க்தனர் பின்னர், அவன் தன் நிலையினை நினைந்து வருந்தி, வங்கம் போகும் வாணிகர் தம்முடன் தானும் சென்றனன். வழியில், அவன் ஏறிச் சென்ற வங்கம் தீவளியால் கடலில் கவிழ்ந்துவிட்டது. உடைகலப்பட்ட சாதுவன் ஒடிமரம் ஒன்றைப்பற்றி, நாகர் வாழும் தீவொன்றை யடைந்து உணர்வற்றுக் கிடந்தான்.

அவனைப்போல வேறோராற்றால் உயிர்தப்பிச் சென்றோர், ஆதிரைபால் நிகழ்ந்தது கூறி, சாதுவன் இறந்தான் என்றனர்.

> ஆதிரை நல்லாள் ஆங்கது தான்கேட்டு
> [1]ஊரீரே யோ! ஒள்ளழல் ஈமம்
> தாரீரோ எனச் [2]சாற்றினள் கழறி,
> சுடலைக் கானில் தொடுகுழிப் படுத்து,
> [3]முடலை விறகின் முளிஎரி பொத்தி,
> "மிக்க என்கணவன் வினைப்பயன் உய்ப்பப்
> புக்குழிப் புகுவேன்" என்று அவள்

நட வீழ்ந்தாள். வீழ்ந்தபோது,

> படுத்துடன் வைத்த [4]பாயற் பள்ளியும்,
> உடுத்த கூறையும் ஒள்ளெரி உறாஅது;
> [5]ஆடிய சாந்தமும், அசைந்த கூந்தலில்
> சூடிய மாலையும் [6]தொல்நிறம் வழாஅது;

1. ஊரீரேயோ - ஊரில் உள்ள சான்றோர்களே. ஈமம் - ப்டுக்கு.
2. சாற்றினள் - சொல்லினள்.
3. முடலை விறகு - முறுக்குண்டு கிடக்கும் விறகு. எரி பொத்தி - எரி மூட்டி. முளிஎரி - மிக்க நெருப்பு.
4. பாயற்பள்ளி - படுக்கையிடம். உடன்படுத்து வைத்த என இயைக்க. கூறை - புடைவை.
5. ஆடிய - பூசிக்கொண்ட.
6. தொல்நிறம் - பழைய நிறமும் ஒளியும். வழாஅது - கெடாமல்.

[1]விரைமலர்த் தாமரை ஒருதனி யிருந்த
[2]திருவின் செய்யோள் போன்று இனிதிருப்ப,

அவள் பெரிதும் கலக்கமுற்று,

தீயும் கொல்லாத் [3]தீவினை யாட்டியேன்,
யாது செய்வேன் என்று அவள் ஏங்கினள்;

ஏங்கலும், வானத்தே மெய்யொலி எழுந்து,

ஆதிரை, கேள்: உன் அரும்பெறற் கணவனை,
[4]ஊர்திரை கொண்டாங்கு உய்ப்பப் போகி,
[5]நக்க சாரணர் நாகா வாழ்மலைப்
பக்கம் சேர்ந்தனன்; பல்யாண்டு இரான்;
சந்திர தத்தன் எனுமோர் வாணிகன்
வங்கம் தன்னுடன் வந்தனன் தோன்றும்;
நின்பெருந் துன்பம் ஒழிவாய் நீ என

உரைத்தது. அதுகேட்டு மனந்தெளிந்து மகிழ்ந்த ஆதிரை தன் மனையகமடைந்து,

[6]கண்மணி யனையான் கடிதீங் குறுகெனப்
[7]புண்ணியம் முட்டாள்; பொழிமழை தரூஉம்
[8]அரும்பெறல் மரபின் பத்தினிப் பெண்டிரும்
விரும்பினர் தொழூஉம் [9]வியப்பின ளாயினள்.

---

1. விரை - மணம் கமழும்.
2. திருவின் செய்யோள் - திருமகளாகிய செய்யவள்.
3. தீவினையாட்டி - தீவினை செய்தவள்.
4. ஊர்திரை - ஒன்றன்பின் ஒன்றாக ஊர்ந்து செல்லும் அலைகள். உய்ப்ப - செலுத்த.
5. நக்க சாரணர் - உடையில்லாமல் திரிபவர். இதனால் நாகர் "நக்க சாரணர் நாகர்" எனப்படுகின்றனர்.
6. கண்மணி யனையான்-கண்ணினுள்ள மணியொப்பவனான கணவன்.
7. புண்ணியம் முட்டாள் - புண்ணியம் செய்தலில் குறை யாளாய்.
8. அரும்பெறல் மரபு - பெறுதற்கரிய முறைமை (கற்பு).
9. வியப்பினள் - தகுதியுடையவள். பெண்டிரும்; உம்மை, உயர்வு சிறப்பு.

இவ்வாறு ஆதிரையின் செயல்வகை கூறிய காயசண்டிகை, நாகர் தீவடைந்த சாதுவன் செயலைக் கூறலுற்று, நாகர் தீவில் மலைப்பக்கத்தே உணர்வற்றுக்கிடந்த சாதுவனை ஆங்கே வந்த நாகர் சிலர் கண்டு, தமக்கு அவனது உடம்பு நல்லுணவாமென்று கருதி யெழுப்பினர். எழுந்த சாதுவன் அவர் மொழியை நன்கறிந்தவனாதலின், அவருடன் இனிதே சொல்லாடினன். அவர்கள் அவனைத் தொழுது, "இங்கே எம் தலைமகன் உளன்; அவன்பால் நீ போந்தருள்" என்றனர். சாதுவன் அதற்கு இசைந்து அவருடன் நாகர் தலைவன்பால் சென்றனன்.

> கள்ளடு [1]குழிசியும் கழிமுடை நாற்றமும்
> வெள்ளென் [2]புணங்கலும் விரவிய இருக்கையில்,
> [3]எண்குதன் பிணவோ டிருந்தது போலப்
> பெண்டுடன் இருந்த

நாகர் தலைவனைச் சாதுவன் கண்டான். அவன் வரவு வினவி, நிகழ்ந்தது கேட்டு, சொல்லாட்டால் அன்பு கொண்டு, இச்சாதுவன்,

> [4]அருந்துதல் இன்றி அலைகடல் [5]உழந்தோன்;
> வருந்தினன்; அளியன். வம்மின், மாக்காள்;
> நம்பிக்கு இளையளோர் நங்கையைக் கொடுத்து,
> [6]வெங்களும் ஊனும் வேண்டுவ கொடும்

என்று உரைத்தான்.

சாதுவன் :—

[7]வெவ்வுரை கேட்டேன்; வேண்டேன்.

---

1. குழிசி - பானை. கழிமுடை நாற்றம் - மிக்க புலால் நாற்றம்.
2. உணங்கல் - வற்றல்.
3. எண்கு - கரடி. பிணவு - பெண்கரடி.
4. அருந்துதல் - உணவு.
5. உழந்தோன் - துன்புற்றான்.
6. வெங்கள் - புளிப்புமிக்க கள்; விரும்பத்தகும் கள்ளுமாம்.
7. வெவ்வுரை - கொடிய சொல்.

நாகர் தலைவன் முகஞ் சுளித்து :—

> பெண்டிரும் உண்டியும் இன்றெனில் மாக்கட்கு
> உண்டோ [1]ஞாலத்து உறுபயன் ? உண்டெனில்,
> காண்குவம், யாங்களும்; காட்டுவா யாக.

சாதுவன் :—

> மயக்கும் கள்ளும் மன்னுயிர் [2]கோறலும்
> [3]கயக்கறு மாக்கள் கடிந்தனர், கேளாய் :
> பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
> உறங்கலும் விழித்தலும் போன்றது உண்மையின்,
> நல்லறம் செய்தோர் நல்லுல கடைதலும்,
> அல்லறம் செய்வோர் அருநர கடைதலும்
> உண்டென வுணர்தலின், [4]உரவோர் களைந்தனர் ;
> கண்டனை யாக.

நா. தலைவன் :—(நகைத்து)

> உடம்புவிட்டோடும் உயிர் உருக்கொண்டு ஓர்
> இடம்புகும் என்றே எமக்கு ஈங்கு உரைத்தாய் ;
> அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும் ? அவ்வகை,
> [5]செவ்வனம் உரை.

சாதுவன் :—இது கேள்,

> [6]உற்றதை யுணரும் உடல்உயிர் வாழ்வுழி ;
> [7]மற்றைய வுடம்பே, மன்னுயிர் நீங்கிடின்,

---

1. ஞாலத்து உறுபயன் - உலகத்து உயிர் வாழ்தலாலாகும் பயன்.
2. கோறல் - கொல்லுதல்.
3. கயக்கறுமாக்கள் - தயங்குதல் இல்லாத அறிவுடையோர். கடிந்தனர் - விலக்கினர்.
4. உரவோர் - அறிவுடைய பெரியோர்.
5. செவ்வனம் - தெளிவாக.
6. உயிர்வாழ்வுழி உடல் உற்றதை யுணரும் என்க. உற்றது- உடலிற் பட்டது.
7. உடம்பு தடிந்து, எரியூட்டினும் உணராது என்க.

[1]தடிந்தெரி யூட்டினும் தானுண ராதெனின்,
உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர், நீ.
[2]போனார் தமக்கோர் புக்கில் உண்டென்பது
யானோ அல்லேன், யாவரும் உணர்குவர்;
உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்
கடந்து [3]சேண்சேறல் கனவினும் காண்குவை;
ஆங்கனம் போகி அவ்வுயிர் செய்வினை
[4]பூண்ட யாக்கையில் புகுவது தெளி, நீ.

நா. தலைவன் :—(வணங்கி)

கள்ளும் ஊனும் கைவிடின் இவ்வுடம்பு
உள்ளுறை வாழுயிர் [5]ஓம்புத லாற்றேன்;
[6]தமக்கொழி மரபின் சாவுறு காறும்
எமக்காம் நல்லறம் எடுத்துரை.

சாதுவன் :—

நன்று சொன்னாய் நன்னெறி [7]படர்குவை
உன்தனக்கு ஒல்லும் நெறியறம் உரைக்கேன்;
உடைகல மாக்கள் உயிருய்ந் தீங்குறின்
[8]அடுதொழில் ஒழிந்து அவர் ஆருயி ரோம்பி
[9]மூத்து விளிமா ஒழித்து எவ்வுயிர் மாட்டும்
[10]தீத்திறம் ஒழிக.

---

1. தடிந்து - குறைத்து (வெட்டி).
2. போனார் - போன உயிர். புக்கில் - புகுமிடம்.
3. சேண் சேறல் - நெடுந்தொலைவு போதல்.
4. பூண்ட யாக்கை - உயிர் நிற்றற்குக் கொண்ட உடம்பு.
5. ஓம்புதல் தேற்றேன் - காத்தலைச் செய்யேன்; இழந்துவேன் என்பதாம்.
6. தமக்கு ஒழிமரபின் நல்லறம் என இயைக்க. தமக்கென்றே வரையறுத்த முறைமையினையுடைய நல்லறம்.
7. படர்குவை - செல்வாய்.
8. அடுதொழில் - கொல்லுதல்.
9. மூத்துவிளிமா - முதுமையுற்று இறக்கும் உயிர்கள்.
10. தீத்திறம் - கொலைத்தொழில்.

இவ்வறங்களைக் கேட்ட நாகர் தலைவன் பெருமகிழ்வு கொண்டு, வேண்டும் பொன்னும் பொருளும் மிக நல்கினன். அவற்றைப் பெற்ற சாதுவன் சந்திரதத்தன் என்னும் வணிகனது வங்கமேறி இந்நகரை யடைந்து தன் மனைவி ஆதிரையுடன் நல்லறம் செய்து வருவானாயினன்; இவ்வாதிரைபால் பிச்சை பெறுவாயாக எனக் காயசண்டிகை சொல்லி முடித்தாள். அவ்வண்ணமே மணிமேகலை ஆதிரை இல்லின்முன் "புனையா ஓவியம்" போல நின்றனள். ஆதிரை நல்லாளும் அவளது பிச்சைப்பாத்திரம் நிறையச் சோறு பெய்தாள்.

## 17. உலக அறவி புக்க காதை

ஆதிரையிட்ட பிச்சையுடன் சென்ற மணிமேகலை பசிநோய் வருத்த வருந்தும் மக்கள் பலர்க்கும் உணவு இட்டு வரலானாள். அதனால், அப்பாத்திரத்துப் பிச்சை குறையாது நிறைந்து நின்றது கண்டு, காயசண்டிகை,

> [1]நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
> [2]அடலரு முந்நீர் அடைத்த ஞான்று,
> குரங்கு கொணர்ந் தெறிந்த [3]நெடுமலை யெல்லாம்
> [4]அணங்குடை யளக்கர் வயிறு புக்காங்கு
> இட்டது ஆற்றாக் கட்டழற் கடும்பசிப்
> பட்டேன், என்றன் பழவினைப் பயத்தால்;

1. நெடியோன் - திருமால். மயங்கி - அம்பரீடனுக்கு முனிவர் இட்ட சாபத்தை யேற்றதனால் மயங்கி.

2. அடலரு முந்நீர் - தடுத்தற்கரிய கடல்.

3. நெடுமலை - நெடும் பாறைகள்.

4. அணங்குடை யளக்கர் - முழங்குதலையுடைய கடல். முழங்குகடலை, வருத்தத்தால் புலம்புவதாகக் கருதிக் கூறுதலின், " அணங்குடை யளக்கர் " என்றாள். பட்டேன் - வருந்தினேன்.

அன்னை, கேள்நீ. [1]ஆருயிர் மருத்துவி!
[2]துன்னிய என்நோய் துடைப்பாய் என்றனள்.

மணிமேகலை அங்ஙனமே சோறிடலும், காயசண்டிகை கொண்டிருந்த யானைத்தீ என்னும் பசிநோய் நீங்கிற்று. அவள் நெஞ்சு குளிர்ந்து, தனக்கு அந் நோயுண்டான காரணத்தைக் கூறலுற்றாள்.

வெள்ளிமலையின் பகுதியாகிய சேடி மலையில் உள்ள காஞ்சனபுரத்து வித்தியாதர மகளாகிய யான், என் கணவனுடன் பொதியில்மலையைக் காண்டற்கு வந்துகொண்டிருந்தேன். வழியில் ஓர் யாற்றில் என்னை யிருத்தி என் கணவன் கனி கொணரச் சென்றான். அங்கே விருச்சிகன் என்னும் மாதவன் பன்னீராண்டிற் கொருமுறை பழுக்கும் நாவற்கனி யொன்றைக் கொண்டுவந்து தேக்கிலையில் வைத்து நீராடச் சென்றான். அதன் உண்மைநிலையுணராது செருக்கிச் சென்ற யான், அக்கனியைக் காலால் எற்றிச் சிதைத்தேன். திரும்பிப்போந்த விருச்சிகன் என் செயலைக் கண்டு சினந்து,

சீர்திகழ் நாவலில் [3]திப்பியமானது,
ஈராறாண்டில் ஒருகனி தருவது
அக்கனி யுண்டோர் ஆறீராண்டு
மக்கள் யாக்கையின் வரும்பசி நீங்குவர்;
பன்னீராண்டில் ஒருநா ளல்லது
உண்ணா நோன்பினேன் உண்கனி [4]சிதைத்தாய்:
[5]அந்தரஞ் செல்லும் மந்திரம் இழந்து

---

1. ஆருயிர் மருத்துவி - ஆருயிர்கட்கு மருந்தாகிய உணவு அளிப்பவள். உயிர்கள் எய்தும் நோய்வகை யெவற்றிற்கும் பெரிய நோய் பசியாதலின், அது நீக்கும் உணவை, "ஆருயிர் மருந்து" என்றும், அதனைத் தருபவளாதலின், "ஆருயிர் மருத்துவி" யென்றும் கூறினாள்.

2. துன்னிய - நெருங்கி நீங்காது நின்ற.

3. திப்பியமானது - தெய்வத் தன்மையுடையது.

4. சிதைத்தாய் - காலால் இடறிக் கெடுத்தாய்.

5. அந்தரம் செல்லும் - வானத்தூடு செல்லும்.

[1]யால் தனித்துய ருழந்து
மூன்றா லாண்டில் முதிர்கனி நானீங்கு
உண்ணும் நாள்உன் உறுபசி களைக

எனச் சாபமிட்டகன்றான். பின்பு வந்த என் கணவன் என் அறியாமைக்கிரங்கி, வருந்தி, முடிவில்,

[2]சம்புத் தீவினுள் தமிழக மருங்கில்
[3]கம்பமில்லாக் கழிபெருஞ் செல்வர்,
ஆற்றுமாக்கட்கு ஆற்றுந் துணையாகி,
நோற்றோர் உறைவதோர் [4]நோனகர் உண்டால்;
பலநாளாயினும் [5]நிலனொடு போகி,
அப்பதிப் புகுக,

என்று கூறிவிட்டுப் பிரிந்தனன். யானும் இந்நகரை யடைந்து இங்கு வதிவேனாயினேன். இந்திரவிழாக் காலத்தே என் கணவன் போந்து என்னைக் கண்டு ஏகுவது வழக்கம். இன்று நீ போந்து என் பசித்துயர் களைந்து பண்டையியல்பு பெறுவித்தாய். இனி யான் என் நகர்க்குச் செல்வேன். நீ இந்நகரில் உள்ள சக்கரவாளக் கோட்டத்து உலகவறவிக்குச் சென்று, அங்கே,

[6]ஊரூராங்கண் உறுபசி யுழந்தோர்,
[7]ஆரும் இன்மையின் அரும்பிணி யுற்றோர்,

---

1. தந்தித்தீ - யானைத்தீ என்னும நோய்.

2. சம்புத்தீவு - நாவலந்தீவு.

3. கம்பம் - நடுக்கம்; ஈண்டுக் கேட்டின் மேற்று. கழி பெருஞ் செல்வர் - மிக்க பெரிய செல்வமுடையோர்.

4. நோன்நகர் - அடுத்தாரைத் தாங்கும் வன்மை படைத்த நகரம் (காவிரிப்பூம்பட்டினம்).

5. நிலனொடுபோகி - நிலத்தே நடந்து சென்று.

6. ஊரூராங்கண் - ஊர்தோறும்.

7. ஆரும் - பாதுகாப்போர் ஒருவரும்.

[1]இருவோர்த் தேர்ந்தாங்கு இருப்போர் பலரால்;
[2]வடிவாழ் கூந்தல்! அதன்பாற் போகுக

என்று சொல்லிவிட்டு அக் காயசண்டிகை போய்விட்டனள்.

அவள் சொல்லியவண்ணமே, மணிமேகலை அவ்வுலக அறவிக்குச் சென்று, சம்பாபதி கோயிலை யடைந்து மும்முறை வலம் வந்து வணங்கிப் பின் கந்திற்பாவையைக் கைதொழுது, பசித்த மாக்கட்குப் பேருணவு வழங்கி அவர் பசிநோய் தீர்க்கும் பெருந்தொண்டு புரிந்துவரலானாள்.

## 18. உதயகுமரன் அம்பலம் புக்க காதை

மணிமேகலை இவ்வாறு பிச்சையேற்றளிக்கும் பேரறத் துறவியாய் ஒழுகுகின்ற செய்தி, சித்திராபதி என்னும் மாதவியின் தாய்க்கு எட்டியது. பெரும்புண்ணில் எரி செருகியதுபோல், அஃது அவள் நெஞ்சில் பெருந்துயரைச் செய்தது. அதனால் அவள், ஏனை நாடக மகளிரை நோக்கி,

கோவலன் இறந்தபின் [3]கொடுந்துயர் எய்தி
மாதவி [4]மாதவர் பள்ளியுள் அடைந்தது
[5]நகுதக் கன்றே, நல்நெடும் பேரூர்;
இது [6]தக் கென்போர்க்கு எள்ளுரை யாயது;
[7]காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்

1. இருவோர் - உணவு இருவோர். தேர்ந்து - நோக்கி.
2. வடிவாழ் கூந்தல் - வகிர்ந்த கூந்தலையுடைய மணிமேகலையே.
3. கொடுந்துயர் - மிக்க துன்பம்.
4. மாதவர் பள்ளி - அறவணவடிகள் உறையுமிடம்.
5. நகுதக்கன்று - பிறர் எள்ளி நகைத்தற்குரிய தொன்றும்.
6. தக்கு - தக்கது. எள்ளுரை - இகழ்ச்சியுரை.
7. காதலன் வீய - கோவலன்

[1]போதல் செய்யா உயிரொடு புலந்து,
[2]களியிரும் பொய்கை யாடுநர் போல
[3]முளியெரிப் புகூஉம் முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டி ரல்லேம்; பலர்தம்
[4]கைத்தூண் வாழ்க்கை கடவியம் அன்றே;
பாண்மகன் பட்டுழிப் படூஉம் [5]பான்மையின்,
யாழினம் போலும் இயல்பினம்; அன்றியும்,
[6]நறுந்தா தூண்டு நயனில் காலை
[7]வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்;
[8]வினையொழி காலைத் திருவின் செல்வி
அனையே மாகி ஆடவர்த் துறப்பேம்,
தாபதக் கோலம் தாங்கினம் என்பது
யாவரும் நகூஉம் இயல்பினது அன்றே!
மாதவி ஈன்ற மணிமே கலைவல்லி,
[9]போதவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய
உதய குமரனும் உலகாள் வண்டின்
[10]சிதையா வுள்ளம் செவ்வியின் அருந்த,
கைக்கொண் டாங்கவள் ஏந்திய [11]கடிஞையைப்

1. போதல் செய்யா - நீங்காத.

2. களியிரும் பொய்கை - மிக்க நீர் நிறைந்த பொய்கை.

3. முளியெரி - மிக்க தீ. முதுகுடி - பழங்குடி.

4. கைத்தூண் வாழ்க்கை கடவியம் - கையிடத்ததாகிய உணவைப் பெற்றுண்டு வாழும் தகுதியுடையோம்.

5. பான்மையின் - முறைமையுடைய.

6. நறுந்தாது - நறிய தேன். நயன் - தேனாகிய பசை.

7. வறும்பூ - தேன் இல்லாத வறிய பூ.

8. வினையொழிகாலை - நல்வினைப்பயன் தீரும் காலத்தே தானும் நீங்கிவிடும்.

9. போது அவிழ் செவ்வி - மணத்துக்குரிய சமயம். மணிமேகலையை வல்லியென்றதனால், அவள் மணத்துக்குரிய செவ்வி எய்திய நிலையை, "போதவிழ செவவி" யென்றாள். உதயகுமரனும் வண்டு என்க.

10. சிதையா உள்ளம் - வேறொன்றால் அழியாத உள்ளம்.

11. கடிஞை - பிச்சைக்கலம்.

[1]பிச்சை மாக்கள் பிறர்கைக் காட்டி
பற்றுஅவன் தன்னால் மணிமே கலைதனைப்
பொற்றேர்க் கொண்டு போதே னாகில்,
[2]சுடுமண் ஏற்றி அரங்குசூழ் போகி
[3]வடுவொடு வாழும் மடந்தையர் தம்மோ
ரனை யே னாகி அரங்கக் கூத்தியர்
[4]மனையகம் புகாஅ மரபினன்

என்று வஞ்சினங்கூறி, இளங்கோவாகிய உதயகுமரன் இருந்த பேடகத்தை யடைந்தாள். ஆங்கே,

[5]அரவ வண்டொடு தேனின மார்க்கும்
[6]தருமணல் ஞெமிரிய திருநாறு ஒருசிறைப்
பவழத் தூணத்துப் பசும்பொற் செஞ்சுவர்த்
திகழொளி நித்திலச் சித்திர விதானத்து,
விளங்கொளி பரந்த பளிங்குசெய் மண்டபத்து,
[7]துளங்குமா னூர்தித் தூமலர்ப் பள்ளி
[8]வெண்டிரை விரிந்த வெண்ணிறச் சாமரை
கொண்டுஇரு மருங்கும் [9]கோதையா வீச,

---

1. பிச்சைமாக்கள் - பிச்சையெடுத்துண்பவர்.

2. சுடுமண் - செங்கல். அரங்கு - நாடகவரங்கு.

3. வடு - குற்றம் குடிக் குற்றப்பட்ட மகளிர் தலைமேல் செங்கல் ஏழு ஏற்றி அரங்குசூழ வருவித்தல் பண்டைமரபு.

4. மனையகம் புகா மரபினன் - மனையகத்துட்புகேன் என்றவாறு.

5. அரவ வண்டு - இசையொலிக்கும் வண்டு. தேன், வண்டு, சுரும்பு, மிஞிறு என்பன வண்டின் வகை.

6. தருமணல் ஞெமிரிய - புதுமணல் பரப்பிய. திருநாறு அழகு திகழும் ஒரு பக்கத்தே.

விதானம் - மேற்கட்டி. பொன்னால் சுவரும், பவழத்தால் தூணும், முத்தால் விதானமும் விளங்க, பளிங்கினால் செய்த மண்டபம் என்க.

7. துளங்கும் மான் - ஒளியால் அசைதலையுடைய சிங்கம். ஊர்தி - ஈண்டு இருக்கை யென்னும் பொருளது.

8. வெண்டிரை விரிந்த - வெள்ளிய அலைபோல விரிந்த.

9. கோதையர் - மகளிர்.

உதயகுமரன் வீற்றிருந்தான். அவன்பால், சித்திராபதி, மணிமேகலையின் இளமைச் செவ்வியும், ஆடல்பாடல்களில் நிறைந்த புலமையும் அழகுறக் கூறி, அவள் உலகவறவியில் இருந்து அறம் செய்வதனையும் எடுத்து மொழிந்தாள். கடலில் கலம் கவிழப்பெற்ற ஒருவனுக்குப் பெரிய புணை கிடைத்தாற்போன்ற இச்செய்தியைக் கேள்வியுற்ற அவன் முன்பு அம்மணிமேகலையைக் கண்டதுமுதல், மணிமேகலா தெய்வம் தோன்றி, அரசுமுறை கூறி அகற்றியது ஈறாக நடந்தவையெல்லாம் சொல்லி, தன் மையலறிவைப் புலப் படுத்தினான்.

சித்திராபதி அவன் கூறியது கேட்டுச் சிறுநகை செய்து, "அரசே, இவை யாவும் காமக் கள்ளாட்டில் நிகழும் இடையீடுகள். இவைபோல்வன பலவும் தேவர்க் கும் நிகழ்ந்துள்ளன என்று கூறி, இந்திரன் ஆயிரங்கண் பெற்றதும், தீக்கடவுளின் மனையாள், முனிமகளிர் எழு வருள் அருந்ததியொழிய ஏனையோர் போலத் தோன்றி, அக்கடவுளின் காமத்துயர் துடைத்ததும் அவன் அறிய உரைத்தாள். மேலும் அவளே கூறலுற்று,

> [1]வாட்டிறற் குருசில்!
> கன்னிக் காவலும், [2]கடியிற் காவலும்,
> தன்னுறு கணவன் சாவுறிற் காவலும்
> நிறையிற் காத்துப் பிறர்பிறர்க் காணாது,
> கொண்டோ னல்லது தெய்வமும் பேணாப்
> பெண்டிர்தம் குடியில் பிறந்தா ளல்லள்
> நாடவர் காண நல்லரங் கேறி,
> ஆடலும் பாடலும் அழகும் காட்டிச

1. வாள் திறல் குருசில் - வாட்போரில் சிறிய திறல்படைத்த அரசகுமரனே.

2. கடியிற் காவல் - திருமணத்தால் பிறக்கும் காவல்.

நல்லரங்கு - எழுகோல் அகலமும், எண்கோல் நீளமும், ஒரு கோல் குறட்டுயரமும் வாய்தலிரண்டுமுடைய நாடகமேடை.

[1]சுரும்புநாண் கருப்புவில் அரும்புக்கணை தூவச்
[2]செருக்கயல் நெடுங்கண் சுருக்குவலைப் படுத்துக்
கண்டோர் நெஞ்சம் கொண்டகம் புக்குப்
[3]பண்தேர் மொழியிற் பயன்பல வாங்கி
வண்டின் துறக்கும் [4]கொண்டி மகளிரைப்
[5]பான்மையிற் பிணித்துப் படிற்றுரை யடக்குதல்
கோன்முறை யன்றோ குமரற்கு,

என்று அவ் வுதயகுமரன் உள்ளம் பிறழ்ந்து அம் மேகலையை விடாது தொடருமாறு தூண்டினுள்.

உதயகுமரன், உடனே விரைபரி பூட்டிய நெடுந்தேர் ஏறி, மணிமேகலை யிருந்த இடத்தை யடைந்தான். ஆங்கே பசியால் வாடுவோர்க்குப் பெருஞ்சோறு வழங்கிக்கொண்டிருந்த மணிமேகலையைக் கண்டு, இடங்கழி காமத்தனாய், அவளை அண்மி,

உடம்போடு என்றன் உள்ளகம் புகுந்தென்
[6]நெஞ்சம் கவர்ந்த வஞ்சக் கள்வி,

---

1. சுரும்பாகிய நாண்பூட்டி, கரும்பாகிய வில்லை வளைத்து, அரும்பாகிய அம்பு தொடுத்து எய்ய.

2. செருக்கயல் நெடுங்கண் - செருச்செய்யும் கயல்மீன் போலும் நீண்ட கண்ணால். சுருக்குவலை படுத்து நெஞ்சம் அகப்படுத்துகொண்டு - சுருக்குவலை வீசி நெஞ்சினை அதன்கண் அகப்படுத்திக்கொண்டு.

3. பண்தேர் மொழியின் - பண்ணிசைபோலும் இனிய சொற்களால். பயன் - பொருள். வண்டின் - வண்டுபோல.

4. கொண்டி மகளிர் - பொருளைக் கவர்ந்துகொள்ளுதலை யுடைய மகளிர்.

5. பான்மையின் - கொள்ளுதற்குரிய முறைப்படி.
படிற்றுரை - பொய்யுரை.

6. உதயகுமரன் நெஞ்சில் நினைக்குந்தோறும் அவன் மனக்கண்ணில் மணிமேகலை தன் முழுமேனியும் தோன்ற நிற்றலின், "உடம்போடு...கள்வி" என்கின்றான். தன் நெஞ்சினை அவள் கவர்ந்தேகியதனைத் தான் அறியாமையின், " வஞ்சக் கள்வி " என்றான்.

[1]நோற்றூண் வாழ்க்கையின் நொசிதவம் தாங்கி
[2]ஏற்றூண் விரும்பிய காரணம் என்?

என வினவும் எண்ணமுடையனாய், வாய்விட்டு,

நல்லாய், என்கொல் நற்றவம் புரிந்தது?
சொல்லாய் என்று துணிந்துடன் கேட்ப,

மணிமேகலை, "இவன் பண்டைப் பிறப்பில் எனக்குக் கணவனான இராகுலன்; இவனை யான் வணங்கலும், இவன் என் கைப்பற்றலும் குற்றமாகா" என எண்ணினள். எனினும், மனம் நடுங்கி,

கேட்டது மொழிவேன்: [3]கேள்வி யாளரின்
[4]தோட்ட செவியைநீ யாகுவை யாமெனில்,

என்று முன்மொழிந்து, பின்பு,

பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட் டிரங்கலும்
இறத்தலும் உடையது; [5]இடும்பைக் கொள்கலம்;
மக்கள் யாக்கை இது,என உணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்:
[6]மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப்
பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ?
கேட்டனை யாயின், [7]வேட்டது செய்க

---

1. நோற்றூண் வாழ்க்கை - விரதம் காத்துப் பிச்சையேற்றுண்டு வாழும் வாழ்க்கை. நொசிதல் - நுணுகல். தவமுடையார் தொழில் தவத்தின்மேல் நின்றது.

2. ஏற்றூண் - இரந்துண்டல்.

3. கேள்வியாளரின் - நுண்ணிய நூற்பொருளைக் கேட்ட சான்றோர்களால்.

4. தோட்ட செவி - துளைக்கப்பட்ட செவி. பல நுண்பொருளைக் கேட்டுப் பயின்றோர் செவியைக் "கேள்வியால் தோட்கப்பட்ட செவி" யென்றல் மரபு. "கேள்வியால் தோட்கப்படாத செவி" என்பது திருக்குறள்.

5. இடும்பைக் கொள்கலம் - துன்பமெல்லாம் கொண்டு வைக்கும் கலம்.

6. மண்டு அமர் முருக்கும் களிறு - நெருங்கிய போரில் முந்துற்றுச்சென்று பொரும் களிற்றியானை.

7. வேட்டது - விரும்பியது.

என்று சொல்லிவிட்டு, அம்மணிமேகலை அருகிருந்த சம்பா பதி கோயிற்குள் நுழைந்து, அதெய்வத்தைத் தொழுது, மணிமேகலா தெய்வம் கற்பித்த வேற்றுருக்கொள்ளும் மந்திரத்தை ஓதி, காயசண்டிகையின் வடிவுகொண்டு, பிச்சைப்பாத்திரத்துடன் வெளியே வந்தாள். அவளைக் கண்ட உதயகுமரன் உண்மை யுணராளுய், "இக் காயசண்டிகை பால் இப்பாத்திரத்தைத் தந்து மணிமேகலை மறைந்தனள் என்று நினைந்து, தானும், அச் சம்பாபதி முன் சென்று

பிச்சைப் பாத்திரம், [1]பெரும்பசி யுழந்த
காயசண் டிகைதன் கையிற் காட்டி
[2]மாயையின் ஒளித்த மணிமே கலைதனை
ஈங் [3]கிம் மண்ணீட் டியாரென உணர்கேன்;
ஆங்கவள் இவள்என்று அருளா யாயிடின்;
பன்னா ளாயினும் [4]பாடு கிடப்பேன்;
இன்னும் கேளாய்: [5]இமையோர் பாவாய்!
[6]பவளச் செவ்வாய்த் தவளவாள் நகையும்,
அஞ்சனம் சேராச் செங்கயல் நெடுங்கணும்,
[7]முரிந்து கடைநெரிய வரிந்தசிலைப் புருவமும்,
[8]குவிமுட் கருவியும், கோணமும், கூர்நுனைக்

1. பெரும்பசி - யானைத்தீ என்னும் நோயாலுண்டாகிய பசியால்.

2. மாயையின் - மாயமாக.

3. இம் மண்ணீட்டு யார் - இம் மண்ணாற் செய்த பாவைகளுள் யார்.

4. பாடுகிடப்பேன் - வரங்கிடப்பேன்.

5. இமையோர் பாவை - தேவர்களுடைய தலைவி.

6. பவளச் செவ்வாய் - பவளம்போல் சிவந்த வாய். தவள வாள்நகை - வெள்ளிய ஒளிபொருந்திய பற்கள்.

7. முரிந்து - வளைந்து.

8. குவிமுள், கோணம் (தோட்டி), கவைமுள் மூன்றும் யானையை அடக்கும் கருவி. கடி கொள - காவல் கொள்ள.

வாள்நகை, குவிமுள்ளும்; கண் கோணமும்; புருவம், கவை, முள்ளுமாகக் கொள்க.

கவைமுட் கருவியு மாகிக் கடிகொளக்
[1]கல்விப் பாகரின் காப்புவலை ஓட்டி
[2]வல்வாய் யாழின் மெல்லிதின் விளங்க,
[3]முதுக்குறை முதுமொழி எடுத்துக் காட்டி,
[4]புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென
முதியா ளுன்றன் கோட்டம் புகுந்த
மதிவாள் முகத்து மணிமே கலைதனை
யொழியப் போகேன்; [5]உன் அடி தொட்டேன்;
இது குறை,

எனக் குறையிரந்து நிறபாளையினன.

## 19. சிறைக்கோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை

"மணிமேகலை யொழியப் போகேன்; உன் அடி தொட்டேன்" என்று சபாபதி முன் வஞ்சினம் கூறிய உதயகுமரன் கேட்க, அங்குள்ள சித்திரங்களுள் ஒன்றில் நின்று,

[6]ஏடவிழ் தாரோய்! எம்கோ மகள்முன்
நாடாது துணிந்து [7]நாநல் கூர்ந்தனை

1. கல்விப்பாகர் - கல்வியாகிய பாகர். காப்பு வலை ஓட்டி - காத்தலாகிய வலையைச் சிதைத்து

2 "வல்வாய் யாழின்" என்றான், வலிய யானை யாழிசைக்கு மயங்கி வணங்குதல்போலத் தனனைத் தன் யாழிசைபோலும் மொழியால் வணக்கினமை தோன்ற.

3 முதுக்குறை முதுமொழி - பேரறிவு சான்ற அறிவுமொழி.

4 புதுக்கோள் யானை - புதிதாகக்கொண்ட யானை.

5. உன் அடி தொட்டேன் - உன் திருவடி தொட்டுச் சூள் செய்தேன்.

6. ஏடவிழ்தார் - இதழ் விரிந்த பூவால் தொடுக்கப்பட்ட மாலை.

7. நா நல்கூர்ந்தனை - சொற்பயன் இழந்தாய்.

என்றொரு தெய்வம் கூறிற்று. அதனைக் கேட்ட உதய குமரன் மனம் கலங்கி, மெய்வருந்தி,

> அங்கவள் தன்திறம் [1]அயர்ப்பாய் என்றே
> செங்கோல் காட்டிய தெய்வமும் திப்பியம்;
> [2]பையர வல்குல் பலர்பசி களையக்
> கையில் ஏந்திய பாத்திரம் திப்பியம்;
> [3]முத்தை முதல்வி அடிபிழைத் தாய்எனச்
> சித்திரம் உரைத்த இதூஉம் திப்பியம்;
> இங்கிவை யெல்லாம் [4]இளங்கொடி செய்தியின்
> பின்னறிவாம்,

என்று எண்ணிக்கொண்டே அவ்விடம் விட்டுப் பெயர்ந்து நீங்கினன். மாலைப்போதும் வந்தது.

இனி, வேற்றுருக்கொண்டு நின்ற மணிமேகலை, பலபட

> மாதவி மகளாய் மன்றம் திரிதரின்,
> காவலன் மகனோ [5]கைவிட லீயான்;
> [6]காய்பசி யாட்டி காயசண் டிகையென
> ஊர்முழு தறியும் உருவம் கொண்டே,
> [7]ஆற்றா மாக்கட்கு ஆற்றும் துணையாகி
> ஏற்றலும் இடுதலும் இரப்போர் கடன்; அவர்

1. அயர்ப்பாய் - மறந்து

2. பையரவல்குல் - பாம்பின் படம்போலும் அல்குலையுடைய மணிமேகலை.

3 முத்தை முதல்வி - முதுமையும் முதன்மையுமுடைய சம்பாபதி.

அடி பிழைத்தாய் - அடியில் வணங்காது குற்றப்பட்டாய்.

4. இளங்கொடி - மணிமேகலை.

5. கைவிடலீயான் - கைவிடான். “அரசுதுயிலீயாது” (பதிற்: 12).

6. காய்பசியாட்டி - மிக்க பசிநோய் உடையளான.

7. ஆற்றாமாக்கட்கு - வறியவர்க்கு.

மேற்சென் றளித்தல் [1]விழுத்தகைத் தென்றே
நூற்பொரு ளுணர்ந்தோர் [2]நுனித்தனர்,

எனறு கருதி, வேந்தனது ஆணை பிழைத்தோரை ஒறுக்கும் சிறைக்கோட்டம் புகுந்து, ஆங்கே பசியால் வருந்தி மெலிந்து கிடந்தோர்க்குப் பேருணவு தந்து பசிப்பிணியைப் போக்கினள். அவள் பாத்திரம் ஒன்றே கொண்டு மிகப் பலர்க்குப் பசிதீர உணவளித்து நிற்கும் செயலைச் சிறைக் கோட்டக் காவலர் கண்டு பெருவியப்புக்கொண்டு, இச் செய்தியை அரசர்க்கு உணர்த்துவது தக்கது என்று எண்ணி அவன்பாற் சென்றனர்.

அக்காலையில், அரசர்பெருமான் தன் மனைவி சீர்த்தி யென்பாளுடன், விளையாட்டுக்கருதி ஒரு பூம்பொழிற் குச் சென்றிருந்தான். அங்கே,

கொம்பர்த் தும்பி [3]குழலிசை காட்டப்
[4]பொங்கர் வண்டினம் நல்லியாழ் செய்ய,
வரிக்குயில் பாட மாமயில் ஆடும்,

அழகிய பூம்பந்தர் ஒன்று அரசப் பெருமக்கட்கு இனிய காட்சி பயந்தது. அரசன்,

[5]புணர்துணை நீங்கிய பொய்கை யன்னமொடு
மடமயிற் பேடையும் தோகையும் கூடி
[6]இருசிறை விரித்தாங்கு எழுந்துடன் கொட்பன
ஒருசிறைக் கண்டுஆங்கு உள்மகிழ் வெய்தி,
மாமணி வண்ணனும் [7]தம்முனும் பிஞ்ஞையும்

1. விழுத்தகைத்து - சிறப்புடைத்து. என்று-என்று கருதி.
2. நுனித்தனர் - ஆராய்ந்து சொல்லினர்.
3. குழலிசை காட்ட - வேய்ங்குழலின் ஓசையைச் செய்ய.
4. பொங்கர் - சோலை.
5. புணர்துணை - பெண்ணன்னம்.
6. இருசிறை - இரண்டு சிறகுகளையும். ஒரு சிறை - ஒரு பக்கத்தே.
7. தம்முன் - பலதேவன். பிஞ்ஞை - நப்பின்னை; அன்னை "மென்றோளஞ்ஞை" (அகம்) யென வந்தாற்போல.

ஆடிய குரவையின் தாம்என நோக்கியும்,
[1]கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னை,
[2]பாங்குற இருந்த பல்பொறி மஞ்ஞையைச்
செம்பொன் தட்டில் தீம்பால் ஏந்திப்
பைங்கிளி யூட்டும்[3] ஓர் பாவையாம் என்றும்,
[4]அணிமலர்ப் பூம்பொழில் அகவயின் இருந்த
[5]பிணவுக்குரங் கேற்றிப் பெருமதர் மழைக்கண்,
[6]மடவோர்க் கியற்றிய மாமணி யூசல்
[7]கடுவ னூக்குவது கண்டுநகை யெய்தியும்

இன்புற்றுச் சிறந்தான். கூத்தர், அவிநயப்புலவர், நாடக நூல் வல்லவர், இசைப்புலவர், தண்ணுமைப் புலவர், குழல் இசைப்போர், பாட்டிசை சுவைப்போர், முத்துக்கோப்பவர், சாந்தம் சமைப்போர், பூத்தொடுப்போர் முதலிய பலரும் அரசனைச் சூழவிருந்து இன்புறுத்தினர். அரசன், அவ்வின்பத்தால் ஆராமை யெய்தி, மேலும் சென்று,

குருந்தும் [8]தளவும் திருந்துமலர்ச் செருந்தியும்,
[9]முருகுவிரி முல்லையும் [10]கருவிளம் பொங்கரும்,
பொருந்துபு நின்று திருந்துநகை செய்து
[11]குறுங்கால் நகுலமும் நெடுஞ்செவி முயலும்
[12]பிறழ்ந்துபாய் மானும் [13]இறும்புஅகலா வெறியும்

---

1. கோங்கலர் - கோங்கம்பூ. 2. பாங்கு - அருகே.

3. ஓர் பாவை - ஒரு பெண். "கோங்கலருக்குப் பொன் தட்டும், மாங்கனிக்குக் கிளியும், மயிலுக்குப் பெண்ணும் உவமை.

4. அணிமலர்ப் பூம்பொழில் அகவயின் - அழகிய பூக்கள் நிறைந்த சோலைக்குள்.

5. பிணவுக்குரங்கு - பெண்குரங்கு.

6. மடவோர்க்கு - மகளிர்க்கு.

7. கடுவன் - ஆண் குரங்கு. ஊக்குவது - ஆட்டுவது. "ஐய சிறி தென்னை யூக்கி" (கலி) என்றாற்போல.

8. தளவு - ஒருவகை முல்லை. 9. முருகு - நறுமணம்.

10. கருவிளம் பொங்கர் - கருவிளம் புதர்.

11. குறுங்கால் நகுலம் - குறுகிய கால்களையுடைய கீரி.

12. பிறழ்ந்து - நெறிமாறி.

13. இறும்பு - குறுங்காடு. வெறி - ஆடு.

அரசிக்குக் காட்டி மகிழ்ச்சி மிக்கான். பின்பு,

> எந்திரக் கிணறும், [1]இடும்கற் குன்றமும்,
> வந்துவீழ் அருவியும், மலர்ப்பூம் பந்தரும்,
> [2]பரப்புநீர்ப் பொய்கையும், [3]கரப்புநீர்க் கேணியும்,
> [4]ஒளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும்

பிறவுமாகிய இடங்கட்குச் சென்று விளையாட்டயர்ந்து, கடைசியில்,

> [5]மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்,
> அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
> [6]தண்தமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
> கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினைப்
> பவளத் திரள்கால் பன்மணிப் [7]போதிகைத்
> [8]தவள நித்திலத் தாமம் தாழ்ந்த
> [9]கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்
> [10]தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பின்

சந்தனமெழுகிய பசும்பொன் மண்டபத்தையடைந்து இனிதிருந்தான். அக்காலத்தே சிறைக்கோட்டக் காவலர் வந்து, சேய்மைக்கண் நின்று வணங்கிப் பின் திருமுன்பு அணுகி, "எதிர்த்து மேல்வந்த சேரரையும் பாண்டியரையும்,

---

1. இடும்கற்குன்றம் - செய்குன்று.
2. பரப்புநீரப் பொய்கை - நீர் நிறைந்த பரந்த பொய்கை.
3. கரப்புநீர்க்கேணி - மறைதலையுடைய நீர் நிறைந்த கிணறு; இது அந்தக் கேணி யெனப்படும்.
4. ஒளித்துறையிடம் - ஒளிந்திருக்குமிடம்.
5. மகதவினைஞர் - மகதநாட்டுத் தொழிலாளர்.
6. தண் தமிழ்வினைஞர் - தண்டமிழ் நாட்டுத் தொழிலாளர்.
7. போதிகை - தூண் முடியில் இருக்கும் போதிகைக் கட்டை; இதனைப் போதைக்கட்டை யென்பர்.
8. தவளநித்திலம் - வெள்ளிய முத்து.
9. கோணச் சந்தி - கோணமாகிய சந்தி. விதானம் - மேற்கட்டி.
10. தமனியம் - பொன். வனப்பு - அழகு.

[1]ஆர்புனை தெரியல் இளங்கோன் தன்னால்
[2]காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
[3]வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி!
[4]ஒளியொடு வாழி ஊழிதோ றூழி
வாழி யெங்கோ! மன்னவர் பெருந்தகை!
கேள்,இது மன்னோ; கெடுகநின் பகைஞர்;
யானைத்தீ நோய்க்கு அயர்ந்துமெய் வாடிஇம்
மாநகர்த் திரியும்ஓர் [5]வம்ப மாதர்
அருஞ்சிறைக் கோட்டத் [6]தகவயிற் புகுந்து
[7]பெரும்பெயர் மன்ன! நின்பெயர் வாழ்த்தி
[8]ஐயப் பாத்திரம் ஒன்றுகொண்டு, ஆங்கு,
[9]மொய்கொள் மாக்கள் மொசிக்கஊண் சுரந்தனள்;
ஊழிதோ றூழி உலகம் காத்து
வாழி எங்கோ மன்னவ,

என்று தெரிவித்து நின்றனர். அரசன், விரையச் சென்று அம் மடக்கொடியை இங்கே அழைத்துவருக என, காவலர் சென்று உரைத்தலும மணிமேகலை, அரசன்முன் போந்து அவனை வாழ்த்தி நின்றாள்.

---

1. ஆர்புனைதெரியல் - ஆத்திப்பூவால் தொடுத்த மாலை.

2. காரியாற்றுக்கொண்ட - காரியாற்றின் கரையில் வென்றி பெற்ற. தோற்றவன் "காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி" என்பவன்.

3. வலிகெழு தடக்கை - வலிபொருந்திய பெரிய கை.

4. ஒளி - அரசர்பாலுள்ள கடவுட்டன்மை யென்பர்.

5. வம்பமாதர் - புதியளாய் வந்த காயசண்டிகை.

6. அகவயின் - உள்ளே.

7. பெரும்பெயர் - மிக்க புகழ்.

8. ஐயப் பாத்திரம் - பிச்சைப் பாத்திரம் - அமுதசுரபி.

9. மொய்கொள் மாக்கள்-நெருங்குகின்ற மக்கள். மொசிக்க-

**வேந்தன் :—**

[1]தாங்கரும் சன்மைத் தவத்தோய்! நீயார்?
[2]யாங்கு ஆகியதுஇவ் வேந்திய கடிஞை?

மணிமேகலை :—

[3]விரைத்தார் வேந்தே! நீநீடு வாழி
[4]விஞ்சை மகள் யான்; [5]விழவணி மூதூர்
வஞ்சம் திரிந்தேன்; வாழியர் பெருந்தகை!
[6]வானம் வாய்க்க; மண்வளம் பெருகுக;
தீதின் றாக கோமகற்கு ஈங்கு; ஈது
ஐயக் கடிஞை; [7]அம்பல மருங்குஓர்
தெய்வம் தந்தது; திப்பிய மாயது;
யானைத் தீநோய் அரும்பசி கெடுத்தது;
[8]ஊனுடை மாக்கட்கு உயிர்மருந்து இது.

வேந்தன் :—இளங்கொடி; யான் செயற்பாலது என்?

மணிமேகலை :—

சிறையோர் கோட்டம் [9]சீத்து,அருள் நெஞ்சத்து
அறவோர்க்கு [10]ஆக்குமது; வாழியர்

---

1. தாங்கரும் தன்மை - தாங்குதற்கு அருமையான தன்மை.
2. யாங்கு ஆகியது - எவ்விடத்தே பெறப்பட்டது.
3. விரைத்தார் - மணம் கமழும் மாலை.
4. விஞ்சைமகள் - வித்தியாதரப் பெண்; பல வித்தைகளை யுடைய பெண்.
5. விழவணி மூதூர் - விழாவால் அழகுகொண்ட பழைய ஊராகிய இக் காவிரிப்பூம்பட்டினத்தில்.
6. வானம் வாய்க்க - மழை தப்பாது பெய்க.
7. அம்பலம் - ஊரம்பலம்.
8. ஊனுடைமாக்கள் - வெற்றுடல் தாங்கும் மக்களுக்கு உயிர்மருந்து - உணவு.
9. சீத்து - இடித்துத் தகர்த்து.
10. ஆக்குமது - கோட்டம் அமைப்பதே செயற்பாலது.

கேட்டு உள்ளம் இசைந்த அரசர் பெருந்தகை, அச் சிறைக்கோட்டத்துள்ளார்க்குச் சிறைவீடு செய்து, அக் கோட்டத்தையும் இடித்துத் தூய்மை செய்து, அற வோர் வாழும் அறக்கோட்டமாக்கினன்.

## 20. உதயகுமரனை வாளால் எறிந்த காதை

மணிமேகலையால் அரசன் சிறைக்கோட்டத்தைச் சீத்துச்செய்த அறக்கோட்டத்தே,

> [1]பொருள்புரி நெஞ்சிற் புலவோன் கோயிலும்
> அருள்புரி நெஞ்சத்து அறவோர் பள்ளியும்
> [2]அட்டிற் சாலையும் [3]அருந்துநர் சாலையும்

உளவாயின. இந்நிகழ்ச்சி முற்றும் அறிந்தான் உதய குமரன். உடனே அவன், அவளை எவ்வாறேனும் கொள் ளல்வேண்டுமென்று கருதி,

> [4]மதியோர் எள்ளினும் மன்னவன் காயினும்,
> [5]பொதியில் நீங்கிய பொழுதிற் சென்று,
> பற்றினன் கொண்டுஎன் பொற்றேர் ஏற்றி,
> [6]கற்றறி விச்சையும் கேட்டுஅவள் உரைக்கும்
> [7]முதுக்குறை முதுமொழி கேட்குவன் என்றே

மனங்கொண்டு, மணிமேகலை தங்கியிருந்த உலகவறவிக்குச் சென்றான். அக்காலை, காயசண்டிகையின் கணவனை

1. பொருள்புரி நெஞ்சின் புலவோன் - வாய்மை நான்கையும் விரும்புகின்ற நெஞ்சமுடைய புத்தன். பொருள் - மெய்ம்மை.
2. அட்டிற் சாலை - உணவு சமைக்குமிடம்;
3. அருந்துநர் சாலை - உணவு உண்போர் சாலை.
4. மதியோர் - அறிவுடையோர்.
5. பொதியில் - பொது இடம்; அம்பலம்.
6. கற்றறிவிச்சை - கற்றறிந்துள்ள வித்தைகள் பலவும்.
7. முதுக்குறை முதுமொழி - அறிவுப் பொருள் நிறைந்த சொல்.

காஞ்சனன், முனிவன் உரைத்தவாறு பன்னீராண்டு கழிந்து தன் மனைவி திரும்ப வாராமைகண்டு, இந்நகர்க்கண் அவளைப் பலவிடங்களிலும் தேடித் திரிந்து முடிவில், பிச்சைப்பாத்திரம் ஏந்திப் பலர்க்கும் உணவூட்டி வருவது கண்டு தன் பழைமைக் கிழமைதோன்றப் பல உரையாடினன். உதயகுமரனும் அங்கே உடனிருந்தான். மணிமேகலை காயசண்டிகை வடிவில் நின்றுளாயினும், அவள் அக்காஞ்சனன்பால் செல்லாது, உதயகுமரன் முகநோக்கி, அவன் உள்ளத்தையும் மாற்ற நினைத்தாள்; அப்போது அவ்வழியே போந்த தொண்டுகிழவி யொருத்தியைக் காட்டி,

[1]தண்ணறல் வண்ணம் திரிந்துவே றாகி
வெண்மண லாகிய கூந்தல் காணாய்;
[2]பிறைநுதல் வண்ணம் காணா யோ,நீ,
நரைமையின் திரைதோல் [3]தகையின் றாயது;
[4]விறல்விற் புருவம் இவையும் காணாய்,
[5]இறவின் உணங்கல் போன்றுவே றாயின;
[6]கழுநீர்க் கண்,காண், [7]வழுநீர் சுமந்தன;
[8]குமிழ்மூக்கு, இவை,காண், உமிழ்சீ ஒழுக்குவ;
நிரைமுத் தனைய [9]நகையும் காணாய்,
[10]சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின:
[11]இலவிதழ்ச் செவ்வாய், காணா யோ,நீ,

1. தண் அறல் - குளிர்ந்த கருமணல்.
2. பிறை நுதல் - பிறைபோலும் நெற்றி.
3. தகை - அழகு.
4. விறல் வில் புருவம்-விறல் படைத்த வில்லொத்த புருவம்.
5. இறவின் உணங்கல் - இறாமீனின் வற்றல்.
6. கழுநீர்க் கண் - செங்கழுநீர் மலர் போன்ற கண்.
7. வழுநீர் - பீளை வடியும் கண்ணீர்.
8. குமிழ் - குமிழம்பூ. 9. நகை - பல்.
10. சுரை வித்து - சுரைக்காயின் விதை.
11. இலவிதழ்ச் செவ்வாய் - இலவம் பூவின் இதழ்போல் சிவந்த இதழ்களையுடைய வாய்.

[1]புலவுப் புண்போல் புலால்புறத் திடுவது ;
[2]வள்ளைத் தாள்போல் வடிகாது இவை காண்,
உள்ளூன் வாடிய உணங்கல் போன்றன ;
[3]இறும்பூது சான்ற முலையும் காணாய்,
வெறும்பை போல வீழ்ந்துவே றாயின ;
[4]தாழ்ந்தொசி தெங்கின் மடல்போல் [5]திரங்கி,
வீழ்ந்தன, இள[6]வேய்த் தோளும் காணாய்,
நரம்பொடு விடுதோல் [7]உகிர்த்தொடர் கழன்று,
திரங்கிய விரல்கள் இவையும் காணாய் ;
வாழைத் தண்டே போன்ற [8]குறங்கிணை,
தாழைத் தண்டின் உணங்கல் காணாய்:
[9]ஆவக் கணைக்கால் காணா யோ,நீ,
மேவிய நரம்போடு என்புபுறங் [10]காட்டுவ ;
[11]தளிரடி வண்ணம் காணா யோ,நீ,
[12]முளிமுதிர் தெங்கின் உதிர்காய் உணங்கல்,
பூவினும் சாந்தினும் [13]புலால்மறைத்து யாத்து,
[14]தூசினும் அணியினும் தொல்லோர் வகுத்த
வஞ்சம் தெரியாய், மன்னவன் மகன்!

1. புலவுப்புண் - புலால் நாற்றம் நாறும் புண்.
2. வள்ளைத் தாள் - வள்ளைக் கொடியின் இலை.
3. இறும்பூது - பெருமிதம்.
4. தாழ்ந்து ஒசி மடல் - தாழ்ந்து வளைந்து வீழ்ந்து தொங்கும் மடல்.
5. திரங்கி - திரைந்து.
6. வேய்த் தோள் - மூங்கில் போலும் தோள்.
7. உகிர் - நகம்.
8. குறங்கிணை - துடையிரண்டு.
9. ஆவக் கணைக்கால் - அம்புப் புட்டில்போன்ற கணைக்கால்.
10. புறங்காட்டுவ - புறத்தே தோன்றும்படி தெரிகின்றன.
11. தளிரடி - தளிர் ஒத்த அடி.
12. முளி - உலர்ந்து.
13. புலால் மறைத்து - புலால் நாறாதபடி மறைத்து.
14. தூசு - புடைவை.

என்று அவளது உறுப்புக்களின் பண்டை வனப்பும், இன்றைய அழிவும் எடுத்து விளக்கினள்.

இச் செய்தியைக் காஞ்சனன் கண்டு மனத்தே பொறாமையும் சினமும் பொங்கி மிகத் தன் நெஞ்சிற்குள்,

[1]தற்பா ராட்டும்என் சொற்பயன் கொள்ளாள்;
பிறன்பின் செல்லும்; [2]பிறன்போல் நோக்கும்;
[3]மதுக்கமழ் அலங்கல் மன்னவன் மகற்கு
முதுக்குறை முதுமொழி எடுத்துக் காட்டிப்
[4]பவளக் கடிகையில் தவளவாள் நகையும்,
குவளைச் செங்கணும் [5]குறிப்பொடு வழாஅள்;
ஈங்குஇவன் காதல னாதலின், ஏந்திழை
ஈங்கு ஒழிந்தனள்

என நினைந்து, அவ்விடத்தே ஒருசார் தங்கியிருந்தான். உதயகுமரனும், அம் மணிமேகலை யுரைத்த முதுக்குறை முதுமொழிகளைச் செவியிற் கொள்ளாது,

வளைசேர் செங்கை மணிமே கலையே,
காயசண் டிகையாய்க் கடிஞை யேந்தி,
[6]மாய விஞ்சையின் மனம்மயக் குறுத்தனள்;
அம்பல மருங்கில் அயர்ந்துஅறி வுரைத்தஇவ்
[7]வம்பலன் தன்னொடுஇவ் வைகிருள் ஒழியாள்;
இங்குஇவள் செய்தி [8]இடையிருள் யாமத்து,
வந்து அறிகுவன்,

என உட்கொண்டு, இடையிருள் யாமத்தே மீண்டுவரத் ிந்து தேரேறிச் சென்றான்.

1. தற்பாராட்டும் - தன்னைப் பாராட்டுகின்ற.
2. பிறன்போல் - அயலான்போல.
3. மதுக்கமழ் அலங்கல் - தேன் மணக்கும் மாலை.
4. பவளக் கடிகை - பவளத் துண்டம்.
5. குறிப்பு - இங்கிதம்.
6. மாயவிஞ்சை - மாயவித்தை.
7. வம்பலன் - புதியோன்; அயலான்.
8. இடையிருள் யாமம் - நள்ளிரவு.

அற்றைப்போது கழிந்தது; இடையிருள் யாமமும் எய்துவதாயிற்று. உதயகுமரன் அரண்மனையின் நீங்கி, மணிமேகலையிருந்த அம்பலம் நோக்கி வந்தான். காஞ்சனன் மணிமேகலை யிருந்த இடத்திற்கேகும் நெறிக்கண் உறக்கமின்றிக் கிடந்தான்; அதனை யுணராது போந்த உதயகுமரன்,

[1]வேக வெந்தீ நாகம் கிடந்த
[2]போகுயர் புற்றளை புகுவான் போல,
[3]ஆகம் தோய்ந்த சாந்து [4]அலர் உறுத்த
[5]ஊழடி யிட்டுஅதன் உள்ளகம் புகுதலும்,
ஆங்குமுன் னிருந்த அலர்தார் விஞ்சையன்,
"ஈங்கு இவன் வந்தனன் இவள்பால்" என்றே,
வெஞ்சின அரவம் [6]நஞ்செயிறு அரும்ப,
தன்பெரு வெகுளியின் எழுந்து [7]பை விரித்தென,
[8]இருந்தோன் எழுந்து பெரும்பின் சென்று அவன்
[9]சுரும்புஅறை மணித்தோள் துணிய வீசி

உள்ளே சென்று, காயசண்டிகையாகிய மணிமேகலையைத் தானே வலிதிற் கைக்கொண்டு செல்லக் கருதிச்சென்றான். அப்போழ்தில் ஆங்கிருந்த கந்திற்பாவை,

அணுகல், அணுகல்; விஞ்சைக் காஞ்சன!
மணிமேகலை அவள்; மறைந்துரு வெய்தினள்;
காயசண் டிகைதன் கடும்பசி நீங்கி,
வானம் போவழி வந்தது கேளாய்

---

1. வேக வெந்தீ - கொடிதாய்ப் பற்றும் நஞ்சு.
2. போகுயர் புற்றளை - மிகவுயர்ந்த புற்றின் புழை.
3. ஆகம் - மார்பு.
4. அலர் உறுத்த - மணத்தால் அவன் இருப்பினைக் காட்ட.
5. ஊழடியிட்டு - முறையே அடிமேல் அடி வைத்து.
6. எயிறு நஞ்சு அரும்ப - பல் விடத்தைக் கக்க.
7. பை விரித்தென - படத்தை விரித்தாற்போல.
8. இருந்தோன் - இருந்த காஞ்சனன்.
9. சுரும்பு அறை மணித்தோள் - வண்டு ஒலிக்கும் மாலை யணிந்த அழகிய தோள்.

என்று தொடங்கிக் காயசண்டிகை வானவழியே செல்லுங் கால் விந்த மலையிலிருந்து அதனைக் காக்கும் விந்தாகடிகை, தன்மேல் காயசண்டிகையின் சாயை தாக்க, அதனால், அவளை யிழுத்துத் தன் வயிற்றில் அடக்கிக்கொண்டாள்.

> [1]கைம்மை கொள்ளேல், காஞ்சன! இதுகேள்;
> ஊழ்வினை வந்துஇங்கு உதய குமரனை,
> ஆருயிர் உண்டது; ஆயினும், அறியாய்:
> [2]வெவ்வினை செய்தாய், விஞ்சைக் காஞ்சன!
> அவ்வினை நின்னையும் அகலாது ஆங்குறும்

என்றது. இதுகேட்டு விஞ்சையனும் வருந்திய உள்ளத்த னாய்த் தன் விஞ்சையருலகை யடைந்தான்.

---

## 21. கந்திற்பாவை வருவது உரைத்த காதை

சம்பாபதி கோயிலின் உள்ளே கிடந்த மணிமேகலை காஞ்சனன் செய்தியும், உதயகுமரன் வீழ்ச்சியும், கந்திற் பாவை அக் காஞ்சனற் குரைத்ததும் கேட்டு எழுந்து, தன் உண்மை வடிவுகொண்டு வெளிப்போந்து, அரச குமரனது உடலைக்கண்டு, துயரிருந்து.

> [3]திட்டி விடமுண நின்னுயிர் போம்நாள்
> [4]கட்டழல் ஈமத்து என்உயிர் சுட்டேன்;
> உவவன மருங்கில் நின்பால் உள்ளம்
> [5]தவிர்விலே னாதலின், தலைமகள் தோன்றி
> மணிப்பல் லவத்திடை என்னைஆங் குய்த்துப்
> [6]பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி

1. கைம்மை - இவள் கைம்பெண்; இவள் கையைப் பற்றுத லாகிய இழிசெயல்.
2. வெவ்வினை - கொலை.
3. திட்டிவிடம் - கண்ணில் நஞ்சுடைய பாம்பு.
4. கட்டழல் - மிக்க நெருப்பு.
5. தவிர்விலேன் - நீங்காது செலுத்தினேன்.
6. பிணிப்பறு மாதவன் - பற்றற்ற மாதவனாகிய புத்தன்.

என்பிறப் புணர்ந்த என்முன் தோன்றி,
உன்பிறப் பெல்லாம் [1]ஒழிவின் றுரைத்தலின்,
பிறந்தோர் இறத்தலும், இறந்தோர் பிறத்தலும்,
[2]அறந்தரு சால்பும், மறந்தரு துன்பமும்,
யான்நினக் குரைத்துநின் [3]இடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன், காதல!
[4]வைவாள் விஞ்சையன் [5]மயக்குறு வெகுளியின்
வெவ்வினை யுருப்ப விளிந்தனையோ

எனச் சொல்லிப் புலம்பலுற்றனள். அப்போழ்தில், கந்திற் பாவை மணிமேகலையை யழைத்து,

செல்லல், செல்லல்; [6]சேயரி நெடுங்கண் !
[7]அல்லியந் தாரோன் தன்பாற் செல்லல்,
நினக்கு இவன் [8]மகனாத் தோன்றி யதூஉம்,
மனக்கினி யார்க்குநீ [9]மகளா யதூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப் புளவால் ;
கண்ட பிறவியே அல்ல, காரிகை !
[10]தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம்
விடுமாறு முயல்வோய், [11]விழுமம் கொள்ளேல்

1. ஒழிவின்று - குறையாமல்; சிறிதும் விடாமல்.

2. அறந்தரு சால்பு - அறத்தால் உண்டாகும் இன்ப நிறைவு.

3. இடர் வினை - துன்பத்தைச் செய்யும் வினை; காதற் செய்கை.

4. வை வாள் - கூரிய வாள்.

5. மயக்குறு வெகுளி - அறிவை மயக்கும் சினம்.

6. சேயரி நெடுங்கண் - சிவந்த அரிபரந்த நெடிய கண்ணை யுடையாய்.

7. அல்லியந் தார் - பூவின் அகவிதழ்களால் தொடுக்கப் பட்ட மாலை.

8. மகன் - கணவன்.

9. மகள் - மனைவி.

10. தடுமாறு பிறவி - மகனுமகளுமாய் மாறிப்பிறந்து இறந்து வரும் பிறவி. தாழ்தரு - தங்கும்.

11. விழுமம் - துன்பம்.

என்று உரைத்தது. அதுகேட்ட மணிமேகலை, "இவ் வம்பலத்து உறையும் தெய்வமாகிய நீ, சென்ற பிறப்பில் இவன் திட்டிவிடத்தால் உயிரிழந்ததும், இப்பிறப்பில் இன்று ஈங்கு விஞ்சையனால் வெட்டுண்டு வீழ்ந்ததும் அறி வாயன்றோ? அறிந்தனையாயின், இவன் வாள் வாய் வீழ்ந்த காரணம் விளம்ப வேண்டுகின்றேன்" என்றாள். உடனே அத்தெய்வம், "முன்னைப் பிறவியில், காயங்கரை என்னும் ஆற்றங்கரையில் நீ நின் கணவன் இராகுலனோடு இருந்த போது, அங்கு உங்கள்பால் வந்த பிரமதரும முனிவனுக்கு உணவுசமைத்தல் வேண்டி மடையனை விடியலில் வரப் பணித்தீர்; அவன் அவ்வாறே வருங்கால், அடிதளர்ந்து மடைக்கலம் சிதைய வீழ்ந்தான். அதனை நோக்காது, முனிவர்க்குச் செய்தற்குரிய பணிக்கு முட்டுப்பாடு உண் டாக்கினனென அம் மடையனை இராகுலன் சினந்து தன் கைவாளால் துணித்துக் கொன்றான். அக் கொலைவினையே, அவனை இப்பிறப்பில் விஞ்சையனால் வெட்டுண்டு வீழச் செய்தது, காண்" என்று சொல்லி, மேலும் வினையின் இயல்பு சிறிது கூறலுற்ற அத்தெய்வம்,

> தலைவன் காக்கும், தம்பொருட் டாகிய
> [1]அவல வெவ்வினை யென்போர் அறியார்;
> அறஞ்செய் காதல் அன்பினி னாயினும்,
> [2]மறம்செய் துளதெனின் வல்வினை யொழியாது:
> ஆங்கு அவ்வினைவந்து அணுகுங் காலைத்
> [3]தீங்குறும் உயிரே செய்வினை மருங்கின்
> மீண்டுவரு பிறப்பில் மீளினும் மீளும்;
> ஆங்கு அவ்வினைகாண், ஆயிழை! [4]கணவனை
> ஈங்கு வந்திவ் விடர்செய் தொழிந்தது,

1. அவலவெவ்வினை - மெலிவை யுண்டுபண்ணும் கொடிய வினை. வினையினின்றும் தம்மைத் தலைவனாகிய கடவுள் காப்பன் என்போர் அறியாதார் என்க. இஃது இறைவனொருவனுண்மை துணிந்து வினைத்துயர் நீங்க அன்புநெறியில் வழிபடும் சைவர் முதலாயினார்க்கு மறுப்பு.

2. மறம் செய்துளது - பாவம் செய்யப்பட்டதாயின்.

3. தீங்கு - துன்பம். 4. கணவனை - உதயகுமரனை.

என்று கூறிவிட்டு, அதன்மேலும் மணிமேகலைக்கு நிகழ விருப்பனவற்றையும் முன்பே மொழியத் தொடங்கி,

இன்னுங் கேளாய்: இளங்கொடி நல்லாய்!
மன்னவன் மகற்கு [1]வருந்துதுயர் எய்தி
மாதவர் உணர்த்திய வாய்மொழி கேட்டு,
காவலன் நின்னையும் [2]காவல்செய் தாங்கிடும்;
ஈடு சிறைநீக்கி, இராசமா தேவி
கூட வைக்கும் [3]கொட்பின ளாகி,
மாதவி [4]மாதவன் மலரடி வணங்கித்
தீது கூறஅவள் தன்னொடும் சேர்ந்து
மாதவன் உரைத்த வாய்மொழி கேட்டுக்
[5]காதலி நின்னையும் காவல் நீக்குவள்;
அரைசாள் செல்வத்து ஆபுத் திரன்பால்,
[6]புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை;
போனு லவனொடும் [7]பொருளுரை பொருந்தி,
[8]மாநீர் வங்கத்து அவனொடும் எழுந்து,
[9]மாயமில் செய்தி மணிபல் லவமெனும்
தீவகத்து [10]இன்னும் சேறலு முண்டால்;
தீவ திலகையின் தன்திறம் கேட்டுச்

---

1. வருந்து துயர் - பிரிவெண்ணி வருந்துதற்கு ஏதுவாகிய துயரம்.

2. காவல் - சிறை.

3. கொட்பு - கொள்கை.

4. மாதவன் - அறவணவடிகள்.

5. காதலி - அன்புடையளாகிய.

6. புரையோர் - உயர்ந்தோர்; ஈண்டுச் சங்கத்தார். போகலும் போகுவை - போவாய்.

7. பொருளுரை - அறவுரை. பொருந்தி - கேட்டு.

8. மாநீர் - கடல்.

9 மாயம் இல் செய்தி - குற்றமில்லாத சிறப்பினையுடைய.

10. இன்னும் சேறல் - மறுபடியும் செல்வது. மணிமேகலை ஆபுத்திரனுடன் புறப்பட்டு, அவன் வங்கத்தில் வர, தான் விசும்பு வழியாக மணிபல்லவம் அடைந்தாள். உ௫-ஆம் காதை காண்க.

[1]சாவக மன்னன் தன்னா டடைந்தபின்
ஆங்கத் [2]தீவம்விட்டு அருந்தவன் வடிவாய்ப்
பூங்கொடி! வஞ்சி மாநகர் புகுவை;
ஆங்குஅந் நகரத்து [3]அறிபொருள் வினவும்
[4]ஓங்கிய கேள்வி உயர்ந்தோர் பலரால்.

இவ்வாறு பலராய சமயக்கணக்கர் தம் திறம் கேட்டு, அவர்கட்குத் தகுவன கூறிச் சிறப்பெய்துவாய்; ஆதலால், தீவினை வந்து உறுத்தலும் செத்தோர் பிறத்தலும் உண்மையென்று துணிந்து நின் மனமயக்கம் ஒழிவாயாக என்று கூறிற்று.

இவ்வண்ணம் சொல்லிப் போந்த அத்தெய்வம், தான் கந்திற்பாவையாய் நின்று மக்கட்கு வருவதுரைத்து வரும் திறத்தைக் கூறத்தொடங்கி,

என்திறம் கேட்டியோ: இளங்கொடி நல்லாய்!
[5]மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளோன்,
துவதிகன் என்பேன்; [6]தொன்றுமுதிர் கந்தின்
மயன்எனக் கொப்பா வகுத்த பாவையின்
நீங்கேன் யான்; என் நிலையது கேளாய்;
மாந்தர் அறிவது வானவர் அறியார்;
ஓவியச் சேனன்என் [7]உறுதுணைத் தோழன்
ஆவதை இந்நகர்க்கு ஆருரைத் தனரோ?
அவனுடன் யான்சென்று ஆடிட மெல்லாம்
[8]உடனுறைந் தார்போல் ஒழியா தெழுதிப்

1. சாவக மன்னன் - ஆபுத்திரன்.
2. தீவம் - மணிபல்லவம்.
3. அறிபொருள் - அறிந்த சமயப் பொருள்.
4. ஓங்கிய - உயர்ந்த. உயர்ந்தோர் பலரால் - உயர்ந்தோர் பலர் உளர்.
5. மன் - நிலைபெற்ற. கணம் - கூட்டம்.
6. தொன்று முதிர் கந்து - மிகப் பழமையான தூண். மயன் - தெய்வத் தச்சன்.
7. உறுதுணை - மிக்க துணைவன்.
8. உடன் உறைந்தார் - உடனிருந்து கண்டவர்.

பூவும் புகையும் [1]பொருந்துபு புணர்ந்து
[2]நாநனி வருந்தஎன் நலம்பா ராட்டலின்
மணிமே கலை!யான் வருபொருள் எல்லாம்
துணிவுடன் உரைத்தேன்; என்சொல் [3]தேறுக.

என்று சொல்லவே, மணிமேகலை, "தேறுதொழியேன்; இனி எனக்கு முடிவுகாறும் நிகழவிருப்பனவற்றையும் கூறுக" என்று கேட்டாள். அவ்வாறே அவற்றையும் சொல்லத் தொடங்கிய அத்தெய்வம், காஞ்சிமாநகர் வறம் படுதலும், ஆங்கே மணிமேகலை சென்று தன் பிச்சைப் பாத்திரத்தால் உயிரோம்புதலும், மேலும் அங்கு நிகழும் நிகழ்ச்சிகளும், சமயக்கணக்கர் பலரொடு கேட்டவற்றை அறவணவடிகட்கு உரைப்பதும், அவர் தன்செயல் செப்புவதும், பின்பு மணிமேகலை மகதநாட்டில் ஆண்மகனாய்ப் பிறந்து அருளறம் பூண்டு, புத்ததேவனுக்கு முதல் மாணவனாகுதலும் பிறவும் கூறி, "நீ முற்பிறப்பில் சாதுசக்கரமுனிவற்கு அமுதளித்த நல்வினைப் பயனால், மணிமேகலா தெய்வம் நின்னை மணிபல்லவத்துக்குக் கொண்டு சென்று புத்தபீடிகை கண்டு பழம்பிறப்பை நீ யுணர்ந்துகொள்ளுமாறு செய்தது" என்றும் சொல்லி முடித்தது.

## 22. சிறைசெய் காதை

பொழுது புலர்ந்ததும், சம்பாபதியையும் கந். பாவையையும் வழிபட வந்தவர் உதயகுமரன் வெட்டுண்டு கிடப்பதைக் கண்டு ஆங்கு வாழும் முனிவர்களுக்கு உரைத்தனர். அவர்கள் மணிமேகலையை வினவி நிகழ்ந்ததறிந்து அவளையும் உதயகுமரன் உடலையும் ஓரிடத்தே ஒளித்து விட்டு, நடந்த செய்தியை அரசர்க்குணர்த்தச் சென்றனர். சென்றவருள் ஒருவர், அரசனைக் கண்டு,

1. பொருந்துபு - பொருந்த.
2. நா நனி வருந்த - நா மிகத் தடிப்பேற.
3. தேறுக - தெளிவாய்.

உயர்ந்தோங் குச்சி [1]உவாமதி போல
[2]நிவந்தோங்கு வெண்குடை மண்ணகம் நிழற்செய,
வேலும் கோலும் [3]அருட்கண் விழிக்க;
தீதின் றுருள்க நீ ஏந்திய [4]திகிரி;
நினக்கென [5]வரைந்த ஆண்டுக ளெல்லாம்
மனக்கினி தாக: வாழிய வேந்தே!
இன்றே யல்ல; இப்பதி மருங்கில்
[6]கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து
பத்தினிப் பெண்டிர் பாற்சென் றணுகியும்
நற்றவப் பெண்டிர் பின்னுளம் போக்கியும்
[7]தீவினை யுருப்ப உயிர்[8]ஈறு செய்தோர்
[9]பாரான் வேந்தே! பண்டும் பலரால்;

என்று மொழிந்து, இவற்றுக்கு எடுத்துக்காட்டாகப் பார்ப்பனி மருதியென்னும் பத்தினிப் பெண்டிர்பால் கருத்தைச் செலுத்தி உயிரிழந்த ககந்தன் மைந்தன் செய்தியும், விசாகை யென்னும் நற்றவ மகள்மீது காதலுற்ற அம் மைந்தனுக்கு முன் பிறந்தோன் செய்தியும் எடுத்துக் கூறி அரசனை வாழ்த்தி நின்றனர். அதுகேட்ட வேந்தன்,

இன்றே யல்ல என்றெடுத் துரைத்து,
[10]நன்றறி மாதவிர்? [11]நலம்பல காட்டினிர்;
இன்றும் உளதோ இவ்வினை? உரையும்,

1. உவாமதி - முழுத்திங்கள்.
2. நிவந்தோங்கு - மிகவுயர்ந்த, ஒருபொருட் பன்மொழி.
3. அருட்கண் விழிக்க - அருளாகிய அறமே தழைப்பிக்க.
4. திகிரி - அரசாட்சி. அரசாட்சியை உருளை (திகிரி) என்றமையின், அதற்கேற்ப, "உருள்க" என்றார். செல்க என்பது கருத்து.
5. வரைந்த - அறுதியிட்ட.
6. கன்றிய - செறிந்த; அடிப்பட்ட.
7. தீவினை உருப்ப - தீவினை வந்து தூண்ட.
8. ஈறு - கேடு. 9. பார் - சோறுடு.
10. நன்று - அறம்.
11. நலம் பல - நற்செய்திகள் பல.

என்று வினவினன்; அவனுக்கு அம்மாதவர் கூட்டத்து ஒருவர் முன்வந்து, "நீநின்றாக, செங்கோல் வேந்தே!" என்று தொடங்கி,

> [1]முடிபொருள் உணர்ந்தோர் [2]முதுநீருலகில்
> [3]கடியப்பட்டன ஐந்துள; அவற்றில்,
> கள்ளும் பொய்யும் களவும் கொலையும்
> தள்ளா தாகும் காமம்; தம்பால்
> ஆங்[4]கது கடிந்தோர் [5]அல்லவை கடிந்தோரென
> நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள்;
> நீங்கா ரன்றே, நீள்நில வேந்தே
> [6]தாங்கா நரகம் தன்னிடை வீழ்ப்போர்

என்று தொடங்கி, மணிமேகலையின் வரலாறும், அவள்பால் உதயகுமரன் கருத்துச் செலுத்தியுழன்ற திறமும், அவன் காயசண்டிகையின் வடிவுகொண்டு திரிந்த வகையும், விஞ்சையன் செய்தியும் விரியக் கூறி,

> ......தீவினை உருத்த தாகலின்,
> [7]மதிமருள் வெண்குடை மன்ன! நின்மகன்
> உதய குமரன் ஒழியா னாக,
> ஆங்கவள் தன்னை அம்பலத் தேற்றி,
> ஓங்கிருள் யாமத்து இவனைஆங் குய்த்துக்
> காயசண் டிகைதன் கணவ னாகிய
> [8]வாய்வாள் விஞ்சையன் தன்னையும் கூஉய்

1. முடிபொருளுணர்ந்தோர் - "பாரமார்த்திக ஞானிகள்".
2. முது நீர் உலகு - பழைமையான கடல் சூழ்ந்த உலகில்.
3. கடியப்பட்டன - விலக்கப்பட்டன. அவை, கள், பொய், களவு, கொலை, காமம்.
4. அது - காமம்.
5. அல்லவை - ஏனைய கள் முதலிய நான்கு.
6. தாங்கா நரகம் - பொறுக்கமாட்டாத துன்பம் தரும் நரகம்.
7. மதிமருள் வெண்குடை - முழுமதி போலும் வெண் கொற்றக்குடை.
8. வாய் வாள் - வெட்டுதலில் தப்பாத வாள்.

விஞ்சை மகள்பால் இவன்வந் தனனென
[1]வஞ்ச விஞ்சையன் மனத்தையும் கலக்கி
ஆங்கவன் தன்கை வாளால் அம்பலத்து
ஈங்கிவன் தன்னை எறிந்தது,

என்று சொன்னார். அதுகேட்ட அரசன் நெஞ்சில் தன் மகன் செய்கையை அருவருத்து, அருகுநின்ற சோழிக ஏனாதியை நோக்கி,

யான் [2]செயற் பாலது இளங்கோன் தன்னைத்
தான்செய் ததனால் [3]தகவிலன் விஞ்சையன்;
மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றால்;
மகனை முறைசெய்த [4]மன்னவன் வழி, ஓர்
[5]துயர்வினை யாளன் தோன்றினன் என்பது,
வேந்தர் தம்செவி [6]உறுவதன் முன்னம்
ஈங்குஇவன் தன்னையும் ஈமத் தேற்றிக்
[7]கணிகை மகளையும் காவல் செய்க

என்று பணித்தான். மணிமேகலையும் சிறையிடப்பெற்றாள்.

---

1. வஞ்ச விஞ்சையன் - கொலையை மனத்தே கொண்டிருந்த காஞ்சனன். அத்தீவினை, அவனை ஏற்றி, இவனை உய்த்து, விஞ்சையனைக் கூஉய், மனத்தையும் கலக்கி, வாளால் எறிந்தது என இயைக்க.

2. செயற்பாலது - செய்தற்குரிய கொலைத் தண்டத்தை.

3. தகவிலன் - அரசு நெறியறியும் தகுதியில்லான்.

4. மன்னவன் - மனு வேந்தன்.

5. துயர் வினையாளன் - தீவினையாளன் (உதயகுமரன்).

6. உறுவதன்முன் - அடைவதற்கு முன்பே.

7. கணிகை - மாதவி. மகள் - மணிமேகலை. தன் மகன் கொலையுண்டற்கும், தன் குடி பழி யெய்துதற்கும் காரணமாதவின், மணிமேகலையைத் தாய்முறை கொண்டு, "கணிகை மகள்" என அரசன் இகழ்ந்தான் என்க.

## 23. சிறைவிடு காதை

தன் புதல்வன் உதயகுமரன் கொலையுண்டிறந்ததனால், சோழவேந்தன் மனைவி இராசமாதேவிக்கு உண்டான துயரத்திற்கு எல்லையில்லையாயிற்று. அரசன் கோயிலில் அரசர்க்காயினும், அரசகுமரர்க்காயினும், அரசியர்க்காயினும் தகுவன கூறித் துயராற்றுவிக்கும் சான்றோர் பலர் இருந்தனர். அவருள் வாசந்தவையென்பாளும் ஒருத்தி. இவள் ஒரு பெரு முதியோள். இராசமாதேவிக்கு நேர்ந்த துயரம் துடைக்கும் கருத்தினளாய் அவள் அரசியின் கோயிற்கு வந்தாள். வந்தவள், அரசியின் அடியில் வீழ்ந்துரைக்கும் அமைதியை விலக்கி,

அழுது அடிவீழாது ஆயிழை தன்னைத்
தொழுது முன்னின்று [1]தோன்ற வாழ்த்திக்
[2]கொற்றம் கொண்டு குடிபுறங் காத்துச்
[3]செற்ற தெவ்வர் தேஎந்தம தாக்கியும்,
தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்ந்து
[4]செருப்புகல் மன்னர் [5]செல்வுழிச் செல்கஎன
மூத்து விளிதல்இக் குடிப்பிறந் தோர்க்கு
[6]நாப்புடை பெயராது; நாணுத்தக வுடைத்தே,
தன்மண் காத்தன்று, பிறர்மண் கொண்டன்று;
என்னெனப் படுமோ நின்மகன் முடிந்தது!

1. தோன்ற - தான் தேவியின் அடி வீழாமைக்குரிய ஏது தோன்ற.

2. கொற்றம் - அரசவுரிமை.

3. செற்ற தெவ்வர் - பகைத்த பகைவர்.

4. செருப்புகல் மன்னர் - போரை விரும்பும் அரசர்.

5. செல்வுழிச் செல்க என விளிதலின்றி, வறிதே மூத்து விளிதல் என இயைக்க. "நோற்றோர் மன்ற தாமே கூற்றம், கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோர்"—(அகம். 61.) விளிதல் - சாதல்.

6. நாப்புடை பெயராது - நா கூறுதற்கு எழாது. நாணுத் தகவுடைத்து - நாணும் தகுதியுடைத்து.

[1]மன்பதை காக்கும் மன்னவன் தன்முன்
துன்பங் கொள்ளேல் என்று அவள்

சொல்லிவிட்டுப் போயினள். இராசமாதேவியும் ஒருவாறு தேறி, தன் மகன் இறந்ததற்குக் காரணமாய் நின்ற மணிமேகலையை வஞ்சனையால் முடிக்கத் துணிந்து, புறத்தே மெய்யன்பும் தெளிந்த வுணர்வுமுடையாள்போல் நடித்து, ஒருநாள் அரசனை நண்ணி, அவன் அடிவீழ்ந்து தொழுது,

பிறர்பின் செல்லாப் [2]பிக்குணிக் கோலத்து
அறிவு [3]திரிந்தோன் [4]அரசியல் தான்இலன்;
கரும்புடைத் தடக்கைக் காமன் [5]கையற
அரும்பெறல் இளமை [6]பெரும்பிறி தாக்கும்
[7]அறிவு தலைப்பட்ட ஆயிழை தனக்குச்
சிறை [8]தக்கன்று செங்கோல் வேந்தே!

என்று சொல்லவே, அரசன் அவளது வஞ்சமறியாது, சிறந்த அறிவினால் ஆய்ந்து,

[9]சிறப்பின் பாலார் மக்கள்; அல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க்கு என்பது,
அறிந்தனை யாயின் இவ்வாயிழை தன்னைச்
செறிந்த [10]சிறைநோய் தீர்க்க என்று

அரசிக்குத் தெரிவித்து ஏவலரை நோக்கி மணிமேகலையைச் சிறைவிடுமாறு பணித்தான். உடனே இராசமாதேவி, "அரசே,

1. மன்பதை - மக்கள்.
2. பிக்குணிக் கோலத்து - பிக்ஷுணியின் வேடத்தால்.
3. திரிந்தோன் - கலங்கி வேறுபட்ட உதயகுமரன்.
4. அரசியல் - அரசருக்குரிய தகுதி.
5. கையற - செயலற்றொழிய.
6. பெரும்பிறி தாக்கும் - பயன்படா வகையிற் கெடுக்கும்.
7. அறிவு - தவஞானம்.
8. தக்கன்று - தக்கதன்று.
9. சிறப்பின்பாலார் - கல்வி, அறிவு, ஒழுக்கம் என்ற சிறப்பின் பகுதி யுடையவர்களே. மக்கள் - புதல்வர்.
10. சிறை நோய் - சிறைத் துன்பம்.

ப்பினும் இருக்க,இவ் விளங்கொடி
தன்ஒடு எடுப்பினும் [1]தகைக்குநர் இல்"

என்றுரைத்து, மணிமேகலையை மெல்லக் கொணர்ந்து தன் அகநகர்க்கண்ணே தங்குமாறு செய்துகொண்டாள். பின்பு மணிமேகலைக்குப் பித்துண்டாமாறு மருந்தொன்றைத் தந்தாள்; மறுபிறப் புணர்ந்தவளாதலின் அவளை அம் மருந்து ஒன்றும் செய்யவில்லை. பின்பொருகால், அரசி கல்லா இளைஞன் ஒருவனை யழைத்து அவன் கைந்நிரம்பப் பொன் கொடுத்து, மணிமேகலை மார்பில் புணர்குறிசெய்து பழிப்புண்டாமாறு செய்ய விடுத்தாள். அவன் வருகைக் குறிப்பறிந்ததும் மணிமேகலை, வேற்றுருக்கொள்ளும் மந்திரம் ஓதி, ஆணுருக் கொண்டிருந்தாள். வந்தவன், "அரசர் உரிமை மகளிர் இருக்குமிடத்தே ஆடவர் குறு கார்; இங்கோர் ஆடவன் உளன்; ஈது ஏதோ வஞ்சம்" என்று அஞ்சி யோடிவிட்டான். வேறோர் நாள், மணி மேகலை நோயால் உணவுகொள்வதிலள் எனப் பொய் கூறி, அவளை, அரசி ஒரு புழுக்கறையில் உணவு கொடாது அடைத்து வைத்தாள்; ஆயினும் அம் மணிமேகலை ஊணொழி மந்திரம் ஓதி, மேனி வருந்தாது இனிதிருந் தாள். இச் செய்கைகளால் அவட்குச் சிறிதும் தீங்கு நேராதது கண்டதும் இராசமாதேவி மிகவும் அச்சமுற்று, அவளைத் தாள் தொழுது, தன் மகன்மேல் வைத்த காத லால் தான் பிழையாகச் செய்தவற்றைப் பொறுக்கவேண் டினள். மணிமேகலை அவ்வாறே பொறுத்து, "அரசி நின்மகன் சென்ற பிறப்பில் இராகுலன் என்னும் பெய ருடன் வாழ்ந்து திட்டிவிடத்தால் தீங்குற்று இறந்தான் அப்போது அவன்பொருட்டு யான் உயிர்துறந்தேன். நீ யாது செய்தனை? இப் பிறப்பில் அவன்பொருட்டு வருந்தும் நீ முன்பிறப்பில் அவனுக்காக அழுதாயல்லையே

பூங்கொடி நல்லாய்! பொருந்தாது செய்தனை.
உடற்கழு தனையோ? உயிர்க்கழு தனையோ?
உடற்கழு தனையேல், உன்மகன் தன்னை

1. தகைக்குநர் - தடுப்பவர்.

எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே!
உயிர்க்கழு தனையேல், உயிர்புகும் [1]புக்கில்
[2]செயப்பாட்டு வினையால் [3]தெரிந்துணர் வரியது;
அவ்வுயிர்க் கன்பினை யாயின், ஆய்தொடி!
எவ்வுயிர்க் காயினும் இரங்கல் வேண்டும்.

நின்மகன் இறத்தற்குக் காரணமாகியது, முற்பிறப்பில் மடைக்கலம் சிதைத்தானென்று மடையனைக் கொன்ற தீவினையே. அதுவே இன்று விஞ்சையன் வாளால் இவன் வெட்டுண்டு வீழச்செய்தது. இதனை யெவ்வாறு அறிந்தா யெனின் கூறுவேன், என்று தான் மலர்வனம் புகுந்தது முதல் உலகவறவியில் தெய்வம் உரைத்தது ஈறாக நிகழ்ந் தவை முற்றும் தேவி நெஞ்சு கொள்ளுமாறு கூறிமுடித் தாள். அதன்மேலும், இராசமாதேவி நிகழ்த்திய தீங்கு களையும், அவற்றில் தான் உய்ந்து தீர்ந்த வகையையும் சொல்லி,

[4]அந்தரம் சேறலும் [5]அயலுருக் கோடலும்
சிந்தையிற் கொண்டிலேன், சென்ற பிறவியின்
[6]காதலற் பயந்தோய், கடுந்துயர் களைந்து
தீதறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டால்,

எனத் தன் கொள்கையை யுரைத்தாள். பின்பு, காமம், கொலை, பொய், களவு முதலிய குற்றங்களைக் கடிதல் வேண்டுமென்று சோல்லி, மேலும் சில அறங்களைக் கூற லுற்று,

1. புக்கில் - புகுமிடம்.
2. செயப்பாட்டு வினையால் - செய்யப்படுவனவாகிய இரு வகை வினையாலும்.
3. வினையால் உயிர்புகும் புக்கில் தெரிந்துணர்தல் அரிது என்க.
4. அந்தரஞ் சேரல் - விசும்பாறுகச் செல்லுதல்.
5. அயலுரு - வேற்றுருவம்.
6. காதலன் - இராகுலன். அவனே உதயகுமாரனைப் பிறந் தான். கடுந்துயர் - மகனையிழந்த மிக்க துன்பம்.

[1]செற்றம் செறுத்தோர், முற்ற உணர்ந்தோர்;
[2]மல்லல்மா ஞாலத்து வாழ்வோ ரென்போர்,
[3]அல்லல் மாக்கட்கு இல்லது நிரப்புநர்;
திருந்தேர் எல்வளை! [4]செல்லுல கறிந்தோர்,
வருந்தி வந்தோர் அரும்பசி களைந்தோர்;
துன்ப மறுக்கும் [5]துணிபொருள் உணர்ந்தோர்,
மன்பதைக் கெல்லாம் அன்பொழியார்

என்ற இவ்வறங்களை இராசமாதேவிக்கு ஓதி, அவளுற்ற வருத்தத்தைப் போக்கி, மனம் தெளிவடையச் செய்தாள்.

[6]ஞானநன்னீர் நன்கனம் தெளித்துத்
[7]தேனா ரோதி செவிமுதல் வார்த்து
[8]மகன்துயர் நெருப்பா மனம்விற காக
அகஞ்சுடு வெந்தீ ஆயிழை யவிப்ப;
[9]தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து
[10]மாறுகொண் டோரா மனத்தின ளாகி

1. செற்றம் செறுத்தோர் - பகைமை நெடிது நிற்கும் சினமாகிய குற்றத்தை அறச் சிதைத்தவர்.

2. மல்லல் - வளம்.

3. அல்லல் மாக்கள் - துன்பமுறும் மக்கள். நிரப்புநர் - நிரம்பக் கொடுப்பவர்.

4. செல்லுலகு - எடுத்த உடம்பின் நீங்கிச் சென்றடையும் நல்லுலகம்.

5. துணிபொருள் - "பரமார்த்த தத்துவ ஞானம்."

6. ஞான நல் நீர் - ஞானமாகிய நல்ல நீர்.

7. தேனாரோதி செவி முதல் - தேன் பொருந்திய கூந்தலையுடைய இராசமாதேவியின் செவியின்கண். தேனாரோதி - அன்மொழித் தொகை.

8. மகனையிழந்த துயராகிய நெருப்பு மனம் விறகாகப்பற்றி, உள்ளத்தைச் சுட்டெழுந்த கொடிய தீ என்க. ஆயிழை - மணிமேகலை.

9. தேறுபடு சின்னீர் - தேற்றாங்கொட்டையால் தெளிவிக்கப்பெற்ற சிறிதாகிய நீர். சிறிதாகிய நீரைச் சின்னீர் என்றல் மரபு.

10. மாறு கொண்டு - பகைமை கொண்டு. ஓரா - தெளியாத

ஆங்குஅவள் தொழுதலும், ஆயிழை பொருஅள்
தான்தொழு தேத்தித் [1]"தகுதி செய்திலை;
[2]காதலற் பயந்தோய்; அன்றியும், காவலன்
மாபெருந் தேவி," என்று எதிர் வணங்கினளென்.

## 24. ஆபுத்திரனொடு அடைந்த காதை

சித்திராபதி யென்னும் முதுகணிகை, தன் சூழ்ச்சியால் உதயகுமரன் உலகவறவி புக்கு உயிரிழந்தான் என்பது உணர்ந்து நெஞ்சு நடுங்கி மெய்வருந்தி, இராசமா தேவியை அடைந்து அவள் திருவடியில் வீழ்ந்து வணங்கித் தொழுது,

[3]தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாள்முதல்
யானுறு துன்பம் யாவரும் பட்டிலர்;
மாபெருந் தேவி! மாதர் யாரினும்,
[4]பூவிலை யீத்தவன் பொன்றினன் என்று,
மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்ததும்,
[5]பரந்துபடு மனைதொறும் பாத்திரம் ஏந்தி
[6]அரங்கக் கூத்திசென்று ஐயங் கொண்டதும்,
நகுத லல்லது [7]நாடகக் கணிகையர்
தகுதி யென்னார், தன்மை யன்மையின்;

1. தகுதி - தக்க செயல்.
2. காதலன் - உதயகுமரன்.
3. தொன்றுபடு மாநகர் - பழமை பொருந்திய காவிரிப்பூம் பட்டினத்தின்கண்.
4. பூவிலை ஈத்தவன் - மாதவி கூத்தும் பாட்டும் என்ற கலை வகை நிரம்பிப் பூத்த காலத்து அன்றைப்பரியம் கொடுத்துச் சேர்ந்த கோவலன். மாதவர் பள்ளி - அறவணவடிகள் உறையும் பள்ளி.
5. பரந்து படு மனை - மிகப் பலவாய் விரிந்த மனைகள்.
6. அரங்கக் கூத்தி - அரங்கமேறிக் கூத்தாடும் பான்மையளான மணிமேகலை.
7. நாடகக் கடிகையர் - நாடகமாடும் கணிகை மகளிர்.

மன்னவன் மகனே யன்றியும் மாதரால்,
இந்நகர் உறூஉம் இடுக்கணும் உண்டால்,

என்று சொன்னவள், முன்பொருகால் சோணாட்டை யாண்ட நெடுமுடிக்கிள்ளி யென்பான் கடற்கானற் பூம் பொழிலில் பீலிவளை யென்ற ஒரு நாகநாட்டு மகளைக்கண்டு அவள் நலத்திற் கருத்தைப் போக்கிப் பேதுற்று நிற்கை யில், அவள் மறைந்தனள்; அவளைத் தேடித் திரிந்த அவன் முன் தேவசாரணன் ஒருவன் தோன்ற, அவனை யரசன் வணங்கிக் கேட்ப, அவன்,

கண்டிலேன்; ஆயினும் காரிகை தன்னைப்
[1]பண்டறி வுடையேன்; [2]பார்த்திப! கேளாய்.
நாக நாடு [3]நடுக்கின் றாள்பவன்,
[4]வாகை வேலோன், வளைவணன்; தேவி,
வாச மயிலை வயிற்றுள் தோன்றிய
பீலிவளை யென்போள்; பிறந்த அந்நாள்
இரவிகுலத் தொருவன் இணைமுலை தோயக்
[5]கருவொடு வருமெனக் [6]கணியெடுத் துரைத்தனன்;
ஆங்கப் புதல்வன் வரூஉ மல்லது,
பூங்கொடி வாராள்; [7]புலம்பல்; இது கேள்;

என அச் சாரணன் மேலும் சொல்லலுற்று, இந்நகரில் இந்திரவிழா ஆண்டுதோறும் நிகழ்தல் வேண்டும்; தவறின் இந்நகர் கடலாற் கொள்ளப்படும். இது மணிமேகலா

1. பண்டு அறிவு உடையேன் - முன்பு கண்ட அறிவு உடை யேன்; முன்பு கண்டுள்ளேன் என்பது.

2. பார்த்திப - அரசே.

3. நடுக்கின்று - முறை பிறழ்வின்றி.

4. வாகை வேல் - வெற்றிமாலை சூடிய வேல். தேவி-மனைவி. தேவியாகிய வாசமயிலை யென்பவள்.

5. கருவொடு வரும் - கருப்பமுற்று வருவாள்.

6. கணி - சோதிடன்.

7. புலம்பல் - வருந்தாதே.

தெய்வத்தின் வாய்மை மொழி; இந்திரனது சாபமும் உண்டு என்று கூறிவிட்டு நீங்கினன்; கிள்ளியும் தன் நகரை யடைந்தான். அன்றுமுதல் இன்றுவரை இப் பூம்புகார் நகரத்தார் இந்திரவிழா எடுத்துவருகின்றனர். அவர் மனத்தே இதுபற்றிய அச்சம் இருந்துகொண்டே வருகிறது. இனி, மணிமேகலைக்கு இப்போதுண்டாய துன்பத்தால், அத்தெய்வம் தன் பெயரையுடையாட்கு உண்டாகிய துன்பம் காரணமாக வருமோ என்று அஞ்சுகின்றேன்; ஆதலால், அம் மணிமேகலையைச் சிறைவிடுத்து என்பால் தருக என வேண்டினள்.

இவ்வாறு சித்திராபதி வேண்டிச் சொன்னதைக் கேட்ட இராசமாதேவி,

> கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்,
> [1]உள்ளக் களவுமென்று உரவோர் துறந்தவை
> [2]தலைமையாக் கொண்டநின் தலைமையில் வாழ்க்கை
> [3]புலைமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி
> நின்னொடு போந்து நின்மனைப் புகுதாள்;
> என்னோ டிருக்கும்

என்று இயம்பினள். சித்திராபதி ஏக்கமுற்றாள். இந்நிலையில் மணிமேகலை சிறைப்பட்டமை சுதமதியால் அறிந்த மாதவி அறவணவடிகளை யடைந்து அவரை வணங்கி, நிகழ்ந்தது கூறி, மணிமேகலையின் சிறைவீடு விரும்பி அவருடன் இராசமாதேவிபால் வந்தனள். அடிகள் வரக் கண்ட இராசமாதேவி பொருக்கென எழுந்து இருக்கை தந்து அவர்க்கு வேண்டிய சிறப்புக்களைச் செய்து,

---

1. உள்ளக் களவு - உள்ளத்தால் பிறர் பொருளை மறையிற் கொள்ளக் கருதுதல்; இதுவும் குற்றமென்பதுபட, "உள்ளக் களவு" என்றார்.

2. தலைமையாக் கொண்ட தலைமையில் வாழ்க்கை-உரவோர் விலக்கியவற்றைத் தலைமைப் பொருளாகக் கொண்டொழுகுதல் கடைப்பட்ட பரத்தைமை வாழ்வு.

3. புலைமை - புலைத்தன்மை யுடையது.

[1]யாண்டுபல புக்க நும் இணையடி வருந்தஎன்
[2]காண்தகு நல்வினை நும்மையீங் கழைத்தது ;
[3]நாத்தொலை வில்லை யாயினும், தளர்ந்து
மூத்ததுஇவ் யாக்கை; வாழ்கபல் லாண்டு

என்று முகமன் மொழிந்தாள். கேட்ட அடிகள் மகிழ்வுற்று,

தேவி! கேளாய்: [4]செய்தவ யாக்கையின்,
மேவினே னாயினும் [5]வீழ்கதிர் போன்றேன்:
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றோர்
இறந்தார் என்கை இயல்பே; இதுகேள்:
பேதைமை செய்கை யுணர்வே [6]அருவுரு
வாயில் ஊறே நுகர்வே வேட்கை
பற்றே [7]பவமே [8]தோற்றம் வினைப்பயன்
இற்றென வகுத்த இயல்பீ ராறும்
பிறந்தோர் அறியின் [9]பெரும் பேறறிகுவர்
.............................................

அரைசன் தேவியொடு ஆயிழை நல்லீர்!
[10]புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின்,

1. யாண்டு பல புக்க நும் இணையடி - யாண்டு பல ஆதலின் முதுமையுற்ற நும் அடிகள் இரண்டும்.

2. காண்தகு நல்வினை - அழகிய நல்வினையானது:

3. நா தொலைவில்லை - அறம் உரைக்கும் உமது நா மெலிவடைந்ததில்லை.

4. செய்தவ யாக்கையின் மேவினேன் - தவம் செய்தற் கமைந்த இவ் யாக்கையோடு கூடியிருந்தேன்.

5. வீழ் கதிர் - மறையும் ஞாயிறு.

6. அருவுரு - பேதைமை முதல் வினைப்பயன் ஈறாகக் கூறிய பன்னிரு நிதானங்களுள் ஒன்று. "அருவுரு என்பது அவ்வுணர்வு சார்ந்த, உயிரும் உடம்புமாகும் என்ப." (மணி. 30 : 84-5.)

7. பவம்—"பவமெனப்படுவது கருமவீட்டம், தருமுறை இதுவெனத் தாந்தாம் சார்தல்." (மணி. 30 : 93-4.)

8. தோற்றம் - பிறப்பு.

9. பெரும் பேறு - பரி நிருவாணம்.

10. புரை தீர் - குற்றமில்லாத. குற்றமாவது - பிறவிக்கேதுவாய துறக்க இன்பந் தருதல்.

எனப் பலர்க்கும் பொதுப்படக் கூறி, மணிமேகலையைச் சிறப்பாக நோக்கி,

> மறுபிறப் புணர்ந்த மணிமேகலை, நீ
> [1]பிறவறங் கேட்ட பின்னுள் வந்து உனக்கு
> இத்திறம் பலவும் இவற்றின் பகுதியும்
> [2]முத்தேர் நகையாய்! முன்னுறக் கூறுவல்

என்று உரைத்துவிட்டுச் சென்றார். பின்பு மணிமேகலை யெழுந்து, அம் மகளிரை வணங்கி, "நீங்கள் இதுகாறும் கேட்ட நல்லறங்களை மறவாது கடைப்பிடித்தொழுகுமின்; யான் இனிமேல் இங்கு உறைவேனாயின், இவள் உதய குமரன் இறத்தற்கு ஏதுவாயினள் என்பராதலின், யான் ஆபுத்திரன் நாடு செல்வேன். அதன்பின், மணிபல்லவம் சென்று பீடிகை தொழுது வஞ்சிக்குச் சென்று பத்தினிக் கடவுட்கு நல்லறம் செய்வேன். எனக்கு இடர் உண்டா மென்று நீவிர் இரங்குதல் வேண்டா" என்று சொல்லி விட்டு, அந்திமாலை வந்ததும், உலகவறவியும் சம்பாபதி கோயிலும், கந்திற்பாவையும் வணங்கிப் பரவி, வான்வழி யாக ஆபுத்திரன் நாட்டையடைந்து ஆங்கு ஒரு பொழி லகத்தே தங்கி இளைப்பாறினள். சிறிது போதில், அவள் அங்கே வாழ்ந்த தருமசாவகன் என்னும் முனிவன் ஒரு வனைக் கண்டு,

> இந்நகர்ப் பேர் யாது? இந்நக ராளும்
> மன்னவன் யார்?

என்றாள். அவட்கு அம் முனிவன்,

> நாகபுரம் இது; நல்நக ராள்வோன்
> பூமி சந்திரன் மகன், புண்ணியராசன்;
> ஈங்கு இவன் பிறந்த அந்நாள் தொட்டும்
> ஓங்குயர் வானத்துப் பெயல் [3]பிழைப்பறியாது;

1. பிற அறம் - மற்றைய சமய வறங்கள்.
2. முத்தேர் நகை - முத்துப்போலும் பல்.
3. பிழைப்பறியாது - பெய்யா தொழிதல் இன்றாம்.

மண்ணும் [1]மரனும் வளம்பல தரூஉம் ;
[2]உண்ணின்று உருக்கும் நோய் உயிர்க்கு இல்லை

என்று உரைத்தான்.

## 25. ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை

புண்ணியராசனாகிய ஆபுத்திரன் தன் உரிமை மனைவியுடன் மணிமேகலை யடைந்திருந்த பொழிலையடைந்து, ஆங்கே வாழ்ந்திருந்த தருமசாவகன் என்னும் முனிவன்

அறனும் [3]மறனும் அநித்தமும் [4]நித்தத்
திறனும் துக்கமும் [5]செல்லுயிர்ப் புக்கிலும்
[6]சார்பின் தோற்றமும் சார்பறுத் [7]துய்தியும்
[8]ஆரியன் அமைதியும் அமைவுறக் கேட்டு

வருகையில், அவன் இருந்த பொழிலில் மணிமேகலை பிச்சைப்பாத்திரமேந்தி நிற்பது கண்டு வியந்து,

---

1. மரன் - மரங்கள்.

2. உள் நின்று உருக்கும் - உடற்குள்ளேயிருந்து உயிரை வருத்தும்.

3. மறன் - பாவம்.

4. நித்தத் திறன் - நித்தப் பொருள்களின் வகை.

5. செல்லுயிர்ப் புக்கில் - உடம்பின் நீங்கிச் செல்லும் உயிர்க்குப் புகுமிடம்.

6. சார்பின் தோற்றம் - பேதைமை முதலாகக் கூறிய பன்னிரண்டு; அவை ஒன்றினொன்று சார்ந்து தோன்றுவனவாதலின், "சார்பின் தோற்ற" மென்றார்.

7. உய்தி - வீடுபேறு.

8. ஆரியன் - அரியவனாகிய புத்தன். ஆரியன் என்பது அருமை யென்னும் சொல்லடியாகப் பிறந்த செந்தமிழ்ச் சொல்.

> [1]பெண்ணிணை யில்லாப் பெருவனப் புற்றாள்,
> கண்ணிணை யியக்கமும் [2]காமனோ டியங்கா,
> அங்கையிற் பாத்திரம் கொண்டு அறம் கேட்கும்
> இங்கு இணையில்லாள் இவள் யார் என்ன,

அருகே சட்டையணிந்த காவலன் ஒருவன், அரசனை வணங்கி, "அரசே, இவளையொப்பார் நாவலந்தீவில் ஒருவரும் இலர்; ஒருகால் யான் கிள்ளிவளவனுடைய கெழுதகைமை வேண்டிக் காவிரிப்பூம்பட்டினம் சென்றிருந்த காலத்து யான் இவளைப்பற்றி யறிந்தேன். ஆங்கே இவள் பிறப்பை யுணர்ந்து எனக்கு அறவணவடிகள் உரைத்தார் என்பதைத் தங்கட்கு முன்பே உரைத்துள்ளேன்; அவளே அப்பதியின் நீங்கி இப்போழ்தில் இங்கே வந்துள்ளாள்" என்றான். என்றதும், மணிமேகலை அரசனை நோக்கி, "அரசே,

> நின்கைப் பாத்திரம், என்கைப் புகுந்தது;
> [3]மன்பெருஞ் செல்வத்து மயங்கினை யறியாய்;
> அப்பிறப் பறிந்திலை யாயினும், [4]ஆவயிற்று,
> இப்பிறப் பறிந்திலை; என்செய் தனையோ?
> மணிப்பல்லவம் வலம் கொண்டா லல்லது,
> [5]பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியாய்;
> ஆங்கு வருவாய், அரச, நீ"

என்றுரைத்து, வான்வழியே படர்ந்து பகலோன் குடபால் மறைவதற்குள் மணிபல்லவத்தை யடைந்தாள். அங்கே

---

1. பெண் இணையில்லாப் பெருவனப்பு - பெண்களின் நிகரற்ற பேரழகு.

2. காமனொடு இயங்கா - காமக்குறிப்பு உடையவல்ல. ஏனை மகளிர் கண்ணிணை யியக்கத்தே இக் குறிப்புண்மையின், "பெண்ணிணையில்லாள்" என்றவன், மேலும் "இணையில்லாள்" என்றான்.

3. மன்பெருஞ் செல்வம் - அரசப் பெரும் போகம்.

4. ஆ வயிற்று இப்பிறப்பு - ஆவின் வயிற்றிற் பிறந்த இப் பிறப்பு. அப்பிறப்பு என்பதில், சுட்டு, சாலிவயிற்றிற் பிறந்த பிறப்பைச் சுட்டிற்று: பண்டறி சுட்டு.

5. பிணிப்பு - பற்று.

அவள், புத்தபீடிகையைக் கண்டு வலம் வந்து நிற்ப, அஃது அவட்குப் பழம் பிறப்புணர்வை நல்கிற்று. அவள், அப் பிறப்பில் காயங்கரையில் கண்ட பிரமதரும முனிவனை முன்னிலைப் படுத்திக்கொண்டு,

> [1]"பெருமகன் தன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம்
> விலங்கும் நரகரும் பேய்களு மாக்கும்
> [2]கலங்கஞர்த் தீவினை கடிமின்; கடிந்தால்,
> தேவரும் மக்களும் [3]பிரமரும் ஆகுதிர்;
> ஆகலின் நல்வினை அயராது ஓம்புமின்;
> புலவன், முழுதும் பொய்யின் றுணர்ந்தோன்,
> 'உலகுயக் கோடற்கு ஒருவன் தோன்றும்;
> அந்நாள் அவன் அறம் கேட்டோர், அல்லது
> [4]இன்னாப் பிறவி இழுக்குநர் இல்லை;
> [5]மாற்றரும் கூற்றம் வருவதன் முன்னம்
> போற்றுமின் அறம்' எனச் [6]சாற்றிக் காட்டி
> [7]நாக்கடிப்பாக வாய்ப்பறை யறைந்தீர்!
> அவ்வுரை கேட்டு நும் அடிதொழு தேத்த
> [8]வெவ்வுரை எங்கட்கு விளம்பினிர்;

---

1. பெருமகன் - அரசனான அத்திபதி. பெயர்வோர் - அவந்தி நகர்க்குச் செல்வோர்.

2. கலங்கஞர்த் தீவினை - கலங்குவதற்குக் காரணமான துன்பம் பயக்கும் கொலை முதலிய பத்துவகைப் பாவங்கள்.

3. பிரமர் - பிரம காயிக லோக முதலிய இருபது வகை உலகத்து வாழும் பிரம கணங்கள். தேவர் - தெய்வவுலகு ஆறினும் உள்ள தேவகணங்கள்.

4. இன்னாப் பிறவி இழுக்குநர் - துன்பந்தரும் பிறவித் தொடர்பு அறுத்தவர்.

5. மாற்றரும் - பிறரால் தடுத்தற்கரிய.

6. சாற்றி - எடுத்தோதி. காட்டி - ஏதுவும் பயனும் இயைபக்காட்டி.

7. கடிப்பு - பறையை அறையும் குறுந்தடி.

8. வெவ்வுரை - இன்னாச்சொல்; அஃதாவது "இராகுலன் திட்டிவிடத்தால் இறந்துபடுவன்; நீ அவனுடன் தீக் குளிப்பாய்" என்பது.

அன்றியும், அப்போதில் யான் புத்தன் தோன்றுமுன்பே இந்திரன் இப்பீடிகை அவற்கு இட்ட காரணம் என்னை? என்று வினவினேன்; அதற்கு புத்தன் தோன்றியபின் அவன் பிறப்பைத் தான் அறிந்துகொள்வதற்காக இந்திரன் இதனை அமைத்தான்; மேலும் இப்பீடிகை அப் புத்தனையல்லது பிறரைப் பொறாது என்று கூறியதுடன் அவ்விந்திரனே, இப் பீடிகையைப் புத்தனுகிய

[1]பெருமகற்கு அமைத்துப் பிறந்தார் பிறவியைத்
[2]தருமபீடிகை சாற்றுக என்றே
அருளினன்; ஆதலின், ஆயிழை பிறவியும்
[3]இருளறக் காட்டும் என்று எடுத்துரைத்த

வாய்மொழி எனக்கு இன்றும் அன்றேபோல் விளங்கு
" என்று கூறிப் பாராட்டி யேத்தி நின்றாள்.

இஃதிங்ஙனமாக, மணிமேகலை கூறியவற்றைக் கேட்டுக் கலக்கமுற்ற வேந்தன், நேரே தன் தாய் அமரசுந்தரிபாற் சென்று தன் பிறப்பு வரலாறு முழுதும் கேட்டு,

இறந்த பிறவியின் [4]யாய்செய் ததூஉம்,
பிறந்த பிறவியின் [5]பெற்றியும் நினைந்து,
செருவேல் மன்னர் [6]செவ்விபார்த் துணங்க,
அரைசுவீற் றிருந்து [7]புரையோர்ப் பேணி,
நாடகம கண்டு பாடற் பான்மையின்
[8]கேள்வி இன்னிசை கேட்டுத் தேவியர்

---

1. பெருமகற்கு - புத்தனை அறிந்து கோடற்பொருட்டு. பிறவி - பழம் பிறப்பு.
2. தரும பீடிகை - புத்த பீடிகை.
3. இருளற - விளங்க.
4. யாய் - சாலியாகிய தாய்.
5. பெற்றி - வரலாறு.
6. செவ்வி - பார்த்தற்குரிய சமயம். உணங்க - வாட.
7. புரையோர்-உயர்ந்தோர்; அமைச்சர் முதலிய சான்றோர்.
8. கேள்வி யின்னிசை - கேட்டின்புறத்தக்க இனிய இசை.

மதிமுகக் கருங்கண் [1]செங்கடை கலக்கக்
கருப்புவில்லி [2]யருப்புக்கணை தூவத்
[3]தருக்கிய காமக் கள்ளாட் டிகழ்ந்து
[4]தூவறத் துறத்தல் நன்றெனச் சாற்றித்
தெளிந்த நாதன்என் செவிமுதல் இட்டவித்து
[5]ஏதமின்றாய் இன்று விளைந்தது,
மணிமே கலைதான் காரண மாக,

என்று தன் அரசியற் சுற்றத்தார்க்குத் தெரிவித்தனன். இவற்றைக் கேட்டோருள், சனமித்திரன் என்னும் அமைச்சன், "மன்னன் மனம் வேறாயினன்" என்று நன்கறிந்து, அரசனை அடிவணங்கி,

எங்கோ வாழி; என்சொல் கேண்மதி ;
நுங்கோன் உன்னைப் பெறுவதன் முன்னாள்,
பன்னீ ராண்டிப் [6]பதிகெழு நன்னாடு
மன்னுயிர் [7]மடிய மழைவளம் கரந்து, இங்கு,
ஈன்றாள் குழவிக்கு இரங்கா ளாகித்
தான்தனி தின்னும் [8]தகைமைய தாயது ;
காய்[9]வெங் கோடையில் கார்தோன் றியதென
நீ தோன்றினையே; நிரைத்தார் அண்ணல் !
[10]தோன்றிய பின்னர்த் தோன்றிய உயிர்கட்கு
வானம் (o)பொய்யாது; மண்வளம் பிழையாது :
ஊனுடை யுயிர்கள் உறுபசி அறியா ;

1. செங்கடை - சிவந்த கடைக்கண்.
2. அருப்புக் கணை - மலராகிய அம்பு.
3. தருக்கிய - மயக்கிய.
4. தூவறத் துறத்தல் - ஒட்டுப் பற்றின்றித் துறத்தல்.
5. ஏதமின்றாய் - தீதின்றி ; மறதி முதலியவற்றாற் கெடாது.
6. இப்பதிகெழு நன்னாடு - இந்நகரத்தையுடைய சாவகநாடு.
7. மடிய - சாவ.
8. தகைமையது - வறுமை மிகுதியுடையது.
9. வெங்கோடை - கொடிய கோடைக்காலம்.
10. "தோன்றிய" என மீட்டும் கூறியது, பின்னர் உண்டான நலத்தின் சிறப்புணர்த்தற்கு.

நீ ஒழிகாலை, நின்நா டெல்லாம்,
[1]தாய்ஒழி குழவி போலக் கூஉம்;
[2]துயர்நிலை யுலகம் காத்தலின்றி, நீ
[3]உயர்நிலை யுலகம் வேட்டனை யாயின்,
இறுதி உயிர்கள் எய்தவும், இறைவ!
[4]பெறுதி விரும்பினை யாகுவை யன்றே?
தன்னுயிர்க் கிரங்கான், பிறவுயி ரோம்பும்
மன்னுயிர் முதல்வன் அறமும்ஈது அன்றால்;
[5]மதிமாறு ஓர்ந்தனை, மன்னவ!

என்று எடுத்துரைத்தான். இதனாலும் அரசன் எண்ணம் சிறிதும் மாறாதாயிற்று. ஆகவே அவன்,

மணிபல்லவம் வலம்கொள் ளுதற் கெழுந்த
[6]தணியா வேட்கை தணித்தற்கு அரிதால்;
அரசும் உரிமையும் அகநகர்ச் [7]சுற்றமும்
ஒருமதி எல்லை காத்தல் நின்கடன்,

என்று கூறி விடைபெற்றுச் சென்று, வங்கமேறி மணிபல்லவம் சென்று சேர்ந்தான். அவனை மணிமேகலை எதிர்கொண்டழைத்துச் சென்று, அத் தீவகத்துச் சோலையை வலம்வந்து புத்தபீடிகையைக் காட்டினள். வேந்தன் அதனைக்கண்டு வலம்வந்து பணிந்துநிற்ப, அப் பீடிகை அவனது பழம் பிறப்பின் நிகழ்ச்சியை,

கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை
மையறு மண்டிலம் போலக் காட்ட,

அறிந்த அந்த வேந்தன்,

---

1. தாயொழி குழவி - தாயையிழந்த குழவி.
2. துயர்நிலை யுலகம் - பிறவிக்கேதுவாகிய துன்பம் நிலை பெற்ற இம் மண்ணுலகு.
3. உயர்நிலை யுலகம் - நிருவாணம்.
4. பெறுதி - (உயிர்கள் எய்தும் இறுதியை) ஊதியம்.
5. மதிமாறு ஓர்ந்தனை - தன்னலம் கருதா நின் அறிவால், அதற்கு மாறாகத் தன்னலங் கருதிச் செல்ல நினைந்தனை.
6. தணியா வேட்கை - மாற்றமுடியாத ஆர்வம்.
7. சுற்றம் - அரசர் சுற்றம்.

என்பிறப் பறிந்தேன்; என்இடர் தீர்ந்தேன்;
தென்தமிழ் [1]மதுரைச் செழுங்கலைப் பாவாய்!
மாரி நடுநாள் [2]வயிறுகாய் பசியால்
ஆரிருள் அஞ்சாது அம்பலமணைந்து ஆங்கு
[3]இரந்தூண் வாழ்க்கை என்பால் வந்தோர்க்கு
[4]அருந்தூண் காணாது அழுங்குவேன் கையில்
நாடுவறங் கூரினும் இவ்வோடுவறங் கூராது;
ஏடா! அழியல்; எழுந்துஇது கொள்க என
அமுத சுரபி அங்கையில் தந்து என்
[5]பவம் அறுவித்த வானோர் பாவாய்!
உணர்வில் தோன்றி உரைப்பொருள் உணர்த்தும்
[6]மணித்திகழ் அவிரொளி மடந்தை நின்னடி,
தேவ ராயினும் [7]பிரம ராயினும்
[8]நா மாசு கழூஉம் நலம்கிளர் திருந்தடி,
பிறந்த பிறவிகள் [9]பேணுத லல்லது,
மறந்து வாழேன், மடந்தை!

எனச் சிந்தாதேவியை முன்னிலைப்படுத்து வணங்கி, மணிமேகலையுடன், அப் பீடிகைக்குத் தென்மேற்கில் உள்ள கோமுகி யென்னும் பொய்கைக் கரைக்குச் சென்று, ஒரு புன்னைமரத்தின் நீழலில் இருந்தனன். இவ்விருவரது வரவும், புன்னைநிழலில் பொருந்தியிருப்பது உணர்ந்த தீவதிலகை யென்பாள், அவர்முன் போந்து, அரசனைச் சிறப்பாக நோக்கி,

1. மதுரைச் செழுங்கலைப் பாவாய் - சிந்தாதேவி.
2. வயிறுகாய் பசி - வயிற்றை வெதுப்பும் பசி நோய்.
3. இரந்தூண் வாழ்க்கை - இரந்துண்டு வாழ்தல்.
4. அருந்தூண் - அருந்துதற்கு வேண்டும் உணவு.
5. பவம் - கருமக் கூட்டம்.
6. மணித்திகழ் அவிரொளி - மணிபோல் விளங்கும் ஒளி.
7. பிரமர் - பிரமகணங்கள்.
8. நா மாசு - நாவினது குற்றம்.
9. பேணுதல் - திருந்திய அடிகளை வணங்குதல்.

"அருந்துயிர் மருந்துமுன் அங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்த அப்பெரியோய்! வந்தனை;
அந்நாள் நின்னை [1]யயர்த்துப் போயினர்,
பின்னாள் வந்துநின் [2]பெற்றிமை நோக்கி,
[3]நின்குறி யிருந்து தம்முயிர் நீத்தோர்,
ஒன்பது செட்டிகள் உடலென்பு இவைகாண்;
ஆங்கவர் இடவுண்டு அவருடன் வந்தோர்,
ஏங்கி [4]மெய்வைத்தோர் என்பும், இவைகாண்;
[5]ஊர்திரை தொகுத்த உயர்மணல் புதைப்ப,
[6]ஆய்மலர்ப் புன்னை யணிநிழல் கீழால்
அன்புடை ஆருயிர் அரசற் [7]கருளிய
என்புடை யாக்கை இருந்தது, காணாய்,
[8]நின்னுயிர் கொன்றாய்; நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர்[9] கொன்றாய்;
கொலைவன் அல்லையோ! கொற்றவ னாயினை!"

என்றிவ்வாறு புண்ணியராசனுக்குச் சொல்லி வந்தவள், பின்பு மணிமேகலையை நோக்கி,

"பலர் தொழுபாத்திரம் கையின் ஏந்திய
[10]மடவரல் நல்லாய்! நின்றன் மாநகர்,
கடல்வயிறு புக்கது; காரணம் கேளாய்"

1. அயாத்து - மறந்து விட்டுவிட்டு.
2. பெற்றிமை - தன்மை.
3. நின் குறி இருந்து - நீ இறந்தவிடத்தே உண்ணா நோன்பு பூண்டு இருந்து. குறி - இடம்.
4. மெய் வைத்தோர் - உயிர் விட்டவர்.
5. ஊர்திரை - பரந்த அலைகள்.
6. ஆய்மலர் - அழகிய பூ.
7. அரசற்கு - அரசனாகிய நினக்கு (நின்பொருட்டு).
8. "நின்னுயிர் கொன்றாய்" என்பது முதலியன பழிப்பது போலப் புகழ்தல்.
9. பிறர் - ஒன்பது செட்டிகளும் பிறரும்.
10. மடவரல் - இளமை, அழகு.

என்று தொடங்கி, "நாகநாட்டரசன் பீலிவளையென்பாள், சோழனுக்குப் பிறந்த தன் மகனுடன் இத்தீவகம்போந்து பீடிகையை வலங்கொண் டேத்திநிற்ப, காவிரிப்பூம்பட்டினத்திற்குச் செல்லும் கம்பளச் செட்டியின் வங்கம் வந்து நிற்பக் கண்டு அவன்பால் மகனைத் தந்து, அரசன்பால் சேர்ப்பிக்குமாறு கொடுத்தனள். அச் செட்டி அவ்வாறே கொண்டு செல்லுங்கால், அவனது மரக்கலம் கடலில் அன்று இரவே கவிழ்ந்துவிட்டது. இதனை யவன் தப்பிச் சென்று, அரசர்க்குணர்த்த, அவன் மகனையிழந்த துயரம் பொறாது, கானலும், கடலும், கடற்கரையும் தேடித் திரிந்தனன். அதனால், அந்நகரம் இந்திரவிழா ஆற்றாது மறந்தொழிந்தது. உடனே மணிமேகலா தெய்வம் அந்நகரத்தைக் கடல்கொள்ளுமாறு சாபமிட்டாள்; அதனால் அது கடற்கு இரையாயிற்று. அரசனும் நெடுமுடிக்கிள்ளியும் தனிப்பட்டுப் போயினன் என்று சொல்லி, இச் செய்தியைத் தனக்கு அத்தெய்வம் கூறியதாகவும் தெரிவித்து, இந்நிகழ்ச்சியில், "நின் தாயரும் அறவண வடிகளுடன் வஞ்சிமாநகர் சென்றடைந்தனர்; இனி, நின் குலமுதல்வன் ஒருவனை அம் மணிமேகலாதெய்வம் முன்னாளில் ஆதரவு செய்தளித்ததும், அவன் பின்பு அறவரசாண்டதும் பிறவும் அறவணன்பால் கேட்டறிகுவை" என்று தெரிவித்துவிட்டு, அத் தீவதிலகையும் அவர்களை விட்டு நீங்கினள்.

பிறகு, புண்ணியராசன் மணிமேகலையுடன் தன் முன் பிறப்பின் உடம்பு புதையுண்டிருந்த இடமணுகி, அகழ்ந்து நோக்க, அங்கே அதன் என்புக்கூடு தோன்றக்கண்டு மனங் கலங்கினன். அவனை மணிமேகலை பார்த்து,

"என்னுற் றனையோ! [1]இலங்கு இதழ்த்தாரோய்!
நின்னுடு அடைந்துயான் நின்னை ஈங்கழைத்தது,
மன்னா! நின்றன் மறுபிறப் புணர்த்தி,

1. இலங்கு இதழ்த்தார் - விளங்குகின்ற பூ இதழ்களால் தொடுக்கப்பட்ட மாலை.

[1]அந்தரத் தீவினும் அகன்[2]பெருந் தீவினும்
நின்பெயர் [3]நிறுத்த; நீள்நில மாளும்,
அரசர் தாமே அருளறம் பூண்டால்,
பொருளு முண்டோ பிறபுரை[4] தீர்த்தற்கு?
அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்,
மறவாது இதுகேள் : மன்னுயிர்க் கெல்லாம்,
உண்டியும் உடையும் உறையுளு மல்லது,
கண்டது இல்,"

எனக் கட்டுரைத்தாள். இதைக் கேட்ட அவ் வேந்தன்,

"என்நாட் டாயினும் பிறர்நாட் டாயினும்,
நன்னுதல்! உரைத்த நல்லறம் செய்கேன்;
என்பிறப் புணர்த்தி என்னைநீ [5]படைத்தனை;
[6]நின்திறம் நீங்க லாற்றேன் யான்,"

என்றானே, இச் சொற்களைக் கேட்டதும், மணிமேகலை முறுவலித்து,

[7]"புன்கண் கொள்ளல்; நீ போந்ததற் கிரங்கி,நின்
மன்பெரு நாடு [8]வாயெடுத் தழைக்கும்;
[9]வங்கத் தேகுதி; வஞ்சியுட் செல்வல்,"

என்று கூறிவிட்டுத் தான் வான்வழியாக வஞ்சிமா நகர்க்குச் சென்றாள்.

---

1. அந்தரத் தீவு - இரண்டாயிரம் தீவு (அந்தமான், இலக்கத் தீவு).

2. பெருந்தீவு - நான்கு பெருந்தீவுகள். "நால்வகை மரபின் மாபெருந் தீவும், ஓரீராயிர சிற்றிடைத் தீவும் பிறவு மாங்கதன் இடவகையுரியன"—(மணி. 6 : 195-7)

3. நிறுத்த - நிறுத்துதற் பொருட்டு.

4. புரை - குற்றம். பிற - அசை.

5. படைத்தனை - அறம் பூணற்குரிய நல்லுணர்வு பெற

6. நின் திறம் - நின்னிடத்தினின்றும்.

7. புன்கண் - துன்பம். கொள்ளல் - கொள்ளாதே.

8. வாயெடுத்தழைக்கும் - தாயிழந்த குழவி தன் தாயை நோக்கி அழுது அழைப்பதுபோல வாய்விட்டாற்றி யழைக்கும்.

9. வங்கத்து ஏகுதி - மரக்கலத்தில் செல்வாயாக.

# 26. வஞ்சிமா நகர் புக்க காதை

தாய் கண்ணகியையும், தந்தை கோவலனையும் தான் காணவேண்டுமென்று எழுந்த வேட்கை மணிமேகலையுள்ளத்தை யலைப்ப, அவள் வஞ்சி நகரின் புறத்தே, அவர்களுடைய படிமம் நிறுவிய கோயிற்குள் நுழைந்து தன் வேட்கை தீர,

> வணங்கி நின்று [1]குணம் பல ஏத்தி.
> [2]"அற்புக்கடன் நில்லாது, நற்றவம் படராது,
> கற்புக்கடன் பூண்டு நும் [3]கடன் முடித்தது
> அருளல் வேண்டும்,"

என்று அழுது, கண்ணகிப் படிமத்தின்முன் நின்றாள். அப்போது கண்ணகி,

> "எம் [4]இறைக்குற்ற இடுக்கண் பொறாது,
> [5]வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாள்
> மதுராபதி யெனும் மாபெருந் தெய்வம்,
> இதுநீர் முன்செய் வினையின் பயனால்;

என்று தம் பழம்பிறப்பில் நிகழ்ந்த நிகழ்ச்சியை விளங்கவுரைத்து, அப்பிறப்பில் தன் கணவன் சங்கமனைப் பரதன் என்பான் பற்றிக் கொலை புரிவித்தானாக, அவன் மனைவி நீலி என்பாள் இட்ட சாபமே இத் துன்பத்துக்கு ஏதுவாயிற்று என அம் மதுராபதி வற்புறுத்திச் சொல்லியும்,

> சீற்றம் கொண்டு செழுநகர் சிதைத்தேன்;
> மேற்செய் நல்வினையின் [6]விண்ணவர்ச் சென்றேம்;

---

1. குணம் பல ஏத்தி - குணங்களைப் பலபடச் சொல்லிப் பரவி.

2. அன்புக் கடன் - கணவன் இறப்பின் உடன் இறத்தலும், தீ மூழ்கலும். தவம் - கைம்மை நோன்பு.

3. கடன் முடித்தது - மதுரையை எரித்துக் கணவனைக் கூடியது.

4. இறை - கணவனான கோவலன்.

5. வெம்மையின் - வெகுளித் தீயால்.

6. விண்ணவர்ச் சென்றேம் - விண்ணவராகி, விண்ணுலகு சென்றேம்.

அவ்வினை யிறுதியின் [1]அடுசினப் பாவம்,
எவ்வகை யானும் எய்துத லொழியாது;
[2]உம்பர் இல்வழி இம்பரிற் [3]பல்பிறப்பு
யாங்கணும் இருவினை யுய்த்து உமைப்போல,
நீங்கரும் பிறவிக் கடலிடை நீந்திப்
பிறந்தும் இறந்தும் [4]உழல்வோம்; பின்னர்,
மறந்தும் மழைமறா மகத நன்னாட்டுக்கு
ஒருபெருந் [5]திலகமென்று உரவோர் உரைக்கும்
[6]கரவரும் பெருமைக் கபிலையம் பதியில்,
அளப்பரும் [7]பாரமிதை அளவின்று நிறைத்துத்
[8]துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றி,
[9]போதி மூலம் பொருந்தி வந்தருளி...
எண்ணரும் [10]சக்கரவாளம் எங்கணும்
அண்ணல் [11]அறக்கதிர் விரிக்குங்காலை...
துன்பக் கதியில் [12]தோற்றர வின்றி,
அன்புறு மனத்தோடு அவன் அறம் கேட்டுத்

---

1. அடுசினப் பாவம் - மதுரையை எரித்ததற்கு ஏதுவாயிருந்த வெகுளியால் தோன்றிய பாவம்.

2. உம்பர் இல் வழி - விண்ணுலகத்தே நல்வினை நுகர்தல் இல்லாதபோது.

3. பல் பிறப்பு யாங்கணும் - எல்லாப் பிறப்பினும்.

4. உழல்வேம் - வருந்துவோம்.

5. திலகம் - மேலானது. உரவோர் - அறிவுடையோர்.

6. கரவரும் பெருமை - மறைக்க முடியாத பெருமை.

7. பாரமிதை - உடம்பு, உறுப்பு, பொருள் முதலியன குறைவறப் பெற்றுத் தான முதலிய பத்தும் உடையராதல். தானம், சீலம், பொறை, வீரியம், தியானம், உணர்ச்சி, உபாயம், அருள், வலிமை, ஞானம் என்ற இப்பத்தும் தசபாரமிதை எனப்படும்.

அளவின்று - குறைவின்றி.

8. துளக்கமில் - நடுக்கமில்லாத.

9. போதிமூலம் - அரசமரம்.

10. சக்கரவாளம் - உலகம் முப்பத்தாறும் தன்னுள் அடக்கிய கோளம்.

11. அறக்கதிர் - அறமாகிய ஒளிக்கதிர்.

12. தோற்றரவு - பிறத்தல்.

[1]துறவி புள்ளம் தோன்றித் தொடரும்
[2]பிறவிநீத்த பெற்றிய மாகுவம்;
அத்திற மாயினும் அநேக காலம்
எத்திறத் தார்க்கும் [3]இருத்தியும் செய்குவம்."

இவ்வாறு தாம் செய்தனவும் செய்யவிருப்பனவும் கூறிய கண்ணகியார், மேலே மணிமேகலைக்குச் சில கூறலுற்று,

[4]"நறைகமழ் கூந்தல் நங்கை! நீயும்,
முறைமையின் இந்த மூதூ ரகத்தே,
அவ்வவர் சமயத்து [5]அறிபொருள் கேட்டு,
[6]மெய்வகை யின்மை நினக்கே விளங்கிய
பின்னர்ப் பெரியோர் [7]பிடகநெறி கடவாய்,
இன்னது இவ்வியல்பு,"

என எடுத்துரைத்து, மேலும், "நீ இளையள் வளையள் என்று கருதி நினக்கு யாவரும் மெய்ப்பொருளை யுணர்த்த முன்வாரார்; ஆதலின், நீ வேற்றுருக் கொள்க" என்று பணித்தனுப்பினள். மணிமேகலையும் ஒரு மாதவன் வடிவு கொண்டாள்.

மாதவன் வடிவிற் புறப்பட்ட மணிமேகலை,

[8]தேவகுலமும் [9]தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையும் [10]மிடைந்து,

---

1. உள்ளம் துறவி தோன்றி - உள்ளத்தே துறவு உணர்வு தோன்றுதலால்.

2. பிறவி நீத்த பெற்றியம் - பிறவித் தொடர்பற்ற நிருவாண மெய்தியவராகுவம்.

3. இருத்தி - சித்தி.

4. நறை - தேன்.

5. அறிபொருள் - அறிதற்குரிய சமய நூற்பொருள்.

6. மெய்வகை யின்மை - அவை பொய்யாந்தன்மை.

7. பிடகநெறி - புத்தனருளிய ஆகமமாகிய பிடகநூல் நெறி. இப்பிடகம், சுத்தம், வினயம், அபிதன்மம் என மூவகைப்படும்.

8. தேவகுலம் - கோயில்.

9. தெற்றி - மேடை; திண்ணையுமாம்.

10. மிடைந்து - செறிந்து.

நற்றவ முனிவரும் [1]கற்றடங்கினரும்,
நன்னெறி காணிய [2]தொன்னூற் புலவரும்,
எங்கணும் விளங்கிய [3]எயிற் புறவிருக்கையின்
செங்குட்டுவன் எனும் செங்கோல் வேந்தன்
இருந்து அரசுபுரியும் வஞ்சிமா நகர்க்குட் புகுந்தனள்.

## 27. சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதை

வஞ்சி நகர்க்குட் சென்ற மணிமேகலை அங்கே இருந்த சமயக் கணக்கர் பலரையும் கண்டு அவரவர் சமயத்திறங் களைக் கேட்கலானாள். அவருள் வைதிக மார்க்கத்து அளவை வாதியை நோக்கி, "நின் கடைப்பிடியாது?" என வினவ, அவன்,

வேதவி யாதனும் கிருத கோடியும்
[4]ஏதமில் சைமினி எனும் இவ்வாசிரியர்
பத்தும் எட்டும் ஆறும் பண்புறத்
தத்தம் வகையால் தாம் பகர்ந் திட்டனர்;
காண்டல், கருதல், உவமம், ஆகமம்,
[5]ஆண்டைய அருத்தா பத்தியோடு இயல்பு,
ஐதிகம், [6]அபாவம், மீட்சி, ஒழிவு, அறிவு
[7]எய்தி உண்டாம்நெறி என்று இவை தம்மால்
பொருளின் உண்மை [8]புலங்கொளல் வேண்டும் என்றும்

---

1. கற்று அடங்கினர்-கற்றற்குரியவற்றைக் கற்று, அவற்றுட் கண்டதற்குத் தக நிற்பவர்.
2. தொன்னூற் புலவர் - பழைய நூல்களைக் கற்றுணர்ந்த புலவர்.
3. எயிற்புற விருக்கை - புறமதில் இருக்கை.
4. ஏதம்இல் - குற்றமில்லாத.
5. ஆண்டைய அருத்தாபத்தி - ஈண்டுக் கூறியதொன்றைக் கொண்டு ஆண்டு உள்ளதை யறிதற்குரிய அருத்தாபத்தியளவை.
6. அபாவம் - இன்மை.
7. எய்தியுண்டாம் நெறி - சம்பவம்.
8. புலங்கொளல் - அறிதல்.

இவை யொவ்வொன்றின் இலக்கணமும் முறையே கூறி, பிரமாணு பாசங்கள் எட்டு உள என்றும், அவை,

> [1]சுட்டுணர்வோடு, திரியக்கோடல், ஐயம்,
> தேராது தெளிதல், கண்டுணராமை,
> எய்தும் இல்வழக்கு, உணர்ந்ததை யுணர்தல்,
> நினைப்பு என நிகழ்வ

என்றும், இவற்றின் இயல்புகளையும் தெரியக் கூறினன். அதன்மேலும், அவனே,

> [2]பாங்குறும் உலோகாயதமே, பௌத்தம்,
> சாங்கியம், நையா யிகம் வைசேடிகம்,
> மீமாஞ் சகமாம்: சமயவாசிரியர்
> தாம், பிருகற்பதி, சினனே, கபிலன்,
> அக்கபாதன், கணாதன், சைமினி;
> மெய்ப் பிரத்தியம், அனுமானம், சாத்தம்,
> உவமானம், அருத்தா பத்தி, அபாவம்
> *இவையே இப்போது இயன்றுள அளவைகள்

என்று கூறினன். அவனை நீங்கியதும், ஈசனே இறைவன் எனக் கொள்ளும் சைவவாதி மணிமேகலை முன் நேர்பட்டான். அவனை வினவிய மணிமேகலைக்கு, அவன்,

> [3]இருசுடரோடு இயமானன் ஐம்பூத மென்று
> எட்டுவகையும் உயிரும் யாக்கையு மாய்க்

| | சமயம | ஆசிரியா | அளவை |
|---|---|---|---|
| * | உலோகாயதம் | - பிருகற்பதி | பிரத்தியக்கம் |
| | பௌத்தம் | - சினன் | பிரத்தியக்கமும் அனுமானமும் |
| | சாங்கியம் | - கபிலன் | பிரத்தியக்கமும் அனுமானமும் ஆகமமும் |

இவ்வாறே பிறவற்றையும் ஒட்டிக்கொள்க. சாத்தம்-ஆகமம்.

1. சுட்டுணர்வு - உள்ளதன் உண்மையை யுள்ளவாறு காண்டல்.

2. பாங்கு உறு - பகுதிகளான.

3. இருசுடர் - ஞாயிறும் திங்களும். இயமானன் - உயிர்.

[1]கட்டி நிற்போனும் [2]கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பி னோனும்
[3]துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
தன்னில் வேறுதான் ஒன்றிலோனும்
அன்னோன் இறைவனாகும்,

என்றான்; பிறகு, பிரமவாதி தோன்றி, "பேருலகமெல்லாம் தேவன் இட்ட முட்டையாகும்" என்றான்; வைணவவாதி, "கடல்வண்ணன், நாரணனே இறைவன்" என்றானாக, வேதவாதி மேல்வந்து சொல்லலுற்றான்.

கற்பம் கை, சந்தம்கால், எண்கண்,
தெற்றென் நிருத்தம் செவி, சிக்கை மூக்கு,
உற்ற வியாகரணம் முகம் பெற்றுச்
[4]சார்பில் தோன்றா ஆரண [5]வேதக்கு
ஆதியந்தம் இல்லை; அது நெறி,

என்ற அவ்வேதியன் உரை, மெய்த்திறம், வழக்கு என வுரைக்கும் எவ்வகையாலும் இசைவதன்று என உட்கொண்ட மணிமேகலை, ஆங்கே தோன்றிய ஆசீவகனைக் கண்டு, "நின் இறைவன் யாவன்? நின் நூற்பொருள் யாது?" என வினவினள். அவன்,

1. கட்டி நிற்போன் - சமைத்து நிற்பவன்.

2. கலையுருவினோன் - கலைகளை உருவாக உடையவன்.

3. துடைத்து - அழித்து. துயர் - பிறவியால் உளதாகும் இளைப்பு.

4. சார்பில் தோன்றா - ஓரிடத்தில் தோன்றாத.

5. வேதக்கு - வேதத்துக்கு. ஆரணத்துக்கு அங்கம் ஆறு உண்டு; அவை, கற்பம், சந்தம், நிருத்தம், சிக்கை, கணிதம், இலக்கணம், "வேதமாகிய புருடனுக்குக் கற்பம் கை, சந்தம் கால், கணிதம் கண், நிருத்தம் செவி, சிக்கை மூக்கு, இலக்கணம் முகம்," என்பர்.

எல்லையில் பொருள்களில் எங்கும் எப்பொழுதும்,
[1]புல்லிக் கிடந்து புலப்படுகின்ற
[2]வரம்பில் அறிவன் இறை; நூற்பொருள்கள் ஐந்து,

என்று கூறி, அவ்வைந்தும், உயிரும், நிலம், நீர், தீ, காற்று எனும் நால்வகை யணுக்களுமாம் என்று வகுத்தும்,

அவ்வணு உற்றும் கண்டும் உணர்த்திடப்
[3]பெய்வகை கூடிப் பிரிவதும் செய்யும்;
நிலம்நீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமரம் உடம்பெனத் திரள்வதும் செய்யும்;
வெவ்வேறாகி விரிவதும் செய்யும்;
அவ்வகை யறிவது உயிரெனப்படுமே

என உயிரையும், இவ்வாறே ஏனை நால்வகை யணுக்களையும் விரித்தும் கூறினன். அங்ஙனம் கூறுமிடத்து, அணுக்களின் பொதுவியல்பை,

சிதைவது [4]செய்யா ;
புதிதாய்ப் பிறந்தொன்று ஒன்றிற் புகுதா;
முதுநீரணு நிலவணுவாய்த் திரியா ;
ஒன்று இரண்டாகிப் பிளப்பதும் செய்யா ;
அன்றியும் [5]அவல்போல் பரப்பதும் செய்யா,

என்றும், உயிர்கள் சென்றெய்தும் பிறப்பும் வீடுபேறும் கூறலுற்று,

---

1. புல்லிக்கிடந்து - பொருந்தியிருந்து.

2. வரம்பில் அறிவன் - எல்லையில்லாத அறிவுடைய மற்கலி தேவன்.

3. பெய்வகை கூடி - பெய்யும் கூறுபாட்டால் நிலவணு முதலிய நால்வகை யணுக்களோடும் கூடி.

4. சிதைவது செய்யா - அழியா.

5. அவல்போல் - அவலைப்போல.

[1]கரும் பிறப்பும் கருநீலப் பிறப்பும்
பசும் பிறப்பும் செம் பிறப்பும்
பொன்ன் பிறப்பும் வெண்ண் பிறப்பும்
என்று இவ்வாறு பிறப்பினும் மேவிப்
பண்புறு வரிசையிற் [2]பாற்பட்டுப் பிறந்தோர்,
[3]கழிவெண் பிறப்பிற் கலந்து வீடணுகுவர்

என்றும், உயிர்கள்,

பெறுதலும் இழத்தலும் இடையூ றுறுதலும்,
[4]உறுவிடத் தெய்தலும் துக்கசுக முறுதலும்,
[5]பெரிதவை நீங்கலும் பிறத்தலும் சாதலும்
[6]கருவிற் பட்ட பொழுதே கலக்கும்;
இன்பமும் துன்பமும் இவையும் அணுவெனத் தரும்;
முன்னுள ஊழே பின்னும் உறுவிப்பது
மற்கலி நூலின் வகை இது"

என்றும் கூறி முடித்தான். அவனை விட்டு, நிகண்ட வாதியை நோக்கி, மணிமேகலை, "நின்னால் புகழும் தலைவன் யார்? நின் நூற்பொருள் யாவை?" என்றாள். நிகண்ட வாதி,

இந்திரர் தொழப்படும் [7]இறைவன் எம் இறைவன்;
தந்த நூற்பொருள் [8]தன்மாத்திகாயமும்,

---

1. கரும்பிறப்பு முதலாகக் கூறுவன பிறப்புவகை. இவை முறையே ஒன்றினொன்று சிறந்தன. கரும்பிறப்பு, கருநீலப் பிறப்பு, பசும்பிறப்பு, செம்பிறப்பு, பொன்பிறப்பு, வெண்பிறப்பு என வருவன

2. பாற்பட்டு - பகுதிக்கண் உற்று.

3. கழிவெண்பிறப்பு - மிக வெண்மையான (தூய) பிறப்பு.

4. உறுவிடத்து - எய்துதற்குரிய விடத்து.

5. அவை பெரிது நீங்கல் - அவற்றின் முழுதும் நீங்கல்.

6. கருவிற் பட்டபொழுதே - கருப்பத்திலே கருவாகிய போதே.

7. இறைவன் - அருகன். இந்திரர் - நூறுவகை இந்திரர்.

8. தன்மாத்திகாயம் - எங்கும் உளதாகி எஞ்ஞான்றும் பொருள்களை நடத்துவது (மணி. 27 : 187-8).

[1]அதன்மாத்திகாயமும் காலா [2]காயமும்
நீதில் சீவனும் பரமாணுக்களும்
நல்வினையும் தீவினையும் அவ்வினையால்
செய்வுறு [3]பந்தமும் வீடும் இத்திறத்த

எனத் தன் நூற்பொருளைத் தொகுத்தும், பின்பு ஒவ்வொன்றையும் விரித்தும் கூறி முடிவில், வீடுபேற்றியல்பை,

சீர்சால் நல்வினை தீவினை யவை செயும்
வருவழி யிரண்டையும் மாற்றி முன்செய்
அருவினைப் பயன் அனுபவித் [4]தறுத்திடுதல்;
அது வீடாகும்,

என்றனன். அவன்பின் சாங்கியன் தோன்றித் தன் சாங்கிய நூற்கருத்தை யுரைக்கத் தொடங்கி,

தனையறிவரிதாய்த் தான் முக்குணமாய்
மனநிகழ் வின்றி [5]மாண்பமை பொதுவாய்
எல்லாப் பொருளும் தோன்றுதற் கிடமெனச்
சொல்லுதல் மூலப் பகுதி

என்றும், சித்தம், மான்புத்தி, வான், காற்று, தீ, நீர், மண் என்ற இவை ஒன்றிலிருந்து ஒன்று வெளிப்படும் என்றும், இவற்றின் கூட்டத்திலிருந்து மனமும், மனத்து ஆங்காரமும், கன்மேந்திரிய ஞானேந்திரிய விகாரங்களும் தோன்றி உலகாய் நிகழும் என்றும்,

வந்த வழியே இவைசென் றடங்கி
அந்தமில் பிரளயமாய் [6]இறுமளவும்

1. அதன்மாத்திகாயம் - பொருள்களனைத்தையும் நிற்கச் செய்வது.

2. காலாகாயம் - குறியதும் நெடியதுமாய வினைநிகழ்ச்சி நிகழ்விப்பது.

3. பந்தம் - கட்டு.

4. அறுத்திடுதல் - தொடராதவாறு செய்துகொள்ளுதல்.

5. மாண்பு அமை பொதுவாய் - மாட்சிமைப்பட அமைந்த சாமானிய தத்துவமாய்.

6. இறுமளவும் - அழியுங்காறும்.

ஒன்றாய் எங்கும் பரந்து நித்தியமாய்
அறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்
[1]பொறியுணர்விக்கும் பொதுவு மன்றி
எப்பொருளும் தோன்றுதற் கிடமின்றி
அப்பொருளெல்லாம் அறிந்திடற்கு உணர்வாய்
ஒன்றாய் எங்கும் பரந்து நித்தியமாய்
நின்றுள உணர்வாய் நிகழ்தரும் புருடன்
[2]புலமார் பொருள்கள் இருபத் தைந்துள

என்றும், அவை நிலம் முதலாக உயிரெனும் ஆன்மா ஈறாக இருபத்தைந்தும் நிரலே கூறி முடித்தான். மணிமேகலை, உடனே அருகில் நின்ற வைசேடிகனை, "நின் வழக்கினை உரைப்பாயாக," என்று கேட்டாள். அந்த வைசேடிகன், பொருள், குணம், தொழில், சாமானியம், விசேடம், சமவாயம் என நூற்பொருள் ஆறாகும் என்றும் அவற்றுள்,

பொருள் என்பது,
குணமும் தொழிலு முடைத்தாய், எத்தொகைப்
பொருளுக்கும் ஏதுவாம்; அப்பொருள் ஒன்பதாம்:
ஞாலம், நீர், தீ, வளி, ஆகாயம், திசை,
காலம், ஆன்மா, மனம்; இவற்றுள் நிலம்,
ஒலி ஊறு நிறம் சுவை நாற்றமொடு ஐந்தும்
பயில் குணம் உடைத்து; நின்ற நான்கும்
[3]சுவை முதல் ஒரோ குணம் அவைகுறை வுடைய,

என ஒவ்வொன்றின் இயல்புகளையும் விரித்துக் கூறினன். அவன்பின், பூதவாதி தோன்றி,

---

1. பொறியுணர்விக்கும் பொது - "பொறிகட்கு விடயமாகும் சாமானியத்தன்மை."

2. புலமார் பொருள் - தத்துவப்பொருள்.

3. சத்தம் முதல் நாற்றம் இறுதியாகிய ஐந்தனுள் நீர் சத்தம் முதலிய நான்கும், தீ சத்தம் முதலிய மூன்றும், காற்று சத்தம் முதலிய இரண்டும். விண் சத்தம் ஒன்றும் குணமாகக் கொண்டன என்பது.

[1]தாதகிப் பூவும் கட்டியும் இட்டு
மற்றும் கூட்ட [2]மதுக்களி பிறந்தாங்கு
உற்றிடும் பூதத்து உணர்வு தோன்றிடும்;
அவ்வுணர்வு அவ்வப்பூதத் தழிவுகளின்
வெவ்வேறு பிரியும்; [3]பறையோசையிற் கெடும்;
உயிரொடும் கூட்டிய உணர்வுடைப் பூதமும்,
உயிரில்லாத உணர்வில் பூதமும்
அவ்வப் பூதவழி அவை பிறக்கும்:
[4]மெய்வகை இதுவே;

என்றும், யாம் காட்சியளவை யன்றிக் கருத்து முதலிய அளவைகளைக் கொள்ளேம் என்றும், இப்பிறப்பே, இம்மையும் இம்மைப் பயனுமாம்; மறுமையும் வினைப்பயன் துய்த்தல் உண்டு என்பதும் வெறும் பொய்யே என்றும் கூறினன். இவற்றைக் கேட்டு மணிமேகலை மாறு வேறு கூறாது நகைத்தனள். அவன், நகைப்பது என்னை? என்று உகை, தான் பழம் பிறப்புணர்ந்த செய்தி கூறினள். அதனைக் கேட்டதும் அவன் நகைத்து,

[5]தெய்வமயக்கினும் கனவுறு திறத்தினும்
[6]மையலுறுவார் மனம் வேறாம் வகை
ஐயமன்றி இல்லை,

என்றான். அவனை மணிமேகலை நோக்கி, "காட்சியே யளவையாயின்

* தந்தை தாயரை அனுமானத்தால் அலது
இந்த ஞாலத்து எவ்வகை அறிவாய்?

---

1. தாதகிப்பூ - ஆத்திப்பூ. கட்டி - கருப்புக்கட்டி. மற்றும் - ஆவாரம்பட்டை (ஆவிரம் பட்டை) வேலங்கொழுந்து முதலியன.

2. மதுக்களி - மதுவினிடத்தே களிப்பு. பிறந்தாங்கு - பிறந்ததுபோல.

3. பறையோசையின் - பறையோசை நிறுத்த நிற்பதுபோல.

4. மெய்வகை - மெய்ந்நூற் கூறும் பொருட் கூறுபாடு.

5. தெய்வமயக்கு - தெய்வமேறுதல்.

6. மையலுறுவார் - அறிவு மயங்குவோர்.

மெய்யுணர் வின்றி மெய்ப்பொருள் உணர்வரிய
ஐயமல்லது இது சொல்லப் பெறாய்,

எனத் தான் கொண்டிருந்த மாதவன் வடிவிலே நின்று தான் உன்னிய பொருளை உரைத்து, இங்கே காட்டிய சமய நூற்பொருள்களை அறிந்தாள்.

## 28. கச்சிமா நகர் புக்க காதை

இனி, அவ்வஞ்சிமா நகரத்தே மணிமேகலை தன் தாயரையும் அறவணவடிகளையும் காண விரும்பி அவரைத் தேடிக்கொண்டு புறஞ்சேரி கடந்து, கலவை நீரும், சாந்து கழிநீரும், விரைநீரும் என்ற பலவகை நீரே எங்கும் பாய்தலால், தாமரை, கழுநீர், ஆம்பல் முதலிய பூக்கள் மலர, வண்டாரற்ற விளங்கிய அகழியையும், பல்வகைப் பொறி யமைத்து, வினை மாண்பு சிறந்து நின்ற மதிலையும் கடந்து சென்று, கொடிநிலவும் வாயில் வழியாக நகர்க்குள்ளே சென்றனள். அங்கே, காவலாளர், மீன் விலைஞர், உப்புப் பகருநர், கள்விற்போர், [1]காழியர், [2]கூவியர் என்பவர் முதலாகப் பல தொழிலாளரும் வணிகரும் நிரம்பக் காணப் பட்டனர். அவர் கூட்டத்தைக் கடந்து செல்பவள்,

நலந்தரு [3]பண்ணும் திறனும் வாய்ப்ப
[4]நிலம் கலம் கண்டம் நிகழக் காட்டும்
பாணர் என்றிவர் பல்வகை மறுகும்,
[5]விலங்கரம் பொரூஉம் [6]வெள்வளை போழ்நரொடு

1. காழியர் - பிட்டுவாணிகர்.
2. கூவியர் - அப்பவாணிகர்.
3. பண் - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி முதலிய இசை. திறம் - இவற்றின் கிளை.
4. நிலம் - எழுத்து, அசை, சீர் என்ற இடம். கலம் - யாழ். கண்டம் - குரல்.
5. விலங்கு அரம் - வாளரம்.
6. வளை போழ்நர் - சங்கறுப்பவர்.

இலங்கு மணி வினைஞர் [1]இரீஇய மறுகும்,
[2]வேத்தியல் பொதுவியல் என்றிவ் விரண்டின்
கூத்தியல்பு அறிந்த கூத்தியர் மறுகும்,
[3]பால்வேறாக எண்வகைப் பட்ட
கூலம் [4]குவைஇய கூலமறுகும்,
[5]மாகதர் சூதர் வேதாளிகர் மறுகும்,
போகம் புரக்கும் பொதுவர் மலி மறுகும்,
[6]கண் நுழைகல்லா நுண்ணூற் கைவினை,
வண்ண அறுவையர் வளம் திகழ் மறுகும்,
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்,
பன்மணி பகர்வோர் [7]மன்னிய மறுகும்,
மறையோர் [8]அருந்தொழில் குறையா மறுகும்,
அரசியல் மறுகும், அமைச்சியல் மறுகும்,
எனைப் பெருந்தொழில் செய் ஏனோர் மறுகும்,
[9]மன்றமும், [10]பொதியிலும், சந்தியும், [11]சதுக்கமும்,

---

1. இரீஇய - இருந்து வாழும்.

2. வேத்தியல் - வேந்தர்க்காடும் கூத்து. பொதுவியல் - எனையெல்லார்க்குமாடும் கூத்து.

3. வேறுபாலாக - வேறு வேறு பகுதியாக. எண்வகைக் கூலம் - நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கில்நெல்.

4. குவைஇய - குவித்த.

5. மாகதர் - இருந்தேத்துவோர். சூதர் - நின்றேத்துவோர், வேதாளிகர் - பலவகைத் தாளத்திற்கேற்ப ஆடுவோர்.
பொதுவர் - பொதுமகளிர்.

6. கண் நுழைகல்லா - கட்பார்வை செல்ல முடியாத.
அறுவையர் - உடை விற்பவர்.

7. மன்னிய - பெருகவுள்ள.

8. அருந்தொழில் - அரிய "வைதிகக் கிரியைகள்."

9. மன்றம் - ஊர்மன்றம்; நடுநாட்டார், இதனை "மன்ற வெளி" என்று இன்றும் வழங்குப.

10. பொதியில் - பொதுவிடம்.

11. சதுக்கம் - நான்கு தெரு கூடுமிடம்.

[1]புதுக் கோள்யானையும் [2]பொற்றார்ப் புரவியும்,
[3]கதிக்குற வடிப்போர் கவின்பெறு வீதியும்,
சேணோங் கருவி தாழ்ந்த செய் குன்றமும்,
[4]வேணவா மிகுக்கும் விரை மரைக்காவும்,
விண்ணவர், தங்கள் விசும்பிடம் மறந்து
நண்ணுதற்கு ஒத்த [5]நன்னீரிடங்களும்,
சாலையும் கூடமும் [6]தமனியப் பொதியிலும்
[7]கோலம் குயின்ற கொள்கை யிடங்களும்

கண்டு பெருமகிழ்வுகொண்டு, இந்திர விகாரம்போல் எழில் பெற்று விளங்கிய ஒரு மாதவப் பள்ளியைக் கண்டாள். அங்கு உறைந்த மாதவர்களில், கோவலன் தந்தையாகிய மாசாத்துவானும் தவத்திறம் பூண்டிருந்தான். அவனைக் கண்டதும் மணிமேகலை அவன் திருவடி பணிந்து, தான் அமுதசுரபி பெற்றது முதல், சமயக் கணக்கர் திறம் கேட்டதும், அவர் கூறியவற்றைக் கொள்ளாது, புத்த தேவனது நல்லறம் கேட்க நயந்து அறவணனைத் தேடி வந்ததும் ஈறாக நிகழ்ந்தவை யனைத்தும் சொல்லி முடித்தாள். மாசாத்துவான், இனித் தன் வரலாறு கூறலுற்று,

ஆயோய் ! நின்னை என்
நல்வினைப் பயன்கொல் நான் கண்டது ;
தையல் ! கேள் : நின்தா தையும் தாயும்
செய்த தீவினையின் செழுநகர் கேடுறத்
துன்புற [8]விளிந்தமை கேட்டுச் சுகதன்

1. புதுக்கோள்யானை - புதுவதாகப் பிடிக்கப்பட்ட யானை.
2. பொற்றார் - பொன்னால் செய்த கிண்கிணி மாலை.
3. கதிக்குஉற - நடையில் மேம்பாடு எய்த. வடிப்போர் - பயிற்றுவோர்.
4. வேணவா - மிக்க அவா. வேட்கை + அவா—வேணவா.
5. நன்னீரிடம் - பொய்கை முதலாயின.
6. தமனியப்பொதியில் -பொன்னாலாகிய அம்பலம்.
7. கோலம் - ஓவியம். குயின்ற - அமையச்செய்த. கொள்கையிடம் - தவச்சாலை.
8. விளிந்தமை - இறந்தது.

> அன்புகொள் அறத்திற்கு [1]அருகனேனாதலின்,
> மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
> தினைத்தனையாயினும் செல்வமும் யாக்கையும்
> நிலையா என்றே நிலைபெற உணர்ந்தே
> [2]மலையா அறத்தின் மாதவம் புரிந்தேன்;

என்றவன், தான் இந்த வஞ்சிமாநகர்க்கு வந்த காரணம் கூறத்தொடங்கி,

> குடக்கோச் சேரலன் [3]குட்டுவர் பெருந்தகை
> [4]விடர்ச்சிலை பொறித்த வேந்தன் முன்னாள்,
> [5]துப்படு செவ்வாய்த் துடியிடையா ரோடும்
> இப்பொழில் புகுந்தாங்கு இருந்த எல்லையுள்,

இலங்கைத் தீவிலுள்ள சமனொளி என்னும் மலைக்குச் சென்று அதனை வலங்கொண்டு போந்த தருமசாரணர், இப் பொழிற்கண் வந்து கற்றலத்தில் இருந்தனர். அவர்களைக் கண்ட அரசன் அவர்கட்கு வேண்டும் உணவும் வேறு பல சிறப்பும் தந்து இறைஞ்சி நின்றான். அவர்கள் மகிழ்ந்து,

> பிறப்பின் துன்பமும் [6]பிறவா இன்பமும்
> [7]அறத்தகை முதல்வன் அருளிய வாய்மை
> இன்ப வாரமுது இறைவன் செவிமுதல்
> துன்பம் நீங்கச்

சொரிந்தனர். அந்நாளில், அவ்வேந்தர்க்குக் காதற் பாங்களுக இருந்தவன், நின் தந்தை கோவலனுக்கு ஒன்பது தலைமுறை முன்னவனாவான்; அவன் பெயரும் கோவலன்

1. அருகனேன் - பக்குவமுடையேன்.
2. மலையா - மாறுபடாத.
3. குட்டுவர் - சேரர் குடியினர்.
4. விடர்ச்சிலை பொறித்த வேந்தன் - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். விடர் - ஈண்டுப் பாறை. சிலை - விற்பொறி.
5. துப்புஅடு - பவளத்தையொத்த.
6. பிறவா இன்பம் - பிறவாமையால் வரும் இன்பம்.
7. அறத்தகை முதல்வன் - அறத்தால் தகுதிபெற்ற புத்தன்.

என்பதே. அவனும் அவர் கூறிய அறங்களைக் கேட்டு, தன் முன்னோர் படைத்த செல்வத்தையேயன்றித் தான் படைத்ததனையும் கூட்டி ஏழுநாளில் இரவலர்க்கு ஈந்து, புத்தனுக்கு ஒரு சிறந்த சைத்தியம் அமைத்தனன்; அதனைக் கண்டு வணங்குதற்காக யான் வந்தேன். ஈங்குறையும் மாதவர்கள் காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் கொளும் என்றதனால், இங்கே இருந்தொழிந்தேன்.

இன்னும் கேளாய்: நன்னெறி மாதே!
தீவினை [1]உருப்பச் சென்ற நின் தாதையும்
தேவரின் தோற்றி முற்செய்வினைப் பயத்தால்
ஆங்கத் தீவினை இன்னும் துய்த்துப்
பூங்கொடி! முன்னவன் போதியின் நல்லறம்
தாங்கிய தவத்தால் தான்தவம் தாங்கிக்
[2]காதலி தன்னொடு கபிலையம் பதியில்
நாதன் நல்லறம் கேட்டு வீடெய்து மென்று
[3]அற்புதக் கிளவி அறிந்தோர் கூறச்
சொற்பயன் உணர்ந்தேன்; தோகை! யானும்,
அந்நாள் ஆங்கவன் அறநெறி கேட்குவன்

என்றான். அதன்பின், மணிமேகலைக்கு, "நினக்கு உளவாகும் நிகழ்ச்சிகளை நினக்குக் கந்திற்பாவைக்கண் நின்ற துவதிகன் உரைத்தான் அன்றோ? அவன் உரைத்தனன் என்ற செய்தியை அறவணன் சொல்லக்கேட்டுளேன்; அவ்வறவணனே, நினக்கு ஏது நிகழ்ச்சி நிகழுமிடம் காஞ்சி என்றான். அவன் காஞ்சிக்குச் சென்ற நாளில் நின் தாயாகிய மாதவியும் சுதமதியும் உடன் சென்றனர், என்று சொல்லிவிட்டு,

அன்னதை யன்றியும், அணியிழை! கேளாய்:
பொன்னெயிற் காஞ்சி நாடு கவினழிந்து,

1. உருப்ப - வருத்திச் செலுத்த.
2. காதலி - கண்ணகி.
3. அற்புதக்கிளவி - அற்புதமான சொற்கள்.

*மன்னுயிர் மடிய மழைவளம் [1]கரத்தலின்,*
*அந்நகர் மாதவர்க்கு ஐயமிடுவோர்,*
*இன்மையின் இந்நகர் எய்தினர், காணாய்;*
*[2]ஆருயிர் மருந்தே! அந்நாட் [3]டகவயின்*
*[4]காரெனத் தோன்றிக் காத்தல், நின்கடன்*

என வற்புறுத்தினன். அதுகேட்ட மணிமேகலை வஞ்சி நகரின் மேற்குப் பக்கத்தினின்று விண்ணிடத்தில் ஓங்கி, வடதிசையில் காஞ்சிநோக்கிச் சென்று, அது வளங்குன்றிப் பொலிவிழந்து கிடப்பதைக் கண்டு வருந்தி, நடுநகரெல்லைக்கண் இறங்கி, தொடுகழற் கிள்ளியின் பின்னவனை இளங்கிள்ளி எடுத்த புத்த சைத்தியத்தைப் பரவித் தொழுது, அந்நகரின் தென்மேற்கிலிருந்த பூம்பொழிலையடைந்திருந்தாள். அதனைத் தருமதவனம் என்பர். அவள் வரவையறிந்த கஞ்சுகி யொருவன், அரசன்பால் விரைந்து சென்று, வணங்கி நின்று,

*கோவலன் மடந்தை [5]குணவதம் புரிந்தோள்;*
*நாவலந்தீவில் தான் நனி[6]மிக் கோள்,*
*அங்கையின் ஏந்திய அமுத சுரபியொடு*
*தங்காது, இப்பதித் [7]தருமத வனத்தே*
*வந்து தோன்றினள் மாமழை போல*

என்று மொழிந்தான். கேட்ட வேந்தன் மந்திரிச்சுற்றம் சூழ்ந்துவரப் புறப்பட்டுத் தனக்கு கந்திற்பாவை யுரைத்

---

1. கரத்தலின் - இல்லாதொழிதலால்.

2. ஆருயிர் மருந்து - நிறைந்த உயிர்களை வருத்தும் பசிப் பிணி போக்கும் உணவாகிய மருந்து தருபவளே.

3. நாட்டகவயின் - நாட்டிற்குள்.

4. கார்என - மழைமுகில்போல.

5. குணவதம் - நற்குண நல்விரதம்; குணமென்றே கொண்டு வதம் என்பதைப் பகுதிப்பொருள் விகுதியாக்கலுமொன்று. "குணவதம் கொளுத்தலாமோ" என்ற சிந்தாமணிப் பாட்டுக்கு நச்சினார்க்கினியர் உரைப்பது காண்க.

6. மிக்கோள் - மேம்பட்டாள்.

7. தருமதவனம் - தருமத்தைக் கொடுக்கும் வனம்.

தவை யனைத்தும் உண்மையாதல் கண்டு வியந்த உள்ளத்தனாய் வந்து மணிமேகலையைக் கண்டு,

செங்கோல் கோடியோ, செய்தவம் பிழைத்தோ,
[1]கொங்கவிழ் குழலார் கற்புக்குறை பட்டோ,
[2]நலத்தகை நல்லாய்! நன்னாடெல்லாம்
[3]அலத்தற் காலை யாகியது; அறியேன்;
மயங்குவேன் முன்னர் ஓர் மாதெய்வம் தோன்றி
[4]உயங்காதொழி; நின் உயர்தவத்தால் ஓர்
காரிகை தோன்றும்; அருள்பெருங் [5]கடிஞையின்
[6]ஆருயிர் மருந்தால் அகல்நிலம் உய்யும்;
ஆங்கவள் அருளால் அமரர்கோன் ஏவலின்
[7]தாங்கா மாரியும் தான்நனி பொழியும்;
அன்னாள் இந்த அகனகர் புகுந்த
பின்னாள் நிகழும் பேரறம் பலவால்;
கார்வறங் கூரினும் நீர்வறங் கூராது;
[8]பாரக வீதியில் பண்டையோர் இழைதத
கோமுகி என்னும் [9]கொழுநீர் இலஞ்சியொடு
மாமணி பல்லவம் வந்தது ஈங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனையும்என்று அறைந்துஅத்
தெய்வதம் போயபின் செய்தியாம் அமைத்தது
இவ்விடம்

என்று அவ்விடத்தைக் காட்டினன். அதுகண்டு மகிழ்ந்த மணிமேகலை, அரசனைக்கொண்டே புத்த பீடிகையையும்,

1. கொங்கவிழ் குழலார் - தேன்மலரும் குழலையுடைய கற்புடை மகளிர்
2. நலத்தகை - நற்குணமும் அழகும் உடைய.
3. அலத்தற்காலை - வறுமைக்காலம்.
4. உயங்காதொழி - வருந்தற்க.
5. கடிஞை - அமுதசுரபி யென்னும் கலம்.
6. ஆருயிர்மருந்து - உணவு. நிலம் - நிலத்துமக்கள்.
7. தாங்கா மாரி - இதுகாறும் மழைபெய்து உயிர்களைத் தாங்காத மழை.
8. பாரகவீதி - நிலத்திடத்து.
9. கொழுநீர் இலஞ்சி - மிக்க நீர்பொருந்திய பொய்கை.

தீவதிலகையையும் மணிமேகலா தெய்வத்தையும் வணங்கி வழிபடுதற்குரிய கோயில் என்ற இவற்றை இயற்றுவித்து, அவற்றிற்குப் பூசையும் விழாவும் செய்வித்து, அமுத சுரபியைப் பீடிகையில் வைத்து வழிபட்டு ஏத்தி, "பசிப் பிணியால் வருந்தும் எல்லா உயிர்களும் வருக" என்றனள். என்றலும்,

காணார் கேளார் கால்முட மானோர்
[1]பேணு மாக்கள் [2]பேசார் [3]பிணித்தோர்
[4]படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
[5]மடிநல் கூர்ந்த மக்கள் யாவரும்
பன்னூ றாயிரம் விலங்கின் தொகுதியும்
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் [6]கீண்டி
அருந்தியோர்க் கெல்லாம் ஆருயிர் மருந்தாய்ப்,
பெருந்தவர் [7]கைப்பெய் பிச்சையின் பயனும்,
நீரும் நிலனும் காலமும் கருவியும்
[8]சீர்பெற வித்திய வித்தின் விளைவும்
பெருகிய தென்னப் பெருவளம் சுரப்ப
[9]வசித்தொழில் உதவி வளந் தந்தது என

மணிமேகலையைப் பாராட்டிக்கொண்டு செல்ல, மாதவியும் சுதமதியும் என்ற இவருடன் அறவணவடிகள் அம் மணி மேகலையின் அறச்சாலையை வந்தடைந்தனர். அவர்களின்

1. பேணுமாக்கள் - பிறரால் பாதுகாக்கப்படாத மக்கள்; ஆதரவற்றவர்.

2. பேசார் - ஊமை.

3. பிணித்தோர் - நோயுற்றோர்.

4. படிவநோன்பியர் - தவவடிவும் நோன்புமுடையவர்.

5. மடிநல்கூர்ந்த - உடுக்கும் உடையில்லாத.

6. ஈண்டி - நிறைந்து.

7. கைப்பெய் பிச்சை - கையிடத்தே இடப்படும் பிச்சை.

8. சீர்பெற - நன்கு அமைய. நீர் முதலியன சீர்பெற வித்திய வித்தின் விளைவும், பிச்சையின் பயனும் பெருகிய தென்ன வளம் சுரப்ப என்க.

9. வசி - மழை.

திருவடி வணங்கி, நீரால் விளக்கி, இருக்கையில் இருத்தி, நல்லுணவு இனிதூட்டி,

> [1]பாசிலைத் திரையலும் [2]பளிதமும் படைத்து
> [3]வாய்வதாக என் [4]மனப் பாட்டு அறமென

மணிமேகலை இறைஞ்சி நின்றாள்.

---

## 29. தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதை

தன் அடிகளில் வணங்கி நின்ற மணிமேகலையை நோக்கி, அறவணவடிகள், "நாகநாட்டரசன் மகளான பீலிவளை தான் பெற்ற மகனைக் கம்பளச் செட்டியிடம் தந்து சோழனிடம் சேர்ப்பிக்கச் சொல்ல, அம் மகனை அழைத்துப் போந்த அன்றிரவே, அவனது வங்கம் கடலில் கவிழ்ந்தது. தப்பிக் கரையடைந்த அச்செட்டி, காவிரிப்பூம்பட்டினத்தை யடைந்து சோழனிடம் நிகழ்ந்தது கூறினன். அரசன், மகன் பிரிவாற்றாது அவனைத் தேடிக் கடற்கரையிலும் கானற்சோலையிலும் அலைந்து திரியவே, பூம்புகார் நகரம் இந்திரவிழாவை ஆற்றாது நெகிழ்த்தது. இது நிற்க,

> தன்விழாத் தவிர்தலின் [5]வானவர் தலைவன்,
> நின்னுயிர்த் [6]தந்தை நெடுங்குலத் துதித்த

1. பாசிலைத் திரையல் - பசிய இலையாகிய வெற்றிலை.

2. பளிதம் - பச்சைக் கருப்பூரம். இது பாளிதம் எனவும் வழங்கும். "அடகுபுலால் பாகுபாளிதமுமுண்ணான் கடல் போலுங் கல்வியவன்" என்புழிப்போல.

3. வாய்வதாக - தப்பாது பயன் வழங்குக.

4. மனப்பாட்டு அறம் - மனத்திடத்தே கொண்டியற்றும் அறம்.

5. வானவர் தலைவன் - இந்திரன்.

6. தந்தை - கோவலன்.

[1]மன்னுயிர் முதல்வன் [2]மகர வேலையுள்,
[3]முன்னிய வங்கம் [4]முங்கிக் கேடுறப்
பொன்னின் ஊசி பசுங்கம் பளத்துத்
துன்னிய தென்னத் தொடுகடல் உழந்துழி,
எழுநாள் எல்லை [5]இடுக்கண் வந்தெய்தா
வழுவாச் சீலம் [6]வாய்மையிற் கொண்ட
பான்மையின், தனது [7]பாண்டு கம்பளம்
தான் [8]நடுக்குற்ற தன்மை நோக்கி,
ஆதிமுதல்வன் [9]போதி மூலத்து
நாத னுவோன் நளிநீர்ப் பரப்பில்
[10]எவ்வமுற் றோன் தனது எவ்வம் தீர்என

உரைத்தான். அதுகேட்ட மணிமேகலா தெய்வம் போந்து அவனுக்கு வேண்டும் உதவியினைச் செய்தது. இதனை முன்னறியாத அவனுக்கு,

அறவரசாளவும் அறவாழி யுருட்டவும்,
பிறவி தோறுதவும் பெற்றியள் என்று

1. அவன் அருளறம் பூண்டவனாதலின், "மன்னுயிர் முதல்வன்" என்றார்.

2. மகரவேலை - மகரமீன் வாழும் கடல்.

3. முன்னிய - செலுத்திச் சென்ற.

4. முங்கி - முழுகி.

5. இடுக்கண் - துன்பம். வந்தெய்தா - வந்து எய்துதற்காகாத. வழுவாச்சீலம் - குற்றமில்லாத சீலத்தை.

6. வாய்மையிற்கொண்ட பான்மை - வாய்மையுடன் கொண்டிருந்த முறைமையினால்.

7. பாண்டு கம்பளம் - வெள்ளைக்கம்பலமாகிய இருக்கை.

8. நடுக்குற்றதன்மை - சீலமும் வாய்மையும் கொண்டோர் இருப்பினை யுணர்த்தற்கு இந்திரனது கம்பலம் அசையும் என்பவாகலின், ஈண்டு அது நடுங்கிற்று; அத்தன்மையை அவ்விந்திரன் நோக்கினான் என்க.

9. போதிமூலத்து நாதனாவோன் - போதிசத்துவர்; புத்தனாதற்குரியன்.

10. எவ்வமுற்றோன் - துன்பமுற்றோன். தனது - அவனது.

சாரணர் அறிந்து கூறினர். அந்த உதவி நினைந்து நின் தந்தை நினக்கு மணிமேகலை யென்ற இப்பெயரை இட்டனன்; அன்றிரவே அவன் கனவில் மணிமேகலா தெய்வம் தோன்றி நனவுபோல நீ துறவுபூணும் செய்தியை உரைத்துளது. இந்த மணிமேகலா தெய்வமே புகார்நகரம் இந்திர விழாவை மறந்தது கண்டு, "இந் நகரைக் கடல் கொள்ளுக" என்று சபிக்க, இந்திரன் சாபமும் உடன் வந்து ஒன்றியது; நகரும் கடலால் விழுங்கப்பட்டது. அப்பால் யானும் நின் தாயரும் நின்பொருட்டு இந் நகரை யடைந்தோம்," என்று சொல்லி முடித்தனர்.

மணிமேகலை, அவர் தாளை மறுபடியும் வணங்கி, இச் செய்தியையே யான் புத்த பீடிகையைப் போற்றிய காலத்துப் போந்த தீவதிலகையும் உரைத்தனள்.

அன்ன அணிநகர் மருங்கே,
வேற்றுருக் கொண்டு வெவ்வே றுரைக்கும்
நூற்றுறைச் சமயநுண் பொருள் கேட்டே,
அவ்வுருவென்ன [1]ஐவகைச் சமயமும்
[2]செவ்வி தன்மையின் சிந்தையில் வைத்திலேன்;
அடிகள்! மெய்ப்பொருள் அருளுக

என வேண்டி நின்றாள். அறவண அடிகளும், புத்தசமய அளவையியல்களைக் கூறலுற்று, ஆதிசினேந்திரன் அளவை இரண்டே என வகுத்தான்; அவை, பிரத்தியக்கம், அநுமானம் என்பன.

சுட்டுணர்வைப் பிரத்தியக்கம் எனச் சொல்லி,
விட்டனர் [3]நாமசாதிக் குணக் கிரியைகள்,

1. ஐவகைச் சமயம் - அளவை வாதமுதலாகவுள்ள ஐந்தும், (1) ஆசீவக வாதம் நிகண்ட வாதங்களும், (2) சாங்கியம், (3) வைசேடிகம், (4) பூதம். (5) ஆக ஐவகைச் சமயம்.

2. செவ்வி தன்மையின் - ஒவ்வொன்றும் மெய்யானதாக இல்லாமையால்.

3. நாமம் - பெயர். சாதி - வகை. குணக்கிரியை - குணமும் செய்கையும்.

மற்றவை அனுமானத்தும் [1]அடையும் என,
..............................................
ஏனை அளவைகளெல்லாம் கருத்தினில்
ஆன முறைமையின், அனுமானமாம்.

இவ்வனுமானத்தில், பக்கம், ஏது, திட்டாந்தம், உபநயம், நிகமனம் என ஐந்து உறுப்புக்கள் உள. அவற்றில்,

[2]பக்கம், இம்மலை நெருப் புடைத்து என்றல் ;
புகையுடைத் தாதலால் எனல், பொருந்து ஏது ;
வகையமை [3]அடுக்களைபோல், திட்டாந்தம் ;
உபநயம், மலையும் புகையுடைத் தென்றல்
நிகமனம், புகையுடைத்தே நெருப்புடைத் [4]தெனல்

இனி, பக்கமுதலாக நிகமனம் ஈறாகக் கூறிய ஐந்தனுள் உபநயம் நிகமனம் என்ற இரண்டும் திட்டாந்தத்தில் அடங்கும். அடங்கவே, நின்ற பக்கம், ஏது, திட்டாந்தம் என்ற மூன்றிலும் நல்லவும் தீயவும் என இருதிறம் உண்டு. தீயபக்கம் பக்கப்போலி என்றும், தீய ஏது, ஏதுப் போலி என்றும், தீய திட்டாந்தம், திட்டாந்தப் போலி யென்றும் திட்டாந்த வாபாசம் என்றும் கூறப்படும். ஏதுப்போலியையும் ஏது வாபாசம் என்ப.

வெளிப்பட்டுள்ள தன்மியினையும்,
வெளிப்பட்டுள சாத்தியதன்மத்திறம்
பிறிதில் வேறும் வேறுபாட்டினையும்
தன்கண் சார்த்திய நயம் தருதலுடையது
நன்கு என்பக்கமென நாட்டுக......
நல்லேது,
மூன்றாய்த் தோன்றும்; ஒழிந்த பக்கத்து

---

1. அவை - நாமசாதி முதலியன. அடையும் - அனுமானத்தின் கண்ணும் அடங்கும்.

ஏனையளவை - ஆறும். எட்டும் பத்துமாகக் கூறியவற்றுள் காண்டலொழிந்த மற்றவை.

2. பக்கம் - இது மேற்கோள். பிரதிஞ்ஞை எனவும் வழங்கும்.

3. அடுக்களை - அடுப்பு. 4. எனல் - என்று துணிதல்.

ஊன்றி நிற்றலும், [1]சபக்கத்து உண்டாதலும்,
[2]விபக்கத்து இன்றியே விடுதலும் என.
......................................
ஏதமில் திட்டாந்தம் இருவகைய :
சாதன்மியம் வைதன்மியம் என ;

இவ்வாறு நற்பக்கம், நல்லேது, நல்திட்டாந்தம் என்ற மூன்றும் கூறிப்போந்த அடிகள், இனி, தீயவாகிய பக்கப் போலி, ஏதுப் போலி, திட்டாந்தப்போலி மூன்றையும் தொகுத்தும் வகுத்தும் ஓதுகின்றார்.

பக்கப் போலி ஒன்பது வகைப்படும் ;
பிரத்தியக்க விருத்தம், அனுமான
விருத்தம், சுவசனவிருத்தம், உலோக
விருத்தம், ஆகமவிருத்தம், அப்பிர
சித்த விசேடணம், அப்பிரசித்த
விசேடியம், அப்பிரசித்த வுபயம்,
அப்பிரசித்த சம்பந்தம் என.

இதன்மேல் ஏதுப்போலி கூறலுற்று, அஃது அசித்தம், அநைகாந்திகம், விருத்தம் என மூன்றுமென வகுத்துக் கொண்டு ஒவ்வொன்றையும் விரிக்கின்றார்.

உபயா சித்தம், மன்னியதா சித்தம்,
சித்தா சித்தம், ஆசிரயா சித்தம்,
என நான்கு,
..............அநைகாந்திகமும்,
சாதாரணம், அசாதாரணம், சபக்கைக
தேசவிருத்தி, விபக்க வியாபி,
விபக்கைக தேசவிருத்தி, சபக்க
வியாபி, உபயைக தேசவிருத்தி,
விருத்த வியபிசாரி யென்று ஆறு,
விருத்தம் தன்னைத் [3]திருத்தக விளம்பின்
தன்மச் சொரூப விபரீத சாதனம்,

---

1. சபக்கம் - துணியப்பட்ட கருத்து வெளிப்பட்ட பக்கம்.
2. விபக்கம் - துணியப்படும் கருத்து காணக்கூடாத பக்கம்.
3. திருத்தக - கேட்போர் ...ய.

தன்ம விசேட விபரீத சாதனம்,
தன்மிச் சொரூப விபரீத சாதனம்,
தன்மி விசேட விபரீத சாதனம்,
என்ன நான்கு வகையதாகும்.

ஞேயாகத் தீய எடுத்துக்காட்டுக்களான திட்டாந்த வாபாச மென்பதை வகுத்துரைக்கின்றார். இதனை முதற்கண், சாதன்மிய ஆபாசம, வைதன்மிய திட்டாந்த ஆபாசம் என இரண்டாக வகுத்துக் கொள்ளுகின்றார். இவ்விரண்டனுள்,

சாதன்மிய திட்டாந்த வாபாசம்
ஓதில், ஐந்து வகையுளதாகும்:
சாதன தன்ம விகலமும், சாத்திய
தன்ம விகலமும், உபயதன்ம
விகலமும், அநன்னுவயம், விபரீதான்
னுவயம் என்ன. வைதன்மியதிட்
டாந்த வாபாசமும் ஐவகைய:
சாத்தியா வியா விருத்தி,
சாதனு வியா விருத்தி,
உபயா வியாவிருத்தி, அவ்வெதிரேகம்,
விபரீத வெதிரேகம்

என்பனவாம். இவ்வாறு தொகுத்தும் வகுத்தும் விளக்கிய அடிகள் மணிமேகலையை நோக்கி,

நாட்டிய இப்படித் [1]தீயசா தனத்தால்,
காட்டும் அனுமான வாபாசத்தின்
மெய்யும் பொய்யும் இத்திற விதியால்,
[2]ஐயமின்றி அறிந்துகொள் ஆய்ந்து

என்று அறிவுறுக்கின்றார்.

1. தீய சாதனம்-"பிரமாணுபாசம்." நாட்டிய-வற்புறுத்திய.
2. ஐயமின்றி - தெளிவாக.

# 30. பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை

தானம் தாங்கிச் சீலம் மேற்கொண்டு பழம்பிறப் புணர்ந்த மணிமேகலை, புத்த தரும சங்கத்தை யடைந்து, "புத்தம் சரணங்கச்சாமி, தர்மம் சரணங்கச்சாமி, சங்கம் சரணங்கச்சாமி" என்பவைகளை மும்முறை ஓதி மூன்று முறை வணங்கிச் சரணடைந்தபின், அவளை நோக்கி, அறவணவடிகள், புத்தனைப்பற்றிச் சில கூறலுற்று,

[1]அறிவு வறிதாய் உயிர் [2]நிறைகாலத்து
[3]முடிதயங் கமரர் முறைமுறை இரப்ப,
[4]துடித லோகம் ஒழியத் தோன்றிப்
போதி மூலம் பொருந்தி யிருந்து
[5]மாரனை வென்று வீரனாகிக்
[6]குற்ற மூன்றும் முற்றவறுக்கும்
[7]வாமன் வாய்மை [8]யேமக் கட்டுரை,
இறந்த காலத்து [9]எண்ணில் புத்தர்களும்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்தது

---

1. அறிவு - பரிநிருவாணத்தையறியும் அறிவு. வறிதாய் - இல்லையாதலால்.

2. நிறைகாலத்து - தகுதியால் அமையுங்காலத்தில்.

3. முடிதயங்கு அமரர் - தலையில் முடிவிளங்கும் தேவர்.

4. துடிதலோகம் - அறுவகைத் தெய்வலோகத்துள் ஒன்று. ஒழிய - வறிதாக.

கௌதமபுத்தர் சுத்தோதனர்க்குப் புதல்வராய்ப் பிறப்பதற்குமுன் இருந்த உலகம் இது என்பர்

5. மாரன் - மனத்தைத் தீயவழியிற் செலுத்தி மயக்கும் தேவன்.

6. குற்ற மூன்று - காமம், வெகுளி, மயக்கம்.

7. வாமன் - புத்தன்.

8. ஏமக்கட்டுரை - இன்பத்தைப் பயக்கும் பொருளுரை.

9. எண்ணில் புத்தர்கள் - அறங்குன்றிய காலங்களிலெல்லாம் பலப்பல புத்தர்கள் தோன்றி அறம் வலியுறுத்தினர் என்பர்; அதனால் புத்தர்கள் எண்ணிலர் என்க.

பன்னிரண்டு இயல்பினதாகிய பொருள் என்றும், அவை பேதைமை முதல் வினைப்பயன் ஈறுகளுள்ளன என்றும், இவை முறையே ஒன்றிலொன்று தோன்றலும் மீளலும் உடையவென்றும், இவ்வாறு மீளமீளத் தோன்றும் இயல்பால், நால்வகைக் கண்டமும், மூவகைச் சந்தியும், மூவகைத் தோற்றமும், மூவகைக் காலமும், அப்பொருள் உடையதாகி,

குற்றமும் வினையும் பயனும் விளைந்து
[1]நிலையில், வறிய, துன்பமெனநோக்க,
[2]உலையா வீட்டிற்கு உறுதியாகி,
[3]நால்வகை வாய்மைக்குச் சார்பிடனாகி,
[4]ஐந்துவகைக் கந்தத்து அமைதியாகி,
மெய்வகை [5]ஆறு வழக்கு முகமெய்தி,
[6]நயங்கள் நான்கால் பயன்கள் எய்தி,
இயன்ற [7]நால்வகையால் வினாவிடை யுடைத்தாய்,
[8]நின்மிதி யின்றி, [9]ஊழ்பா டின்றி,
பின் போக்கல்லது பொன்றக் கெடாதாய்,
பண்ணுநர் இன்றிப் பண்ணப் படாதாய்,
யானும் இன்றி, எனது மின்றி,

1. நிலையில - நிலையில்லாதவை. வறிய - பயனில்லாதவை.

2. உலையா வீட்டிற்கு - அழிவில்லாத இன்ப வீடு.

3. நால்வகை வாய்மை - துன்பம், துன்பத்தோற்றம், துன்ப நீக்கம், துன்ப நீக்க நெறி.

4. ஐவகைக் கந்தம் - "உருவு, நுகர்ச்சி, குறிப்பே, பாவனை, உள்ள அறிவு இவை ஐங்கந்தமாவன" (மணி. 30: 189-90).

5. ஆறுவகை வழக்கு - உண்மை வழக்கு, இன்மை வழக்கு, உள்ளது சார்ந்த உண்மை வழக்கு, இல்லது சார்ந்த இன்மை வழக்கு, உள்ளது சார்ந்த இன்மை வழக்கு, இல்லது சார்ந்த உண்மை வழக்கு.

6. நயம் நான்கு - ஒற்றுமை நயம், வேற்றுமை நயம், புரிவின்மை நயம், இயல்பு நயம்.

7. நால்வகை வினாவிடை - (பின்னர்க் கூறப்படுகின்றன).

8. நின்மிதி - உண்டாக்குதல்.

9. ஊழ்பாடு - முடிவுபடுதல்.

போனது மின்றி, வந்தது மின்றி,
முடித்தலும் இன்றி முடிவு மின்றி
வினையும் பயனும் பிறப்பும் வீடும்

என்ற இவையெல்லாம் காரண மாகியது என்றும், அப் பொருளின் இயல்புகளை,

பேதைமை, செய்கை, உணர்வே, அருவுரு,
வாயில், ஊறே, நுகர்வே, வேட்கை,
பற்றே, பவமே, தோற்றம், வினைப்பயன்
[1]இற்றென வகுத்த இயல்பு ஈராறும்
பிறந்தோர் அறியின் பெரும் பேறறிகுவர் ;
அறியா [2]ராயின் ஆழ்நர கறிகுவர்

என்றும் கூறி, பேதைமை முதலிய பன்னிரண்டின் இலக்கணங்களைத் தொடங்குகின்றார்.

**பேதைமை** யென்பது யாதென வினவின்,
ஓதிய இவற்றை உணராது மயங்கி,
இயற்படு பொருளால் கண்டது மறந்து
[3]முயற்கோடு உண்டெனக் கேட்டு, அதுதெளிதல்.
..............................................

**தீவினை யென்பது** யாதென வினவின்,
ஆய்தொடி நல்லாய்! ஆங்கது கேளாய் :
கொலையே, களவே, காமத் தீ விழைவு,
உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்:
பொய்யே, [4]குறளை, கடுஞ்சொல், பயனில்
சொல்லெனச் சொல்லில் தோன்றுவ நான்கும் ;
[5]வெஃகல், வெகுளல், [6]பொல்லாக் காட்சியென்று

1. இற்று - இத்தன்மைத்து.
2. ஆயின் - ஆராய்ந்து பார்க்குமிடத்து. அறியார் நரகு அறிகுவர் என்க.
3. முயற் கோடு - முயலுக்குக் கொம்பு.
4. குறளை - கோட் சொல்லுதல்.
5. வெஃகல் - பிறர் பொருளைக் கவரவிரும்பல்.
6. பொல்லாக்காட்சி - மயக்கம்; உண்மையறியாமை.

உள்ளம் தன்னின் [1]உருப்பன மூன்றும் எனப்
பத்து வகையால்; [2]பயன் தெரிபுலவர்
இத்திறம் படரார்; படர்குவ ராயின்
விலங்கும் பேயும் நரகரு மாகிக்
கலங்கிய [3]உள்ளக் கவலையில் தோன்றுவர்;
**நல்வினை** யென்பது யாதெனை வினவின்,
[4]சொல்லிய பத்தின் தொகுதியின் நீங்கி,
[5]சீலம் தாங்கித் தானம் தலைநின்று
மேலென வகுத்த ஒருமூன்று திறத்துத்
தேவரும் மக்களும் பிரமரு மாகி
மேவிய [6]மகிழ்ச்சி வினைப்பயன் உண்குவர்;
**உணர்**வெனப் படுவது உறங்குவோர் உணர்வில்
[7]புரிவின்றாகிப் புலன் கொளா ததுவே;
**அருவுரு** வென்பது அவ்வுணர்வு சார்ந்த
உயிரும் உடம்பு மாகும் என்ப.
**வாயில்** ஆறும் ஆயுங்காலை,
உள்ளம் உறுவிக்க உறுபிடன் ஆகும்.
**ஊறு** என வுரைப்பது உள்ளமும் வாயிலும்
வேறு புலன்களை [8]மேவுதல் என்ப;
**நுகர்வே** உணர்வு புலன்களை நுகர்தல்;

1. உருப்பன - தோன்றுவன. (உருக்கொள்வன என்பது சொற்பொருள்.)

2. பயன் - மெய்ப்பொருள்.

3. உள்ளக்கவலையின் - உள்ளத்தே நீங்காத துன்பத்துடன்.

4. சொல்லிய பத்து - உடம்பிலும், சொல்லிலும், உள்ளத்திலும் தோன்றுவன என மேலேயுரைத்த பத்துக்குற்றம்.

5. சீலம் - ஐந்தென்றும், பத்தென்றும், எட்டென்றும் கூறுவர்.

கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை; காமமின்மை, கரவாமை என ஐந்து; பிறவும் இவைபோல்வன.

6. மகிழ்ச்சி - இன்பம்.

7. புரிவு - தொழில். புலன்கொளாதது - நுகரப்படாதது.

8. மேவுதல் - பொருந்துதல்.

வேட்கை விரும்பி நுகர்ச்சி [1]ஆராமை ;
பற்றெனப் படுவது [2]பசைஇய அறிவே ;
பவம் எனப்படுவது கரும [3]ஈட்டம்
தருமுறை இதுவெனத் தாம்தாம் சேர்தல் ;
பிறப்பெனப் படுவது அக் கருமப் பெற்றியின்
[4]உறப்புணர் உள்ளம் சார்பொடு கதிகளில்
காரணகாரிய உருக்களில் தோன்றல் ;
பிணியெனப் படுவது சார்பிற் பிறிதாய்
இயற்கையில் திரிந்து உடம்பு [5]இடும்பைபுரிதல் ;
மூப்பென மொழிவது அந்தத் தளவும்
[6]தாக்கு நிலையாமையில் தாம் தளர்ந்திடுதல் ;
சாக்காடு என்பது அருவுருத் தன்மை
யாக்கை [7]வீழ்கதிர் என மறைந்திடுதல்.

இக் கூறிய பேதைமை முதலியன முன்னதைப் பின்னது சார்வாகக்கொண்டு தோன்றுதலும், தோன்றியவற்றில் மீளவும் முன்போலத் தோன்றுதலும் இவற்றின் இயல்பாம். இவ்வாற்றால் கண்டம் நான்கும், சந்தி மூன்றும், தோற்றம் மூன்றும், காலம் மூன்றும் கூறுகின்றார். அவற்றின்பின் நால்வகை வாய்மையும், ஐவகைக் கந்தமும், அறுவகை வழக்கும், நால்வகை நயமும், நால்வகைப் பயனும், நால்வகை வினாவிடையும் கூறுகின்றார். வினாவிடையைக் கூறுமிடத்து,

வினாவிடை நான்குள :
துணிந்து சொல்லல், கூறிட்டு மொழிதல்,
வினாவின் விடுத்தல், வாய்வாளாமை யென ;
தோன்றியது கெடுமோ? கெடாதோ? என்றால்,

1. ஆராமை - நிரம்பாமை.
2. பசைஇய - ஒட்டிய.
3. ஈட்டம் - கூட்டம்; செறிவு.
4. உறப்புணர் உள்ளம் - மிகக்கூடிய விஞ்ஞானம்.
5. இடும்பை புரிதல் - துன்பம் செய்தல்.
6. தாக்கு - வலிமை; மேன்மையுமாம். (தாக்குந் தன்மை.)
7. வீழ்கதிர் - மறையும் ஞாயிறு.

கேடுண்டு என்றல் துணிந்து சொலலாகும்.
செத்தான் பிறப்பானோ? பிறவானோ
என்று செப்பின்,
பற்றிறந்தானோ? [1]அன்மகனோ? எனல்,
மிகக் கூறிட்டு மொழிதல் என விளம்புவர்;
வினவின் விடுத்தல், முட்டை முந்திற்றோ?
பனைமுந்திற்றோ? எனக் கட்டுரை செய்
என்றால், எம்முட்டைக்கு எப்பனை? என்றல்.
வாய் வாளாமை, ஆகாயப்பூப்
பழைதோ? புதிதோ? என்று [2]புகல்வான்
உரைக்கு மாற்றம் உரையா திருத்தல்,

இவ்வண்ணம் பேதைமை முதலிய இயல்புகளையுடைய பொருளே பற்றிக் கூறத் துவங்கி,

[3]கட்டும் வீடும் அதன் காரணத்தது;
[4]ஒட்டித் தருதற்கு உரியோர் இல்லை;
யாம் மேல் உரைத்த பொருள்கட் கெல்லாம்
காமம் வெகுளி மயக்கம் காரணம்,

என்று சொல்லி இவற்றின் குற்றத்தைக் கடிதல் வேண்டுமென வற்புறுத்தக் கருதி மணிமேகலையை நோக்கி, அந்த அறவணவடிகள்,

[5]அநித்தம் [6]துக்கம் [7]அநான்மா [8]அசுசியெனத்
தனித்துப் பார்த்துப் [9]பற்றறுத்

1. அன்மகன் - பற்று உடையவன்.
2. புகல்வான் - வினவுவோன். உரைக்கு - வினவுதற்கு.
3. கட்டு - தொடர்பு.
4. ஒட்டி - பொருந்தி.
5. காமம் - அநித்தம்.
6. காமம் துக்கம் தருவது இவ்வாறே ஒட்டிக்கொள்க
7. அநான்மா - ஆன்மாவுக்கு ஊதியம் தருவ தன்மை.
8. அசுசி - தூயதன்மை.
9. பற்று - காமம்.

[1]மைத்திரி [2]கருணை முதிதை யென்று அறிந்து
திருந்து நல்லுணர்வால் செற்றம் அற்றிடுக ;
[3]சுருதி [4]சிந்தனை [5]பாவனை [6]தரிசனை
கருதியுய்த்து மயக்கம் கடிக ;
இந்நால் வகையால் மனத்து இருள் நீங்குக.

என முன்பின் மலைவில்லாத மங்கல மொழிகளின் வாயி லாய் இந்த ஞானப்பொருளை உரைத்தருளினர். அதனால், மணிமேகலை நவத்திறம் பூண்டு தருமம் கேட்டுப் பவத்திறம் அறுக என்று நோற்பாளாயினள்.

மணிமேகலைச் சுருக்கம்

முற்றிற்று.



1. மைத்திரி - பாவனை.

2. கருணை - கருணைபாவனை ; முதிதபாவனை. செற்றம் - வெகுளி.

3. சுருதி - ஞானநூல் கே

4. சிந்தனை - சிந்தித்தல்.

5. பாவனை - பாவித்தல்.

6. தரிசனை - அறிதல்.

# கழக வெளியீடு

செந்தமிழ் மொழியிலுள்ள
முப்பெருங் காப்பியங்களில் ஒன்றாயது

# மணிமேகலை

தப்போக்கோடு தொடர்ந்த சிறந்த செய்யுட் பகுதிகளைத்
ட்டிக் கோத்து, விடுபட்ட சில கதைப் பகுதிகளையும்
ரநடையிலெழுதித் தொடர்புபடுத்தி எல்லாப் பக்கங்கள்
, தெளிவான உரைக் குறிப்புக்கள் தந்து விரிவான
ரய்ச்சி முன்னுரையோடு இந்நூல் சுருக்க விளக்கமா
இயற்றப்பட்டிருக்கிறது.